# வாழ்வில் வைணவம்

(தொகுதி இரண்டு)

ஆசிரியர் :

அமரர் திரு. நா. வேணுகோபால் நாயகர்,
பி. ஏ., பி.எல்.

பதிப்பாசிரியர் :

திருமதி பு.ஆ. கௌசல்யாதேவி
பி.எஸ்.ஸி., பி.டி



'நாராயண தனம்'' நலக்கட்டளை வெளியீடு

## பதிப்பாசிரியர் குழு :

திருமதி பு. ஆ. கௌசல்யா தேவி, பி.எஸ்.ஸி., பி.டி.

'ப்ரபன்ன வித்வான்' ஸ்ரீ எதிராஜ ராமாநுஜதாஸர்.,

திரு. வேணு. ராசநாராயணன்., பி.எஸ்.ஸி., பி.எல்.

டாக்டர் திருமதி. சுதா சேஷய்யன் எம். எஸ்.,

விற்பனை உரிமை

பா[illegible] நிலையம்
184. பிராட்வே. சென்னை. 600108

தொலைபேசி : 515561

நா. வேணுகோபால் நாயகரின்

# “வாழ்வில் வைணவம்”

(தொகுதி—2)



# என்னுரை

நான்முகனைப் படைத்த நாராயணனையே பரம் பொருளாகக் கொண்ட சமயத்தில் ஈடுபட்டு ஸ்ரீ வைணவத்தையே தன் வாழ்க்கை முறையாகக் கொண்டு வாழ்ந்த என் துணைவர் அமரர் திரு நா. வேணுகோபால் நாயகரின் ஸ்ரீவைணவச் சொற்பொழிவுகளின் வரிவடிவம் இந்நூல் ஏற்கெனவே வெளிவந்துள்ள ''வாழ்வில் வைணவம்'' முதல் தொகுதியை அடியொட்டி வெளிவரும் இரண்டாவது தொகுதி இது.

வேணு கானம் இசைக்கும் ஸ்ரீகண்ணனின் லீலா விநோதங்களில் தன்னை மறந்தவர் நா.வே.நா அவர்கள் கிருஷ்ணாவதாரத்தின் சிறப்புகளைப் பற்றி ஆய்ந்து நல்ல பல உரைகளை ஆற்றியுள்ளவர். அதே நேரத்தில், பாற்கடலுள் பையத் துயின்ற பரமனின் தசாவதாரங்களுள் பெருஞ்சிறப்பு மிக்க இராமவதாரத்திலும் ஈடுபாடு கொண்டவர். காலமும் கணக்கும் நீத்த காரணனாய், மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரமாய், தம்மையே தமக்கு நல்கும் பதமாய், அயோத்திவேந்தனாய் எழுந்தருளிய இராமச்சந்த்ரமூர்த்தியை வியந்து வியந்து தன் சொல்லாலும் எழுத்தாலும் துதித்தவர் நா.வே.நா.

கோபாலனைப் பாடினாள் கோதை; காகுத்தனைப் பாடினார் கம்பர். வெய்யோன் ஒளி தன் விரிசோதியில் மறைய, பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும் கானகம் புக்க காசில் கொற்றத்து இராமன் கதையை பல்வேறு கோணங்களில் கண்ணுற்று நுணுகி நோக்கிய நா.வே.நா. அதனைச் சொற்பொழிவாக்கி நல்குவதிலும் திறன் மிக்கவர்.

பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து, கேட்பவர்களைக் குழந்தைகளாய் எண்ணி, எழுத்தெண்ணி உரையாற்றும் வித்தகராயிருந்த அமரர் நா.வே.நா

வாழ்வில் நடைமுறையில் ஸ்ரீ வைணவக் கோட்பாடுகளைக் கடைப்பிடிப்பதில் ஈடுபாடு மிக்கிருந்தவர்; ஏன், இதில் சற்றே கண்டிப்பானவரும் கூட!

நாயகனாம் நாரணன் அவதாரம், மிதிலை வந்துதித்த. அவர்தம் திருவாட்டி பெருமை, விருத்தக்கவியில் அருத்தம் பல செப்பிய கம்பரின் மாண்பு, வாமன அவதாரத்தின் சிறப்பு ஆகியவற்றை வெளிக்காட்டும் நா.வே. நாவின் கட்டுரைகள் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

யசோதை கண்ணனின் லீலா விநோதங்கள் உண்டு.

கர்ம யோகத்தின் பெற்றி கூறும் கீதையின் பகவத்கீதா சாரத்தையும் எடுத்தியம்பும் கட்டுரையும் இதிலுண்டு.

வாழ்வில் ஸ்ரீ வைணத்தையே வாழ்க்கையாக வாழ்ந்து, காட்டிய எட்டையபுரக் கவிஞர் மகாகவி பாரதியாரின் பாடல்களிலும் ஆழங்கால் பட்டிருந்த நா.வே.நா அவர்கள் கண்ணன் பாட்டையும், பாஞ்சாலி சபதத்தையும் புதுமைப் பொலிவுபட விளக்குவதில் வல்லவர். அத்தகு விளக்கங்களும் இங்கு இடம்பெறுகின்றன. வள்ளுவர் வாக்குக்கும் வை பணவ விளக்கப்பாங்கு இதில் உண்டு.

விலங்கம் இல்லாத வைணவ வாழ்க்கை, திவ்யப் பிரபந்த அடிப்படையிலேயே அமைய முடியும் என்பதையும் வாயாரப் பேசி வந்தவர் அவர். ஆழ்வார்களின் அருளிச் செயல்களைக் கொண்டு மட்டுமே, அவற்றை வழிபற்றி மட்டுமே ஒருவர் உலகம் போற்றும் சீர்மிகு நல்வாழ்வை நடைபற்றிட முடியும் என்பது அவரின் ஆழ்நம்பிக்கை! அந்த எண்ணத்தையே தன் ஒவ்வொரு செயலிலும் பிரதிபலித்தார். எங்கள் குடும்பத்தாருக்கும் உறவினர் களுக்கும் மட்டுமின்றி, தன்னுடன் தொடர்பு கொண்ட ஒவ்வொருவருக்கும் அதையே தன் பரிசாக, ஸ்ரீ வைணவச் செயல்பாடுகளையே தன் உறவாக வெளியிட்டார்.

**வைணவம்** வைப்பு மாநிதியமாய் விளங்கும் அவரின் உரைகளைத் தொகுத்து வெளியிடவேண்டும் என்ற எங்கள் குடும்பத்தாரின் ஆவல், இதோ, இப்போது, இரண்டாம் முறையாக சீர்வடிவம் பெறுகின்றது.

வம்பவிழ் மலர்மாலை திருமகள் உடனாய திருமால் அருளால் இம்முயற்சி சிறப்பாகக் கைக்கூடியுள்ளது. அமரர் நா.வே. நாவின் வாழ்வில் வைணவம் முதல் தொகுதி ஆழ்வார்—ஆசாரிய அருளிச் செயல்கள் பற்றிய கட்டுரை களோடு வெளி வந்தது. இந்த இரண்டாவது தொகுதி கம்பர், வள்ளுவர், பாரதி ஆகியோரின் படைப்புகளையும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களின் சர்வநோக்குகளையும் குறிப்பாக நம்மாழ்வார், திருமங்கை மன்னன், ஆசாரியர் இராமாநுசரின் அமுத மொழியையும் ஸ்ரீ வைணவக் கொள்கைப்படி பொருத்துகின்றது. இக்கருத்தையே இந் நூலின் முகப்போவியமாகக் காணலாம்.

ஸ்ரீ நா. வே. நா. தோழமையோடு பழகியவர்கள் பலரிருப்பினும், அவர்களுள் குறிப்பிட வேண்டியவர்கள் திரு. சர்தார் P. M. ஆதிகேசவலு நாயகர், முன்னாள் அமைச்சர்கள் திரு. K. வெங்கடசாமி நாயுடு திரு. M. A. மாணிக்கவேலு நாயகர், முன்னாள் மேயர் திரு M. ராதாகிருஷ்ணன் பிள்ளை, திரு. A. V. கன்னையநாயுடு திரு. A. அருணசலம் ஆகியோர் ஆவர்.

இந்நூல் வெளிவரப் பலவகையானும் உதவிய உத்தமர் களை நன்றிகளோடு நினைக்கும் கடமை எனக்குண்டு. முதல் தொகுப்பிற்குச் செய்தது போன்றே இரண்டாவது தொகுப்பிற்கும் பிழை நீக்கிக் கட்டுரைகளைப் படித்துச் செம்மைபடுத்திக் கொடுத்த ''பிரபன்ன வித்வான்'' ஸ்ரீமான் எதிராஜ ராமாநுஜதாஸர் அவர்களுக்கு என் நன்றி என்றென்றும் உரியது.

நூலை அச்சிட நிதியுதவி வழங்கிய திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தாருக்கும், நூலைச் சிறப்பாக அச்சிட்டுக் கொடுத்த மூவேந்தர் அச்சகத்திற்கும் என் நன்றிகள் உரித்தாகும். முகப்போவியம் வரைந்து கொடுத்த திரு. ஜமால் அவர்களுக்கும், நூலாக்கத்தில் ஊக்கம் கொடுத்த டாக்டர். சுப்பு ரெட்டியார் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

வாழ்வில் வைணவம் இரண்டாவது தொகுதியைப் படிப்போரின் நயத்திற்கும் நல்லெண்ணத்திற்கும் நலம்சேர்க்க சமர்ப்பிக்கின்றேன். அவருடைய உயர் எண்ணங்களையும் உண்மை கருத்துக்களையும் அவருடன் மறைந்து விடாமல் கருத்துக்களை கோர்த்து ஒரு நூலாக்கிய என் மகன் திரு. வேணு ராச நாராயணனுக்கும் அவர் மனைவி திருமதி சுதா சேஷய்யனுக்கும் அவர்களின் அன்பு நண்பர்களுக்கும் என் மனமார்ந்த பாராட்டுக்கள். இந்த நூல் வெளிவர உதவிய அனைவருக்கும் மிக்க நன்றி வணக்கம்.

அன்புடன்,

பு. ஆ. கௌசல்யாதேவி

"நாராயண தனம்"
ஏ. ஜி. 43 அண்ணாநகர்,
சென்னை-600 040.
தொலைபேசி : 6211768

S. Mohan
Judge
Supreme Court of India



4, Tughlak Road
NewDelhi-110 011
Tel : 3793490

# அணிந்துரை

உயிர்கள் அனைத்திற்கும் செந்தண்மை பூண்டு ஒழுகல் தான் வைணவம். அச் செந்தண்மையை வாழ்க்கை நெறியாகக் கொண்டு வாழ்வது எவ்வாறு என்ற சீரிய கருத்துக்களைப் புலப்படுத்தும் எழில் மிக்க நூல், வாழ்வில் வைணவம் (தொகுதி-2). நூலாசிரியர் அமரர் திரு. நா. வேணுகோபால நாய்க்கர் எப்பொழுதும் இன் முகத்தோடு இருப்பார். பழகுவதற்கு இனியவர். வைணவத்தை வாழ்க்கையில் கடைப்பிடித்ததின் காரணத்தினால்! ' அவரை அன்பாக, நா.வே. நா என்று அழைப்போம். நா வேந்தனை, நா: வே. நா என்று அழைப்பது பொருத்தம் தானே?

அன்னாரின் கருத்துக் குவியல் தான் இந்நூல். பொலிவு நிறைந்த இப் புத்தகத்தில் புதைந்திருக்கும் கருத்துகள் சிந்தனையைத் தூண்டும் சிறப்பு கொண்டன. அதன் தனிச் சிறப்பு, கம்பன், வள்ளுவர், பாரதியின் கருத்துக்களை அடிப்படையாக அமைத்து நடை முறைக்கு ஏற்ப வைணவத்தை வெளிப்படுத்துவதே யாகும்.

மிதிலையிலே ஸ்ரீ ராமனைக் காணும் மக்கள் களிப்பின் மிகுதியால் திகைத்து நிற்கின்றனர். ராமனோ எழிலின் மொத்த உருவம். அவரை முழுதாய்ப் பார்த்தார் இல்லை. ஆகவே தான் கம்பன் பாடினான்!

"தோள் கண்டார்! தோளே கண்டார்!!

அந்தத் தோளின் அழகைக் கண்டவருக்கு அதற்கு மேல் நோக்க இயலவில்லையாம்! கண்கள் நகர்ந்தால் தானே? அதே போன்று தான்

"......தொடு கழல் கமலம் அன்ன
தாள் கண்டார்! தாளே கண்டார்!!"

இந்த அழகான பாடலை வைணவத்தோடு பிணைக்கிறார் ஆசிரியப் பெருந்தகை. இறைவனின் திருமேனி அழகை சேவித்த பெரியாழ்வார், இயம்புகிறார் :

"மல்லாண்ட திண் தோள் மணி வண்ணா" மிதிலையில் தோள் மாண்பு பெற்றது. இங்கேயும் திண்தோள் திகழ்ச்சி பெற்றது.

அடுத்து கண்ட தாளை வில்லிபுத்தூர் கோன் விவரிக்கின்றார்:

"மணி வண்ணா, உன் சேவடி செவ்வி திருக்காப்பு" என்ன அழகான இணைப்பு. இதுமட்டுமா? காகுத்த ராமனும் கயல் விழி சீதையும் ஒருவரையொருவர் நோக்குகின்றனர். ஆம், அண்ணலும் நோக்கினான்! அவளும் நோக்கினாள்!" இருவரும் இதயத்தால் இணைந்தனர். மிதிலை மக்கள் அனைவரும் தங்களூர் மணமகனை எண்ணி இறுமாப்பு எய்தினர். அம்மக்களின் மனப் பாங்கை உயர்வை வைணவ உள்ளப் பெருக்கோடு ஒப்பு நோக்கி விளக்குகிறார் வேணுகோபாலன்:

"கருங் கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்
பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?"

கம்ப காப்பியத்தின் முத்துக்களை நனி முத்தாய் திகழ வைக்கிறார் ஆசிரியர் பல் வேறு. பக்கங்களில் ஆறு காண்ட அழகையும் சொற்கள் சிலவற்றால், அவர் செய்யும் நயம் வைணவ நெறியோடு இழைந்திருப்பது, படிப்பதற்கும், பயின்று உணர்வதற்கும் உரியது. மூன்று தண்டனைகளைப் பற்றி விவரிக்கும் போது வழக்கறிஞரின் திறமை வெளிப்படுகிறது.

காலத்திற்கு அப்பாற்பட்ட, ஒல்காப் புகழ் பெற்ற திருக்குறளிலிருந்து வைணவக் கோட்பாடுகளைக் கோடிட்டிருப்பது ஆசிரியரின் ஆய்வுத் திறனுக்குச் சிறந்த எடுத்துக்காட்டு திருமால் கேட்ட யாசகத்திற்கு சக்ரவர்த்தி

சம்மதித்தான் சுக்கிரன் தடுக்கிறான். மாவலி கேட்கிறான் 'இதை விலக்குகிறாயே நீயும் குருவா? நற்குண மற்றவனே! நீ மட்டுமின்றி, உன் சுற்றமும் சேர்ந்து கெடும் என்று. இதற்குத் திருக்குறளை மேற் கோளாகக் காட்டுகிறார் நூலாசிரியர்:

''கொடுப்பது, அழுக்கறுப்பான் சுற்றம், உடுப்பதூ உம்
உண்பது உம், இன்றிக் கெடும்''

இந்தக் குறள் வாயிலாக, வள்ளுவர் ஆமோதித்த சாபம் என்று நியாயப் படுத்தும் ஆசிரியரின் திறன் நயமிக்க தொன்று!

பாரதி கண்ணனோடு கொண்ட காதல் கடலினும் பெரிது. தோழனாய், காதலியாய், சேவகனாய் எப்படி எல்லாம், போற்றுகிறான். நெகிழ்கிறான். அத்துணைப் பாடல்களையும் அலசிப் புதுப் பொருள் புலப்படுத்தும் ஆசிரியர் புகழுக்குறியவர் அல்லவா? பல்வேறு எழுத்துக் களையும் திறனாயும் பொழுது மண்டிக் கிடக்கின்றன வைணவ நெறிகள். ஆழ்வார் அடிகள் அருளிச் செய்த பாசுரங்களை அடித்தளமாக அமைத்து ''அகம் தரும் அருளிச் செல்வங்கள்'' என ஆக்கியிருப்பது சிறப்பு மிக்க வாழ்க்கைக்கு வழி காட்டியதாம் ''வண்ண மிக்க'' இந்நூலை படிக்கும் தோறும் இன்பம்.

இந்தப் புத்தக நாயகன், உயர் எண்ணங்களுக்குச் சொந்தக்காரர், சொற் திறன் மிக்கவர். அவர் வடிவமைத்த எழுத்துக்கள் என்றும் அவர் வல்லமையை எடுத்தியம்பும். நாட்டு விடுதலைக்கு மட்டுமின்றி, ஏட்டின் எழிலுக்கும், இலக்கியத்தின் ஏற்றத்திற்கும் பாடுபட்ட ஏந்தல் அவர்.

வாழ்வில் வைணவம் (தொகுதி-2) என்னும் இன்பச் சோலையில் நம்மையெல்லாம் மகிழ்விக்கும் அமரர் திரு நா.வே.நா அவரின் புகழ் வைணவம் போன்று என்ஞ் ஞான்றும் நிலைத்திருக்கும்! வாழ்க! அன்னாரின் நாமம்!

—ச. மோகன்

# உள் வாசல்...

# யாரோ கண்டார்

**தை**த் திங்கள் பிறந்து விட்டது—என்ன விசேஷம்? திருமணங்கள்தாம் விசேஷம்; ஒப்பற்ற தை பிறந்ததும்! 'தை பிறந்தால், வழி பிறக்கும்', என்று காத்திருந்தவர்கள் திருமண ஊர்வலம் வருகிறார்கள்.

இதோ! இந்த ஊர்வலத்தைப் பாருங்கள்! இதுதான் மிதிலா நகரத்து ராஜ வீதி! ஆம்! ஜனக மகாராஜர் தர்ம ஆட்சி செலுத்தும் பாக்கியம் பெற்ற மிதிலா நகரம்தான்! 'ஆனால், இந்த ஊர்வலத்தில் வரும் 'புள்ளி'களைப் பார்த்தால் மிதிலா நகரத்தைச் சேர்ந்தவர்களாக இல்லை' என்று தானே சொல்கிறீர்கள்? உண்மைதான்! இவர்கள் மிதிலை மக்கள் அல்லர்தான். உற்றுப் பாருங்கள்! உங்களுக்கே தெரியும்! இவர்கள் அணி நகர் அயோத்தியின் மக்கள் தான். ''தருகை நீண்ட தயரத சக்கரவர்த்தி தன் குடும்பப் பரிவார சகிதம் பவனியாக எழுந்தருளுகிறார்! இருகை வேழத்து இராகவனின்'' மாப்பிள்ளை ஊர்வலம்தான் வெற்றிச் சேனைபோல் ஜயகோஷமிட்டு முன்னேறிச் செல்கிறது மிதிலைப் பெரு நகரின் ராஜ வீதியிலே!!

ஊர்வலத்தைப் பார்க்க வேணுமென்றா துடிக் கின்றீர்கள்! ஊர்வலம் கிடக்கட்டும்! ஊர்வலத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கிடப்பவர்களையும் கொஞ்சம் பாருங்கள். இதை நான் சொல்லவில்லை! 'ரசிகக்கிரீடம்' தரித்த கவிச்சக்கரவர்த்தியான கம்பரே கூறுகிறார்! ஊர்வலத்தின் பெருமையை அறிய வேணுமானால், ஊர்வலத்தைக் கண்டு களிப்பவர்களைத்தான் காண வேணுமாம்! இதற்கு அவர்கள்தான் சரியான அளவு கோலாம்!

தயரத ராமன், கலியாண ராமனாக எழுந்தருளு கிறான்; சீதா ராமனாகக் காட்சி அளிக்கப் போகிறான். மிதிலை மக்களுக்கு ஆனந்தம் பொங்கிப் பொழிகிறது. மாப்பிள்ளை ஊர்வலத்தைப் பார்க்க வந்தவர்கள், வந்தார்கள்! நின்றார்கள்! கண்டார்கள்! கண்டார்கள், அவ்வளவுதான்! வேறு ஒன்றும் செய்யக் கூடவில்லை.

மாப்பிள்ளை ராமனின் முழு உருவத்தைக்கூடப் பார்க்கவில்லை. ஒரே அங்கத்தையும் முழுவதும் பார்த்து ஆனந்திக்க முடியவில்லை. ராமனுடைய வடிவழகு அப்படிப் பட்டது.

சிலர், இராமனின், ''தோள் கண்டார்!'' சரி, வேறு என்ன கண்டார்கள்? வேறு அல்ல; வெறும் ''தோளே கண்டார்!''

இவர்கள் இருக்கட்டும்; இந்தப் பக்கம் இன்னொரு கூட்டம். இந்தக் கூட்டம் எதைப் பார்த்துக் கிடக்கிறது?

இவர்கள், இராமனின், ''தாள் கண்டார்!'' திருவடி களைப் பார்த்தார்களாம்! பார்த்தவர்கள் என்ன செய் தார்கள்? ''தாளே கண்டார்.''

என் அப்படித் திருவடிகளையே நோக்கிக் கொண் டிருந்தார்கள்? சாதாரண திருவடிகள்தாமா, அவை தாமரை மலர்களே மலர்ந்த மாதிரி அழகு சொட்டுகின்ற

திருவடிகள் அல்லவா அவை! அதனால்தான் தாமரைக்கு நிகரான அம்மலர் புரையும் திருவடிகளைப் பார்த்தபடியே இருந்தார்கள்!

**''கமலம் அன்ன**
**தாள் கண்டார்! தாளேகண்டார்''**

அழகு மட்டுமா காணப்படுகிறது அத்திருவடிகளில்! வீரமும், வெற்றியும் அல்லவா பின்னிக் கிடக்கின்றன; வீரத்திற்கும் அதன் விளைவான வெற்றிக்கும் சின்னமான கழல்கள் அல்லவா! அதனால்தான் வேடிக்கை பார்க்கிறார்கள் ஜனங்கள் இமை கொட்டாமல்.

**''தொடுகழல்கமலம் அன்ன**
**தாள் கண்டார், தாளேகண்டார்!''**

இராமன் திருவுருவை, மேல் இருந்து பார்க்க ஆரம்பித்தவர்கள் மேலேயே பார்த்து நின்றார்கள். அடியிலிருந்து பார்த்தவர்கள் அடிகளையே கண்டு நின்றார்கள். இடையில் பார்த்தவர்களோ! தன்னுடைய திருக்கைகளை ஒய்யாரமாக மடியிலே வைத்தபடி வீற்றிருக்கின்றான் மாப்பிள்ளை ராமன். இந்தக் கைகள் விசாலமான கைகள்; எந்தக் காரியத்தையும் சாதிக்கும் இராமனின் இப்படியான தடக்கை கண்டாரும் என்ன செய்தார்கள் தெரியுமா? மேலே குறித்த இரு சாராரையும் போல், ''கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே'' என்று அக்கைகளையே பார்க்கும் நிலையில் இருந்தார்களாம்!

''தடக்கை கண்டாரும், அஃதே!' இந்த ஊர்வலத்தில் நடு நாயகமாக எழுந்தருளிய இராமனின் உருவத்தில் ஒரு அங்கத்தைப் பார்த்து, அந்த அங்கத்தின் அழகையே ரசித்து நின்றவர்கள், தங்கள் கண் பார்வையின் குறைவின் காரணமாக வேறு அங்கத்தைப் பார்க்க முடியாமல் தவித்தார்களா? எண்ண முடியுமா அப்படி?

பார்வையின் வீச்சிலே வெட்டி வீழ்த்தும் கூர்மையும், வசீகரிப்பும் கொண்ட கண்களைக் கொண்டவர்கள்தாம் பார்த்துப் பார்த்து ஒன்றிலேயே ஒன்றிப்போய் பிரமித்து நின்றவர்கள்! இந்தக் கண்களை, வாள்கள் என்றே சொல்லி விடலாம்! எனவே தான், அவர்கள். ''வாள் கொண்ட கண்ணார்'' ஆனார்கள் இத்தகைய வாள் கொண்ட கண்ணார் பங்கு போட்டுக்கொண்டு ஒவ்வொரு அங்கமாகப் பார்த்தார்களே, அப்படியாவது அந்த சுந்தர ராமனின் வடிவழகை முற்றும் பார்த்து விட்டவர்கள் ஒருவரும் இல்லையாம், அந்த வாள் கொண்ட கண்ணார் கூட்டத்தில்!

**''வாள் கொண்ட கண்ணார் யாரே**
**வடிவினை முடியக் கண்டார்!''**

இப்படியும் தோற்க முடியுமா இராமனின் வடிவழகைக் காணும் முயற்சியில் என்று சந்தேகப் படுகிறோம் அல்லவா? சந்தேகமே வேண்டாம், ''இதுதான் முடிவு'' என்று கவிச் சக்கரவர்த்தியே நம்மைச் சமாதானப் படுத்துகிறார்.

அநாதிகாலமாக சமய அறிவு ஒரு காரியத்தைச் செய்து வருகிறது. இன்று வரை அந்தக் காரியம் பூர்த்தியாகவு மில்லை; அந்த முயற்சி இன்னும் வெற்றி அடையவும் இல்லை. அந்த முயற்சிதான் இறைவனின் முழுத் தன்மையையும் அறிந்து விடுகிற காரியம். எனவே மிதிலை நகரின் ''வாள் கொண்ட கண்ணார்'', இராமனின், ''வடிவினை முடியக் காணாமல்'' தவித்ததைப் பார்த்தால், யாரைப் போன்று காணப்பட்டார்கள்? கம்பர் கஷ்டப் படாமல் கூறுகிறார்,

**''ஊழ் கண்ட சமயத்து, அன்னான்**
**உருவு கண்டாரை ஒத்தார்!''**

அருமையான உதாரணம்.

உதாரணம் அருமையானதுதான்! இறைவனுடைய முழு வடிவழகை, ஊழி ஊழியாக வளர்ந்து வரும் சமயமும் முடிவாக அறியவில்லை என்பதை வேண்டுமானால் ஒப்புக் கொள்ளலாம். ஆனால், 'ராமனாகிய மனித உருவை, அதிலும் அவ்வுருவில் அமைந்துள்ள அங்கங்களைப் பார்த்து முடிப்பதற்கு 'வாள் கொண்ட கண்ணார்' தவித்தார்கள்'' என்று சொன்னால் அதைச் சுலபமாக நம்ப முடியாமல் இருக்கிறதே! ஏதோ உணர்ச்சி வசப்பட்டு, அதிகமாக அளந்து கொண்டிருப்பதாகவும் காணப்படுகிறது. கம்பர் அப்படிச் செய்யக் கூடுமா? கவிச் சக்கரவர்த்தியான கம்பர், சாதாரணச் சீட்டுக் கவி விடும் புலவர்களைப் போல், பொருத்தமில்லாத புகழ்ச்சியில் ஈடுபட்டு, இப்படி சுவையற்றதாகிக் காணப்படும் நிகழ்ச்சிகளையும், உதாரணத்தையும் தீட்டியிருப்பாரா என்ற சந்தேகமும் கூடவே ஏற்படுகிறது. இதைச் சற்றேனும் சிந்திப்பது அவசியமல்லவா?

''நீங்கள் இதைச் செய்ய முடியுமா?'' என்று நண்பரைக் கேட்கிறோம். இது என்ன பிரமாதம்! இது என்ன கம்ப சூத்திரமா? என்று நண்பர் நம்மைக் கோபமாகத் திரும்பிக் கேட்கிறார்? எனவே, ''கம்ப சூத்திரம்'' என்பது செய்வ தற்கு அரிய செயல்'' என்று தெரிகிறது. கவிகளுக்குள் செயற்கரிய செய்யும் பெருமை நமது கவிச் சக்கரவர்த்திக்கே உள்ளது. மற்ற புலவர்களிடம் கவிச் சித்திரம் காணலாம். ஆனால், கம்பர் ஒருவரிடமே கவிச் சித்திரத்துடன் கவிச் சூட்சுமமும் காணலாம். கம்பருடைய பெயரைத் தவிர மற்ற கவிகளுடைய பெயர்களை இணைத்து அவர்களுடைய சூத்திரம் என்று சொல்லுவதில்லை; யாரும், எங்கும் சொல்லுவதாகவும் தெரியவில்லை. முரண்பாடு போல் தெரியும் இப்பாடலுமே, கம்ப சூத்திரம் நன்கு மிளிரும் பாடல்தான்.

இராமனுடைய தோள் கண்டவர் ஏன் தோளையே பார்த்து வியந்து கிடந்தார்கள்? தாள் கண்டாரும் தடக்கை

கண்டாரும் அவ்விதமே அதிசயித்துக் கிடந்தது ஏன்? ஏனென்ற கேள்விகளுக்குள் ஏதோவொன்று இருக்கவேண்டு மல்லவா? அதுதானோ கம்ப சூத்திரம்?

விச்வாமித்திர முனிவருடன் இராம லஷ்மணர்கள் மிதிலா நகரம் வந்த போதே அவ்வூர் மக்கள் மனம் கவரப் பட்டனர்;

ஜனக மகாராசரது சபைக்கு எழுந்தருளி சிவதனுசை முறித்த அதிசயத்தையும் கண்டனர் அந்நகர மாந்தர். தொடர்ந்து, சீதையை மணம் புரியும் இம்மாப்பிள்ளையின் வீரதீரச் செயல்களை எல்லாம் அறிந்து ஆனந்தமும் பெருமையும் அடைந்தனர்.

இவ்வண்ணம் தங்களூர் மாப்பிள்ளையான இராமனைப் பற்றி அறிந்து கொண்ட சேதிகளில் மூன்று நிகழ்ச்சிகள் மகத்தானவையாகும். இந்த மாபெரும் முச்செயல்களைச் செய்து முடித்தவை அந்த மாப்பிள்ளையின் மூன்று திரு அங்கங்களாகும். அவற்றைச் சரியாகப் பார்த்துக் களிக்க வேண்டுமென்று தவித்திருந்தார்கள் மிதிலை மக்கள்; தங்கள் விழிகளை வாள் கொண்ட கண்களாக மாற்றிக் கொண்டும் காத்திருந்தார்கள். கூர்மையும் பிரகாசமும் கொண்டு துடித்துக் கொண்டிருந்தன, அந்தக் கண்கள், இராமனின் புகழ் பொருந்திய அங்கங்களைச் சேவிப் பதற்காய்.

அந்த அங்கங்கள் யாவை? அவை அடைந்த புகழ் என்ன? தாடகை என்னும் அரக்கியின் கூட்டத்தால், மக்களும் முனிவர்களும் பல காலம் பற்பல துன்பங்களை அநுபவித்துக் கொண்டிருந்தார்கள். இதற்கு முடிவே இல்லாமல் இருந்தது. இந்தத் தாடகை விச்வாமித்திர முனிவரின் பெரு வேள்வியைக் கலைப்பதற்கு வந்த சமயம் அவளைக் கொன்று ஒழித்தன இராமனது தோள்கள். கரிய செம்மலான இராமனது தோள்களால் ஏவப்பட்ட கடிய வேகச் சுடுசரம், அல் ஒக்கும் நிறத்தளான தாடகை யின் வயிரக் குன்றக் கல் ஒக்கும் மார்பில் தைத்துப்

புல்லோர்க்கு நல்லோர் சொன்ன பொருள் என நெஞ்சில் தங்காது போயிற்றாம்! எனவே, இந்த தீரச் செயலைப் புரிந்த வீரத்தோள் கண்டார், அத்தோளே கண்டார்.

இராமனின் வேறு அங்கத்தில் கண்ணை மாற்ற இயலாமல் தவித்தார்கள் தோளைப் பார்த்தவர்கள்! தாடகையை வதம் செய்த பெருமையையும், அருமையையும் நினைந்து, நினைந்து, நெகிழ்ந்து, நெகிழ்ந்து, பரந்து, பரந்து அவற்றைப் புரிந்ததற்குக் காரணமான தோள்களைப் பார்த்துப் பார்த்து, அதே செயலாகவே கிடந்தார்கள்!

இன்னொரு அதிசயத்தையும் இராமன் புரிந்ததாகக் கேள்விப்பட்டார்கள் மிதிலை மக்கள். முன்னையதைவிட இதுவே பெரிய காரியம் என்பது ஒரு பிரிவினரின் எண்ணம். தீவினை நயந்து செய்த தேவர் கோன் செய்கையால் அநியாயமான பழியும், சாபமும் ஏற்பட்டு விட்டது பத்தினியான அகலிகைக்கு. கவுதம முனிவரின் சாபத்தால் கல்லாகிக் கிடந்தாள். இந்த பரிதாபத்தை மக்களால் சகிக்க முடியவில்லை. இதற்கு விமோசனம் ஏற்பட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டே இருந்தார்கள். நெஞ்சினால் பிழைப்பிலாத உத்தமியான அகலிகையும் முக்கணான் அனைய ஆற்றல் முனிவன் தந்த சாபம் நீங்கித் தன் முன்னுருவை அடையப் பெற்றது, தாடகையை வதம் செய்து தழைத்து வண்டு இமிறும் தண்தார் (ஜயமாலை) அணிந்து வந்த தசரத இராமனின் கால் துகள்பட்ட பெருமையினால்தான்! எனவே, இந்த அஞ்சன வண்ணத்தானின் அடிகளைக் காண்பதற்குத் துடித்துக் கொண்டிருந்தார்கள் ஒரு சாரார்!

மாப்பிள்ளைக் கோலத்தில் இராமன் எழுந்தருளிய சமயம் இவர்கள் அவனுடைய தொடு கழல்கமலம் அன்ன தாள் கண்டார்! பிறகு வேறு ஒன்றைப் பார்க்க மனம் வருமா? எனவே தாளே கண்டார்.

இச்சம்பவங்கள் யாவும் தூரதேசங்களில்நடந்தவையே! மிதிலை மக்கள் பார்த்ததில்லை. கேட்டதோடு சரி! இவற்றில் அவர்களுக்கு ஏதும் தொடர்பு கிடையாது. ஆனால் மூன்றாவதாக நடைபெற்ற நிகழ்ச்சி இவற்றுக்குச் சிகரம் வைத்தது போல் அமைந்து விட்டது. அது வெறும் நிகழ்ச்சியல்ல. மிதிலை மக்களுடைய வாழ்க்கையிலே, 'மகிழ்ச்சிப் பொங்கலையே' உண்டாக்கி விட்டது. இதுவே சீதையின் திருமணமாகும்!

'சிவ தனுசை ஒடிக்கிறதாவது! சீதைக்கு மணம் முடிக்கிறதாவது!'' என்று மிதிலை மக்கள், மனம் ஏங்கிக் கொண்டிருந்தார்கள். நல்ல காலமாக இராமனான மாப்பிள்ளையும் கிடைத்தான். ''வள்ளல் (அவனும்) மணத்தை மகிழ்ந்தனன் என்றால், ''கொள்'' என முன்பு (சீதையை கொடுப்பது அல்லால்) (ஜனகனான) வெள்ளை மனத்தவன் வில்லை எடுத்து, இப்பிள்ளைமுன் இட்டது பேதைமை'' என்று, மிதிலை மக்கள் அங்கலாய்த்துக் கொண்டிருந்தார்கள். அதிருஷ்டம் அடித்தது இவர்களுக்கு. போர் ஏறு போன்ற இராமனும் அந்நெடுஞ்சிலையை நோக்கினான். பொழிந்த நெய் ஆகுதி வாய்வழி பொங்கி எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தான். அச்சமும், ஆச்சரியமும் கலந்த மனத்துடன், மிதிலை மக்கள் என்ன நடக்குமோ என்று தடுத்து இமையாமல் இருந்தார்கள். இப்படி இருந்தும் இராமன் சிவவில்லைக்காலால் தரையில் ஊன்றிக் கொண்டு வளைக்க முற்பட்டதைக்கூடச் சரியாகக் கவனிக்க முடியவில்லையாம்.

''கடுப்பினில் (வேகத்தினில்) யாரும் அறிந்திலர்! ஏன்? இராமன் வில்லைக் கையால் எடுத்தது கண்டனர், இற்றது கேட்டனர்!''

பார்ப்பதற்குள் அந்த கவனத்தைக் கலைத்து விட்டது வில் முறிந்து ஒடிந்தபோது எழுந்த ஓசை!

இப்படியாக நேரில் பார்த்துக் கொண்டிருந்தபோது, ஏற்பட்ட ஓசையால் கலைக்கப்பட்ட கண்கள், தாளைப் பார்க்க வேண்டும் என்றும், தோளைப் பார்க்க வேண்டும் என்றும் துடித்துக் கொண்டிருந்தவர்களுடைய கண்களைப் போல் சிவ தனுசை முறித்த அந்த கைகளையும் காண வேணும் என்றே துடித்துக் கொண்டிருந்தனவாம்! அதனால்தான் கவிச்சக்கரவர்த்தி கூறுகின்றார்.

**"தடக்கை கண்டாரும் அஃதே"**

அதே கைகளை மறுபடியும் பார்த்த பிறகு, மற்றவை களையா பார்ப்பார்கள் மிதிலை மக்கள்!

இராமனைப் பார்த்து வியந்து கொண்டிருந்த சாதாரண மக்களின் கண்களைச் சித்தரிக்கும் கம்பர் பெருமான், இப்பாடலின் கடைசியில் சதாகாலமும் சர்வேச்வரனான இறைவனின் பெருவடிவைக் காணும் சமயத் தலைவர்களுடைய மனக்கண்களையும் சம்பந்தப் படுத்துகிறார்! மகாவீரன் ஒருவனைக் கண்டால், அவன் புரிந்த செயல்களை எண்ணி எண்ணி, அவைகளைச் சாதித்த அவனுடைய அங்கங்களையும், அவைகளின் வலிமை வண்ணங்களையும், தனித்தனியாகக் கண்டு களிப்பதை நாம் சரியாக அறிந்து கொள்ள வேணும் என்பது கவிச்சக்கரவர்த்தியின் நோக்கம்.

எனவே, சமயத் தலைவர்களுடைய மனக்கண்ணை நமக்கு நினைவு படுத்துகிறார். பல காலமும் சமயத்தின் தலை நின்றவர்கள் செய்கிற காரியம் என்ன? இறைவனின் பெருவடிவை, அங்கம் அங்கமாக, அவன் பெருமைகளை விளக்கும் அவைகளை அநுபவித்துச் சுவைத்துக் கொண்டு இருக்கிறார்கள் அல்லவா? "நீ நீலாய வண்ணம் நின்னை யாவர் காணவல்லரே" என்றல்லவா கண்டு வியக் கின்றார்கள்! இப்படித்தான் மிதிலை மக்களும், சிவ தனுசை முறித்து, சீதையை மணம் புரியவந்த இராமனைத் தங்களுக்கு விமோசனம் அளித்த கடவுளாகவே போற்றி அவ்வண்ணத்து அவன் நிலைமை கண்டும் அவன் உருவில்

அமைந்த அங்கங்களைத் தனித்தனியாக முழுவதும் கண்டு களிக்க முடியாமல் தவித்தார்களாம்! எனவே மிதிலை மக்கள்,

**''ஊழ் கொண்ட சமயத்து அன்னான்
உருவு கண்டாரை ஒத்தார்!''**

''பல் ஊழிக் காலமாக வளர்ந்து வரும் சமயத்தின் தலைவர் யாராவது இறைவனைக் கண்டபோது, இப்படி அநுபவித்தது உண்டா? இறைவனது அங்கங்களையும் இந்த வரிசையிலேயே அநுபவித்தார்களா?'' என்றெல்லாம் நமக்கு அறிய ஆவல் எழலாம்.அந்த ஆவல் அடிப்படையைத் தேடினால்...

''எண்ணும் திரு நாமம் திண்ணம் நாரணமே'' என்ற பேருண்மையை அறிய வேண்டிய வேதங்கள் ஓதி, விரைந்த கிழி அறுத்த,—பட்டர் பிரான் வந்தான்'' என்று ஈண்டிய சங்கம் எடுத்து ஊதப் (ஸ்ரீவல்லப தேவப்) பாண்டியன் கொண்டாடினான். யானை மீது பவனியாக மதுரை வீதியிலே எழுந்தருளப்பட்ட பெரியாழ்வாருக்கு இறைவன் கருடாழ்வான் மீது அமர்ந்த திருக்கோலத்தில் சேவை சாதித்தானாம்! இறைவனுடைய திவ்யத் திருமேனி யழகைச் சேவித்த பெரியாழ்வார், ''இந்த மகாசுந்தரமான திருமேனிக்குக் கண்ணெச்சில் பட்டதே,'' என்று பிரமித்துப் பல்லாண்டு பாட ஆரம்பித்தாராம்!

''பல்லாண்டு பல்லாண்டு பல் ஆயிரத்தாண்டு பலகோடி நூறு ஆயிரம்''என்று திருப்பல்லாண்டு பாட ஆரம்பித்ததும் இறைவனும், ''ஆழ்வீர்! நமக்கு தீங்கு வரும் என்றா பல்லாண்டு பாடுகிறீர்; நாமென்ன அப்படி பலம் இல்லாதவரா! இதோ பாரும்? நாம் கிருஷ்ணாவதாரம் எடுத்தபோது மல்லர்களைக் கம்சன் முன்பேயே கொன்று வீழ்த்தின நம் தோள்கள்!'' என்று தன் திருத்தோள்களைக் காண்பிக்கவும், தென் புதுவைப் பட்டரும், மேலும், 'மல்லாண்ட திண்தோள் மணி வண்ணா'' என்று

பாடியதால் முதலாவதாகப் பார்த்த இறைவனுடைய அங்கம் அவனுடைய மல்லாண்ட தோள் என்றே கொள்ள வேணும்! மிதிலையிலே முதலில் தோள் கண்டு குதூகலித்த மக்கள் போலவே!

இறைவனது தோளைப் பார்த்துக் களித்துக் காப்பிட்ட வித்தகரான விஷ்ணு சித்தர் அடுத்தபடி அநுபவித்த அங்கம் சேவடிகளே!

'மணி வண்ணா! உன் சேவடி செவ்வி திருக்காப்பு'

மிதிலை மக்களைப் போல முதலில் தோளைக் கண்ட வில்லிபுத்தூர்கோன் அடுத்தபடி கண்டது தாளைத்தான்.

அடுத்தபடி மேலும் பார்க்கலாம். "இறைவனே! அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு" என்றும், "வடிவாய் நின் வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்றும் வேயர் தங்கள் குலத்து உதித்த பெரியாழ்வார் பாடியபடி மிதிலை மக்கள் பாட முடியாது. இவர்கள் தங்களை மறந்து இராமனது அங்கங்களைச் சேவித்தார்கள். திருஷ்டி கழிக்கத் தோன்றவேயில்லை! இன்னும் கௌசல்யா ராமன், சீதா ராமனாகி விடவில்லை. அதனால் சீதையைச் சேர்த்தும் பார்க்கவில்லை; மிதிலையில், தோளையும் தாளையும் பார்த்துக் களித்தவர்கள் தடக்கை கண்டு மகிழ்ந்தார்கள். மெய்நாவலருடன் மெய்யடியாருமென பெரியாழ்வாரும், முதலில் மல்லாண்ட தோளையும், பிறகு சேவடியின் செவ்வியையும் சேவித்துத் தரிசித்தப் பிறகு, கடைசியாக இறைவனின் திருக்கைகளையும் அவைகள் ஏந்தியிருக்கும் திவ்ய ஆயுதங்களையும் தரிசித்து மகிழ்ந்தார்!

**'வடிவார் சோதி வலத்து உறையும் சுடர்**
**ஆழியும் பல்லாண்டு!**
**படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்யமும்**
**பல்லாண்டு,**

என்று மிதிலையிலும், மதுரையிலும் நடந்த நிகழ்ச்சிகளும் நிகழ்ச்சி வரிசைகளும் ஒத்திருக்கும் அழகு ஆச்சரியமாக இருக்கிறது.

மிதிலை நகர மக்கள் கல்யாண ராம ஊர்வலத்தை அநுபவித்து ஆனந்தத்தில் மூழ்கியிருந்ததை விவரித்து வந்த கம்ப நாட்டாழ்வார், இவர்களை சமயத்துறையில் ஊழிக் காலமாகப் படித்து இறைவனைக் காண முயன்றுவரும், சாது கோட்டியிலேயே வைத்து விடுகிறார். ஊழ்கண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரையே ஒத்திருந்தார் களாம். இப்படி ஒப்பிடுவதனால் மேலும் சில ரகசியங் களையும் கவிச்சக்கரவர்த்தி நம்மை உணரச் செய்கிறார்.

ஞானிகளுக்கு இறைவனுடைய திருமேனியைச் சேவிக் கும்போது ஆழ்ந்த கருத்துக்கள் மனதில் தோன்றுகின்றன. அவைகளின் அடிப்படையில் இறைவனுடைய திருமேனியை யும், அதில் அமைந்துள்ள அங்கங்களையும் அநுபவித்து அநுபவித்து, அந்த அநுபவத்திலேயே ''என் அமுதினைக் கண்ட கண்கள் மற்று ஒன்றினைக் காணாவே!'' என்று ஆழ்ந்து விடுவார்கள். 'பத்துடை அடியவர்க்கு எளியவனும், பிறர்களுக்கு அரிய வித்தகனும், மலர் மகள் விரும்பும் நம் அரும் பெறல் அடிகளுமான இறைவன், மத்துறு கடை வெண்ணெய் களவினில் உரவிடை ஆப்புண்டு, உரலினோடு இணைந்து இருந்து ஏங்கிய எளிவு எத்திறம்!' என்று நினைந்து நினைந்தே நம்மாழ்வார் ஆறு மாதம் மோகித்துக் கிடந்தாராம்! இறைவனுடைய சுந்தரமான திருமேனியும், தாம்புக் கயிற்றினால் கட்டுண்ணப் பண்ணிய அவனது இடையும்,எளிவையும்,பெருமாயத்தையும் அறிவித்தனவாம் அவாவற்று விடுபெற்ற குரு கூர்ச் சடகோபருக்கு!

இங்கே மிதிலையிலே இறைவனாகவே கண்டார்களாம் இராமனையும்! ஏன்? இராமனது அங்கங்களும் இறைவனது பெருந்தன்மைகளையே வெளியிட்டுப் பிரகாசித்தனவாம்.

**'தாடகையை வதம் செய்த இராமனுடைய**
**தோள் கண்டார்! தோளே கண்டார்!' ஏன்?**

இராமனுடைய திருத் தோள்களிலே இறைவனுடைய துஷ்ட நிக்ரக லீலையையே கண்டார்களாம்! அடுத்தபடி கண்ணன் என்னும் மல்லாண்டதிண் தோளனாகவும் தற்போது இராமன் என்னும் தென்னிலங்கைக் கோமானைச் செற்று வீழ்த்த வந்துள்ள மனத்துக்கு இனியவனாகவும் வந்தவன் துஷ்ட நிக்ரகத் திருப்பணியை மேற்கொண்டு வந்த இறைவன்தானே!

அகலிகைக்குச் சாப விமோசனம் அளித்ததொடு கழல் கமலம் அன்ன தாள் கண்டார்! தாளே கண்டார்! ஏன்? துஷ்ட நிக்ரகம் புரியக் கூடிய தோள்களை (ஆழ்ந்த ஞானக் கருத்துக்களுடன்) சேவித்தவர்களுக்குத் தாள்களைச் சேவித்தவர்களும் தோற்கவில்லையாம். சிஷ்ட பரிபாலனம் செய்யும் இறைவனின் கல்யாண குணத்தையே அத்தாள்களில் காணவும், அவை. 'தொடு' கழல் கமலம் அன்ன தாள்களாக அவர்களுக்குச் சேவை தந்தனவாம்! வீரக்கழலுடன் தாமரை போன்று காணப்பட்ட அத்தாள்களைக் கைகளால் தொட்டே அநுபவிக்கத் தோன்றிற்றாம்.

விச்வாமித்திர முனிவன் தன்னுடன், "கரிய செம்மல் (இராமனை) ஒருவனைத் த திடுதி" என்று தசரதச் சக்ரவர்த்தியிடம் அடம் பிடித்ததன் ரகசியம் இப்போது வெளிப்படுகிறதல்லவா? இறைவன் ராமனாகப் பிறந்தது அயோத்தியில் தொட்டிலில் கிடக்க அல்ல! துஷ்ட நிக்ரகமும் சிஷ்ட பரிபாலனமும் செய்து உலகை வாழ்விக்கவே! இதனால்தான் இந்த அவதாரத்தில் இவைகளை இராமனுக்குக் 'கற்றுத்தர'த்தான் அயோத்தியிலிருந்து மிதிலை வரை வந்து ஒட்டிக் கொள்ளுகிறார் விச்வாமித்திர மகா முனிவர்.

அரசனுக்கும், ஆண்டவனுக்கும் 'இறைவன்' என்றே பெயர்: இருவரும் துஷ்ட நிக்ரகமும், சிஷ்ட பரிபாலனமும் செய்வதைக் கடமையாக ஏற்பதாலே. துஷ்ட நிக்ரகமும், சிஷ்ட பரிபாலனமும் நன்கு கற்றுத்தேர்ந்த சக்ரவர்த்தித்

திருமகனான இராமன் மிதிலையை அடைகிறான் சீதையைத் திருமணம் புரிய! ஆனால் இது என்ன வெறும் சுண்ணாம்புக் கட்டடங்களும், சோலைகளும் சூழ்ந்த சாதாரண நகரமா மிதிலையும்! செங்கண் ஐயனான ராமனைத் தன்னைச் சரியாகப் பார்த்துப் புரிந்து கொள்ளும்படி அழைப்புக் கொடுத்ததாம் மிதிலை! செழுமணிக் கொடிகள் என்னும் கைகளை நீட்டித்தான் அழைப்புத் தந்தது மிதிலை. அந்த அழைப்பிலே மிதிலை மாநகரம் 'மையறு மலரின் நீங்கி யான் செய் மாதவத்தின் வந்து செய்யவள் (இலக்குமி) இருந்தாள்' என்னக் குறிப்பால் உணர்த்தித் திருமணம் புரிந்து கொள்ளவே அழைத்ததாம்! இப்படிச் சீதையைத் தருதலாலே 'திருமகள் இருந்த செய்ய போது (சிவந்த தாமரை) எனப் பொலிந்து தோன்றியது பொன் மதில் மிதிலை. இலட்சுமியே வந்து தன்னைப் பிறப்பிடமாகக் கொண்டு விட்டால் நகர மதில்தானா பொன்னாகாது!

தோள் கண்டார் தோளே காணும்படியாகவும், தொடு கழல் கமலம் அன்ன தாள் கண்டார் தாளே காணும்படியாகவும், பொன் மதில் மிதிலை புக்க சுந்தர ராமனுக்குச் சீதையும் தோற்றுவிட வில்லையாம்! ஆதரித்து, அமுதில் கோல் தோய்த்து, ''அவயவம் அமைக்கும் தன்மை யாது?'' எனத் திகைக்கும் அல்லால் மதனற்கும் (மன்மதனுக்கும்) எழுத ஒண்ணாச் சீதையல்லவா இவள்! எனவே ''இராமனுக்கு துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலன யோக்யதைகள் மட்டும் போதாது. இன்னும் ஒரு யோக்யதாம்சமும் வேணும் என்னை மணந்து கொள்ள'' என்று லட்சுமியின் அவதாரமான சீதையும் ஒரு நிபந்தனையை ஏற்படுத்தினாள். 'இராமன் மக்களில் சிலரை துஷ்டர்கள் என்றும், சிலரை சிஷ்டர்கள் எனறும் பேதம் காட்டிப் பிரித்து, துஷ்டர்கள் என்று பெயர் சூட்டப்படுபவர்களை நிக்ரகம் செய்வதை என்னால் ஏற்க முடியாது. நான் சகலருக்கும் தானே தாய்.

எனவே என் மக்களில் ஒரு சிலரைத் தண்டிப்பதை நான் சகிக்க முடியாது. என் மனப்படி நடக்க ஒப்புக்கொள்

வதானால், சங்காரக் கடவுளான சிவனின் ஆயுதமான இந்த வில்லை எல்லோரும் அறியும்படி எங்கள் சபையிலே வந்து, முறித்துப் போட்டு, இனி என்னைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு யாரையும் கொல்வதில்லை' என்று காட்ட வேண்டும்! என்பதுவே அந்த நிபந்தனை. 'அன்று சராசரங்களை வைகுந்தத்து ஏற்ற' வந்த இராமனும்,இந்த நிபந்தனையையும் ஏற்றுக்கொண்டு சங்காரத்தின் சின்ன மான அந்த வில்லையும் 'ஏடவிழ் மாலை ஈதென்ன எடுத்து' முறித்துப் போட்டானாம் தன் தடக்கையினாலே. எல்லோரையும் அன்பாக நடத்த விசாலமான மனம் வேண்டும். எவரையும் துஷ்டர்களாக மதித்துக் கொல் லாமல் இருப்பதற்கு 'விசாலமான' கையும் வேண்டு மல்லவா? இப்படியாகத் தங்கள் 'கல்யாணப் பெண்' ஏற்படுத்திய கட்டளையை நிறைவேற்றவும், துஷ்டர்களை யும் 'அவள் தன் அழகாலே திருத்தினபடி' ரட்சிக்கவும் இராமன் தயாரானதைக் கண்ட மக்களும், தோள் கண்டா ரைப் போன்றும், தாள் கண்டாரைப் போன்றும் அவன் தடக்கைகளையே கண்டு ஆனந்தித்தார்களாம்!

'தடக்கை கண்டாரும் அஃதே'. இதனால்தான் 'இவள் சந்நிதியாலே காகம் தலை பெற்றது, அது இல்லாமையாலே இராவணன் முடிந்தான்' என்று பெரியோர்கள் கூறு கின்றார்கள்.

மக்களிடையே காணப்படும் குணங்களை மூன்றாகப் பிரித்தார்கள் ஞானிகள். ரஜோ குணம் என்பது தீய குணம், தமோ குணம் என்பது தீயதும்,நல்லதும் இணைந்த குணம். சத்வ குணம் என்பது நல்ல குணம்.

இங்கு மிதிலை மக்கள் இராமன் பவனியாக வந்த போது, இம் முக்குணங்களில் இரண்டைப் போக்கி சத்வ குணத்தைக் காக்கும் சாயலைக் கண்டார்களாம்.

தீய ரஜோ குணத்தின் சின்னமாக இருந்த தாடகையை வதம் செய்த இராமனின்,

**'தோள் கண்டார்! தோளே கண்டார்!!'**

ரஜோ குணத்தை இறைவனைப் போல் இராமனும் ஒழித்து விடவே பவனி வருகிறானாம்! இதைவிட வேறு காட்சி வேணுமா மக்களுக்கு!

தீயது கலந்து விட்டது, நல்ல உத்தமியான அகலிகையின் வாழ்விலே. எனவே அவள் தமோ குணத்தின் சின்னமாகிவிட்டாள், அவளிடம் இருந்த தீய வடுவைப் போக்கி, சுத்த பாத்திரமாக்கினான் இராமன் தன் திருவடிச் சேர்க்கையாலே! தீயதும், நல்லதும் கலந்த வாழ்க்கையே பெரும்பாலும் மக்களிடம் காணப்படுவது. இவர்கள் தங்கள் வாழ்க்கையில் தீயது கலந்துவிட்ட காரணத்தால், நம்பிக்கை இழந்து மேலும் தீயதுடனே சம்பந்தப்பட்டுக் கிடக்க வேண்டியதில்லை; இறைவனின் திருவடித் தாமரைகளை அடையப் பெற்றால், அவன், செயல் நன்றாகத் திருத்திப் பணி கொள்வானாம்! ''கள்வனேன் ஆனேன், படிறு செய்து இருப்பேன் கண்டவா திரிதந்தேன் ஏலும், தெள்ளியேன் ஆனேன், செல் கதிக்கு அமைந்தேன்!'' என்று இறைவனது பாதகமலங்களை அடையப் பெற்றால் சிக்கெனத் (தாமதம் இல்லாமல்) திருவருள் பெறலாமாம்.

தமோ குணம் உடையவர்களுடைய மாசு போக்கி ஆட்கொள்ளும் பெருங் குணத்தைக் கொண்டுள்ள இறைவனின் திருவடிகளைப் போன்றவை அகலிகைக்குச் சாபவிமோசனம் அளித்த இராமனின் திருவடிகள். எனவே அவன் 'தாள் கண்டார்! தாளே கண்டார்.'

துஷ்ட நிக்ரகம் செய்யும் தாள்களைவிட சிஷ்ட பரிபாலனம் செய்து அபயம் அளிக்கும் தாள்கள் சிறந்தன வல்லவா! அதனால்தான் கவிச்சக்கரவர்த்தியும் தாள்களைக் குறிப்பிடும்போது ''தொடுகழல் கமலம் அன்ன தாள்'' என்று விசேஷித்துக் கூறுகின்றார்!

சீதை லட்சுமியின் அவதாரம். சத்வகுணத்தின் சிகரம். இவளை அடையும் பேராசையாலே சக்ரவர்த்தித் திரு

கைனும் கைகளையும் அகல விரித்துக் கொண்டே வரு கிறானாம்! இந்த விசாலமான கைகளையும் வாள் மின்னுவது போன்ற குறும்புச் சிமிட்டுகளுடன் கண்டு களித்துக் கொண்டார்களாம் பெண் வீட்டுக்காரர்களான மிதிலை மக்கள்!

தடக்கை கண்டாரும் அஃதே! சத்வ குணத்தை இறைவன் ஆட்கொண்டு அணைத்துக் கொள்ளுகிற விதம் எவ்வளவு ரசமாக அமைந்துவிட்டது! ஞானிகளும், பக்தர்களும், பகவர்களும் சத்வ குணம் தலை எடுக்கப் பெற்றவர்கள். இதனால் தான் பகவானும் பக்த பராதீனன் அவர்கள் இட்ட வழக்காக இருப்பவன் எனப்படுகிறான். சீதையின் உள்ளக் குறிப்பின்படி நடந்தது போல், எத்தனை அடியரானார்க்கும் இரங்கும் அப்பித்தன் அல்லவா அவன்!

பிரபஞ்சமெல்லாம் முப்பிரிவில் அடங்கி இருப்பதாக அறிவிக்கிறது விசிஷ்டாத்வைதசித்தாந்தம். இது ஸ்ரீவைணவ சமயத்தின் பெருங் கொள்கையாகும். அசித், சித், ஈச்வரன் என்னும் முப்பிரிவில் அடங்கியதே உலகம். அசித் என்பது உயிரற்ற பொருள்கள். சித் என்பவை உயிர்ப் பொருள்கள். ஈச்வரன் இறை தத்துவம். நாட்டில் காணப்படும் தீயதெல் லாம் அசித்தான உலகப் பொருள்கள் மீது, உண்டியே உடையே என உகந்து வைத்த ஆசையால் ஏற்படுவதே. பொய் நின்ற ஞானமும், பொல்லா ஒழுக்கும், அழுக்கு உடம்பும், (இவ்வுலகில்) இன் நின்ற நீர்மையும் ஏற்படுவது அசித் சம்பந்தத்தால் தான். உலக மாயையான அசித்தின் பிடிப்பை அறுத்துக் கொண்டு சித் ஆகிய ஜீவாத்மா, ஈச்வரனாகிய பரமாத்மாவை அடைதல் வேண்டும்.

அசித் சம்பந்தம் தலை எடுத்து, "கொன்றேன் பல் உயிரைக் குறிக்கோள் ஒன்று இலாமையினால்!" என்று திரிந்தவள் தாடகை. எனவே, அசித்தின் சின்னமான இவளை வதம் செய்த இறைவன் போன்ற இராமனின், 'தாள் கண்டார்! தானே கண்டார்' மிதிலை மக்கள்.

இருள் தரும் மாஞாலத்தில் பாவத்தினிடையே வாழ வேண்டிய தலைவிதியுடைய ஜீவாத்துமாவின் சின்னம் அகலிகை. 'என்னையும் என் உடைமையையும் நின் சக்கரப் பொறி ஒற்றிக்கொண்டு நின் அருளே புரிந்திருந்தேன்! இனி என் திருக்குறிப்பே!' என்னும் படிக் கல்லாகவே உடலிலும் உள்ளத்திலும் அசைவு இல்லாமல் 'சித்' என்னும் அகலிகைக் கிடந்தாள். இவ்விதமான சித், 'திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாய்!' என்று உயர்ந்தது திருவடிச் சேர்க்கையாலே!

எனவே மிதிலை மக்களும், அந்தத் தொடுகழல் கமலம் அன்ன தாள் கண்டார்! தாளே கண்டார்!! ஏன்?

மூன்றாவதான—ஓரடியும் வேண்டி திருவிக்ரமனாக ஓங்கி, பிறகு மகாபலிச் சக்கரவர்த்தியின் சிரசின் மீது ஒரு திருவடியை வைத்து அழுத்த வேண்டியதாயிற்று அவனை ரட்சிக்க! இங்கே, இறைவனான இராமனின் வருகையை எதிர்நோக்கி அகலிகையே பலகாலமாகக் காத்துக் கிடந்ததனால், சேவடி படுமுன், சேவடித்துகள் (பொடி) பட்டதுமே உய்வு பெற்றாளாம்! சுத்த 'சித்' தின் லக்ஷணம் இங்கு காட்டப்பட்டது. மகாபலிச் சக்ரவர்த்திக்குக் கிடைத்த ஏக பாத பட்டாபிஷேகத்தைவிட அகலிகைக்குக் கிடைத்த ஏகபாதத் தூளி பட்டாபிஷேகம் சிறந்தது தானே!

இறைவனான ஈச்வரனே சர்வ சக்தன். அவனின்றி ஓர் அணுவும் அசையாது. சிவ தனுசையும் ஒடிப்பது சர்வேச்வர னால் தான் முடியும். தானே ஈச்வரன் என்பதை நிரூபித்துக் காட்டும்படியாக மழவிடையோன் சிலை இறுத்த போது மிதிலை மக்களே சொல்லத் தொடங்கிவிட்டார்களாம் இவ்வுண்மையை! கம்பநாடர் கூறுவதையும் கேட்கலாம்.

மிதிலை மக்கள், இராமனை, ''மானுடன் அல்லை என்பார்! கயல் பொருகடலுள் வைகும் கடவுளே காணும்'' என்பார்!

மிதிலையின் வாள் கொண்ட கண்ணார்கள், இவ்வளவு ஞானத்தையும் அமைத்துப் பார்த்து ஆனந்தித்தார்களா என்று எண்ண முடியுமா? சந்தேகமே வேண்டாம்? அரசன் எவ்வழி, குடிகள் அவ்வழி! மகா ஞானியும், ராஜரிஷியுமான ஜனக மகாராசரின் குடிமக்களுடைய ஞானத்தைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமா? இனி, முழுப் பாடலையும் பார்க்கலாம்.

**தோள் கண்டார்! தோளே கண்டார்!! தொடுகழல் கமலம் அன்ன**
**தாள் கண்டார்! தாளே கண்டார்!! தடக்கை கண்டாரும் அஃதே**
**வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்!!**
**ஊழ்கண்ட சமயத்து, அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்!**

"திருமண ஊர்வலத்தையே எவ்வளவு நேரம் அநுபவித்துக் கிடக்கிறது? திருமணம் நடைபெற வேண்டாமா? அதோ ஜனக மகாராசர், குடும்ப ஜன சமேதராகத் தம்பரிவாரங்களுடன் திருமணப் பேரவையிலே பூர்ண கும்பங்களுடன் காத்துக் கிடக்கிறாரே?" என்ற உங்கள் குரலும் கேட்கிறது! மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றூத, முத்துடைத் தாம நிரை தாழ்ந்த பந்தற்கீழ் இதோ திருமணம் நடைபெறுவதையும் காணுங்கள்!

**மன்றலின் வந்து மணத் தவிசு ஏறி**
**வென்றி நெடுந்தகை வீரனும், ஆர்வத்து**
**இன் துணை அன்னமும் எய்தி இருந்தார்!**
**ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்!**

# அடி உதவுகிற மாதிரி

அடியேனுடைய இப்போதைய பேச்சு அடி உதவுகிற மாதிரி!

ஆம்! அடி உதவுகிற மாதிரி தான்!

அன்பு கூர்ந்து அனைவரும் சற்று எழுந்தருளி அருகே அமருங்கள். அடியேனுக்கு அநுகூலமாக இருக்கும்!

இந்தப் பேச்சின் தலைப்பு: தமிழ் நாட்டில் உலவும் ஒரு பழமொழியிலிருந்து கடன் வாங்கிய பாதிதான்.

முழுப் பழமொழி இது தான்!

''அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பிகூட உதவ மாட்டான்!''

'அண்ணன் தம்பி உதவ மாட்டான்!'

இது சுலபமாகப் புரிகிறது; பலர் அநுபவத்திலும் தெரிந்து கொண்ட உண்மைதான்!

'அடி உதவுகிற மாதிரி!'

ஏதோ அடியும் சில சமயம் உதவத்தான் செய்கிறது.

ஆனால்:

அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி உதவ மாட்டான்! என்று சேர்த்துச் சொல்லும் போது பொருளைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை.

இதற்கு சுவாபதேசம் சாதிக்கிறார்கள்!

அதாவது: ஒரு பையனை ஒரு ஆசிரியர் அடிக்கிறார். அந்தக் காலத்தில்! பக்கத்தில் உள்ள உபகாரிகள் ஆசிரியரிடம் விண்ணப்பிக்கின்றார்கள்.

'சுவாமி! நன்றாக அடியுங்கள்;'

அப்போதுதான் இவன் படித்து முன்னுக்கு வருவான்; அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி உதவ மாட்டார்கள்! என்று ரத்தினச் சுருக்கமாக விண்ணப்பிக்கின்றார்கள்.

தமிழ் நாட்டுப் பழ மொழிகள் ஆழ்ந்த ஞானத்தையும் அநுபவத்தையும் அடிப்படையாகக் கொண்டவை.

இந்தப் பழமொழியும் தமிழர்களின் ஆழ்ந்த ஞானத்தை-பரந்த அநுபவத்தை வெளியிடுவதாகத் தோன்றுகிறது!

ஆராய்வோம்!

எப்படி அண்ணன் தம்பிகளை விட அடி உதவ முடியும்? என்பது விளங்கவில்லை.

அண்ணன், அடியை விட படிப்பதற்கு உதவ மாட்டானா? தம்பி எப்படி, அவனைவிடப் பெரியவனுக்கு உதவ முடியும்.

'முள்ளைக் கொண்டு முள்ளை எடுக்க வேண்டும்!'

இந்தப் பழமொழியை இன்னொரு பழமொழியைக் கருத்தில் கொண்டு விளக்க வேண்டியதாகிறது!

ஒரு சிறுவன் அழுகிறான்!

'இவன் ஏன் அழுகிறான்?' என்று விசாரிக்கிறோம்;

"இவனுக்கு நல்ல பூசை கிடைத்தது!" என்று பக்கத்தில் உள்ளவர்கள் களிப்பும், கர்வமும் கலந்து நமக்கு விடையளிக்கிறார்கள்.

இதற்கு விளக்கம் என்ன?

ஒரு பக்தரைப் பற்றிச் சொல்லுகிறார்கள்! 'இவர் இறைவனைப் பூசை செய்தார், இறைவன் (திரு) அடியிணையின் பலன் கிடைத்தது' என்று :

இவ்வளவு நீட்டி முழக்காமல் இதனைக் குறுக்க ஆரம்பித்தார்கள்,

இவர் பூசை செய்தார் (திரு) அடியிணையின் பலன் கிடைத்தது.

மேலும் குறுக்கினார்கள்.

பூசை செய்தார், அடியின் பலன் கிடைத்தது.

இணைக்குப்பதில் 'இன்' வந்தது!

இன்னும் குறுக்கினார்கள்:

'பூசை செய்தார்! அடி கிடைத்தது!'

தந்தி பாஷை இன்னும் முன்னேறியது. 'அடி கிடைத்தது!' 'பூசை கிடைத்தது!' அதாவது: பூசையின் பலன் கிடைத்தது; கடைசியாக பக்தர், இறைவன், (திரு) அடி, இணை இவைகளை எல்லாம் விட்டு விட்டு, 'ஒருவனுக்கு அடி கிடைத்தால், பூசை கிடைத்தது' என்ற புரி பாஷையை ஏற்படுத்தி விட்டார்கள்.

இங்கே நாம் கவனிக்க வேண்டிய சாரம் இது தான்!

பூசை என்றால் (திரு) அடி இணையில் செய்த பூசை; அடி என்றால் (திரு) அடி இணையின் மருவு திரிபு, அல்லது சுருக்கம். எனவே நம் முதல் பழமொழியைப் பார்க்கலாம். அடி உதவுகிற மாதிரி! அண்ணன் தம்பி உதவ மாட்டான். என்றால். இறைவனுடைய (திரு) அடி இணை உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவ மாட்டான்! என்றுதான் பொருள்!

அதாவது சரியான பழமொழி: ''அடியினை உதவுகிற மாதிரி! அண்ணன் தம்பி கூட உதவ மாட்டான்!''

தமிழர்களுடைய ஆழ்ந்த ஞானத்தையும், பரந்த அநுபவத்தையும்,

உள்ளடக்கிய அருமையான பழமொழி யல்லவா இது!

இந்தப் பழமொழி, ஸ்ரீ வைணவ ஞானத்தின் வித்து!

நம் ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் உள்ள உபதேசத்தின் உருவமாக அமைந்துள்ளது!

இந்த அரிய ஸ்ரீ வைணவப் பழமொழியை ஆராய்ந்தால் இதை எளிதில் கண்டு கொள்ளலாம்!

ஆங்கில மொழியில் News என்று சாரமான ஒரு வார்த்தை!

இது எப்படி உருவாயிற்று என்ற ஒரு விளக்கம். அதாவது,

N = North = வடக்கு

E = East = கிழக்கு

W = West = மேற்கு

S = South = தெற்கு

இப்படியாக வடக்கு, கிழக்கு, தெற்கு மேற்கிலிருந்து திரண்டதே சேதி அதாவது News.

நான்கு திசைகளையும் உள்ளடக்கிய சொல் News.

தமிழிலும் பக்தர்கள் கையாளும் ஒரு சாரமான அடி—திருவடி.

நான்கு எழுத்துக்களால் ஆன இச் சொல், நான்கு விதமாகப் பரவுவதைக் காணலாம்!

'அடிகள்' என்றால், இந்தச் சொல் இறைவனைக் குறிக்கும்.

"பத்துடை அடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கு அரிய
வித்தகன் மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்
மத்துறு கடை வெண்ணெய் களவினில் உரவிடை ஆப்புண்டு
எத்திறம் உரலினோடு இணைந்து இருந்து ஏங்கிய எளிவே!

என்பது நம் ஆழ்வாரின் திரு வாய்மொழி!

இன்னார் என்று அறியேன் அன்னே! ஆழியொடும்
பொன்னார் சார்ங்கம் உடை அடிகளை
இன்னார் என்று அறியேன்!

என்பது மங்கை மன்னன் பரகால நாயகி.

இரண்டாவது :

அடி என்றால் இறைவனுடைய (திரு) அடிகளைக் குறிக்கும்!

"அன்று இவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி!
சென்று அங்குத் தென் இலங்கை செற்றாய் திறல் போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ் போற்றி!
கன்று குணிலாய் எறிந்தாய் கழல் போற்றி!
குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி!
வென்று பகை கெடுக்கும் நின்கையில் வேல் போற்றி!
என்று என்று உன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான்
இன்று யாம் வந்தோம் இரங்கேலோர் எம்பாவாய்!

'வையம் தகளியா! வார் கடலே நெய்யாக!
வெய்ய கதிரோன் விளக்காக!—செய்ய
சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொல் மாலை
இடர் ஆழி நீங்குகவே என்று!'

அடி என்பதன் நீட்டம் அடி இணைகள்!

அடிகள் என்றால் இரண்டு படக் கருத்து வரும். திருவடிகளையும், இறைவனையும் குறிக்கும்.

அடி இணைகள் என்றால் இறைவனது திருப் பாதங்களையே குறிக்கும்!

''எம் மாண்பின் அயன் நான்கு நாவினாலும்,
எடுத்து ஏத்தி ஈரிரண்டு முகமும் கொண்டு
எம்மாடும் எழிற் கண்கள் எட்டினோடும்,
தொழுதேத்தி இனிது இறைஞ்ச நின்ற செம்பொன்
அம்மான் தன் மலர்க்கமலக் கொப்பூழ் தோன்ற
அணி அரங்கத்து அரவணையில் பள்ளி கொள்ளும்
அம்மான்றன் அடியிணைக் கீழ் அலர்கள் இட்டு அங்கு
அடியவரோடு என்று கொலோ அணுகும் நாளே!
(பெருமாள் திருமொழி 1-3)

''மாலை நண்ணித் தொழுதெழுமினோ வினை கெட!
காலை மாலை கமல மலர் இட்டு நீர்!
வேலை மோதும் மதிள் சூழ் திருக் கண்ணபுரத்து,
ஆலின் மேலால் அமர்ந்தான் அடியிணைகளே!
(திருவாய் மொழி 9-10-1)

இனி அடி என்ற சொல் பரவும் மூன்றாவது பொருள்!

அடியார் என்றால் இறைவனுடைய திருவடிகளில் வணங்குபவர்களாகவும் அவன் திருவடிகளாகவும் உள்ள பக்தர்களைக் குறிக்கும்!

''அமலன்! ஆதிப்பிரான்! அடியார்க்கு என்னை ஆட்படுத்த
விமலன்! விண்ணவர் கோன்! விரையார் பொழில் வேங்கடவன்
'நிமலன் நின்மலன்! நீதி வானவன் நீள்மதில் அரங்கத்து
அம்மான்! திருக்
கமலபாதம் வந்து என் கண்ணின் உள்ளன ஒக்கின்றதே!''
(அமலனாதிபிரான் 1ம் பாட்டு)

''செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும், அரம்பையரும் கிடந்து இயங்கும்
படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே!''
(பெருமாள் திருமொழி4-9

நான்காவதாக

அடி என்ற சொல் அடியேன் என்ற சொல்லைப் பேசுகின்றவரையே—பக்தரையே—அவரையே பணியில் ஊன்றிய பக்தரையே குறிக்கும்!—தன்னிலை

பொய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும்,
அழுக்கு உடம்பும்,
இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை, உயிர் அளிப்பான்!
எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா
மெய்ந்நின்று கேட்டு அருளாய் அடியேன் செய்யும்
விண்ணப்பமே!

(திருவிருத்தம் 1ம் பாட்டு)

“ஆங்கு வெந்நரகத்து அழுந்தும்போது
அஞ்சேல் என்றுஅடியேனை அங்கேவந்து
தாங்கு, தாமரைஅன்ன பொன்னாரடி
எம்பிரானை, உம்பர்க்கு அணியாய் நின்ற,
வேங்கடத்து அரியைப் பரிகீறியை,
வெண்ணெய் உண்டுஉரலினிடை யாப்புண்ட
தீங்கரும்பினை, தேனை, நன்பாலினை
அன்றி என் மனம் சிந்தை செய்யாதே!”

(பெரியதிருமொழி 7-3-5)

இவ்விதமாக 'அடி' என்ற சொல், 1. இறைவனையும் 2. அவனது அடி இணைகளையும் 3. அவனை வணங்கும் அடியார்களையும் 4. சொல்லும் அடியார் பக்தர் தன்னையுமே குறிப்பதை நாலுகவிப் பெருமாளாகிற மங்கை மன்னனின் ஒரே பாடலில் காணலாம்!

“கடி கமழும் நெடு மறுகில் கடல் மல்லைத்தல சயனத்து
அடிகள், அடியே நினையும் அடியவர்கள் தம் அடியான்
வடிகொள் நெடு வேல் வலவன் கலி கன்றி ஒலி வல்லார்,
முடி கொள் நெடு மன்னவர் தம் முதல்வர் முதலாவாரே!”

(பெரிய திருமொழி 2-6-10)

"பொருள் அல்லாரைப் பொருளாகச் செய்யும்
பொருள் அல்லது இல்லை பொருள்! (குறள்)

என்பதுபோல பரம பாகவதரான சுவாமி ஒருவர், உலகம் உய்யும் பொருட்டு குருபரம்பரையும், திருப்பாவை சுவாப தேசமும் என்ற நூலை வெளியிட ஒரு அச்சகத்தில் தந்தார்!

'பாதகங்கள் தீர்க்கும் பரமன் அடி காட்டும் வேதம் அனைத்துக்கும் வித்தாகும்—கோதை தமிழ், ஐ ஐந்தும் அறியாத மானிடரை வையம் சுமப்பதும் வம்பு!' என்ற பாடலையும் சேர்த்திருந்தார். அச்சகத்தார் பரம கிருபை யுடன் பாதகங்கள் தீர்க்கும் என்று அச்சிடாமல் 'பாதங்கள் தீர்க்கும்!' என்று திவ்வியமாக அச்சிட்டு விட்டார்கள்!

"நாம் சரணாகதி அடைய இறைவனுக்குப் பாதங்களும் நாம் இறைவனுடைய திவ்ய தேசங்களைச் சென்றடைய நமக்குப் பாதங்களும் இருப்பதால் தானே இவ்வளவு வினைகளும்!

எனவே அந்த அச்சகத்தினர் 'பாதங்கள் தீர்க்கும்' என்றே அச்சிட்டு உதவினார்கள் போலும்.

அது போல் 'அடியிணைகள் உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவ மாட்டான்!' என்ற அருமையான தமிழ்ப் பழமொழியில் உள்ள "அடி இணைகள்" என்ற சொற் றொடரிலிருந்து "இணைகள்" என்ற சொல்லை விழுங்கி விட்டு அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவ மாட்டான், என்று எந்தப் புண்ணியவானோ சாதிக்கவே, இதை ஒரு ஆதாரமாக மேற்கொண்டு பலருடைய திரு முதுகுகளில் பல காலமாக அடி சாதிக்கப்பட்டு வருகின்றது, எக்களிப்போடு! இந்தப் பழ மொழியில் உள்ள அண்ணன் தம்பி என்ற சொற்கள் கட்டுப் பெயர்கள்!

அதாவது: 'அண்ணன்' என்ற சொல், தம்மைவிட வயதில் முதிர்ந்த உறவினர்களைக் காட்டுகின்றது! 'தம்பி'

என்ற சொல் நம்மை விட வயதில் குறைந்தவர்களைக் காட்டுகின்றது.

இப்பழமொழியின் முழுப் பொருளையும் காணலாம்! இறைவனாகிற: அடிகளுடைய, பாதங்களாகிய: அடியிணைகள் உதவுகிற மாதிரி, நம்மைவிட வயதில் முதிர்ந்த உறவினர்களும்: அண்ணன் கூட, நம்மை விட வயதில் குறைந்த உறவினர்களும்: தம்பி கூட, உதவ மாட்டான்.

இதை, இவ்விதமான கருத்தை அடியேன் சாதிக்கவில்லை! ''அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு!' என்று திருப்பல்லாண்டு தொடக்கமாக

**'அடியார்ந்த வையம் உண்டு ஆலிலை அன்னவசம் செய்யும்
படியாதும் இல் குழவிப்படி எந்தை பிரான் தனக்கு
அடியார், அடியார், தம் அடியார் அடியார் தமக்கு
அடியார், அடியார் தம் அடியார் அடியோங்களே''**

(திருவாய் மொழி 3.7-10)

என்று திருவாய்மொழிவரைத் தங்களை அடியார்கள் என்றே அறிமுகப்படுத்திக் கொண்ட ஆழ்வார்கள் சாதித்தருள்கிறார்கள்!

'அடியிணைகள் உதவுகிறமாதிரி, அண்ணன் தம்பி கூட உதவ மாட்டான்' என்ற தமிழ்ப் பழமொழி நம் ஆழ்வார்களுடைய பாடல்களிலிருந்தே உதித்ததுதான் என்பதைக் காணலாம்.

பானை சோற்றுக்கு ஒரு சோறைப் பதம் பார்த்தால் போதும். ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வாரின் ஒரு பாடலைச் சேவிக்கலாம்.

பல பொருள்கள் உலகில் கொஞ்ச காலம் பசுமையாக இருக்கும்; சில காலம் உலரும். கடல் எப்போதும் நீல நிறமாக இருக்கும்; அப்படியே தான் திருமாலின் காக்கும் குணமும்.

கடல் போன்ற நிறத்தை உடையவனே ''கடல் வண்ணா!''

எல்லோர் காலிலும் அலட்சியத்துக்கு இடமாகத் தூசு போன்றவன் ஒருவன். அவனுக்கு ஏதோ லாட்டரியில் 10 லட்சம் (அடித்தது) விழுந்தது. விழு நிதி மக்கள் இனி கவனிக்காமல் விடுவார்களா அவனை! கொண்டாட ஆரம்பிக்கின்றார்கள்! கொண்டாடட்டும்!

ஒரு சமூகமே அல்லவா அவன் தலைமைக்குக் காத்துள்ளது; 'குலம் புனையும்!' பங்காளிகளும், உறவினர்களும் படுத்துகிறபாடு! அண்ணன் தம்பிகள் செய்கிற அமர்க்களம் 'தமர் உற்றார்!'

அய்யோ! இந்த திவ்யத் திருமேனி தனியே வதங்கி வாடலாமா! வயதாகி விட்டால்தான் என்னவாம்! ஒரு மனைவி இருக்க வேண்டுமல்லவா?

''அவளுக்குப் பூவுக்கும் மாவுக்கும் சவுரிக்கும் என்ன பணமா இல்லை; அவளுடன் வாழ வீடு என்ன பிரமாதமா! 'வண்டார் பூம் குழலாளும், மனை!'

எல்லோரும் வசப்பட்டார்கள் ஒருவன் வசப்பட வில்லை எவன்? —அவன்?—எமன். எமன் வழி காட்டியாக வந்த பிறகு! எல்லாம் இருக்கிறது! உலகில் அவனைத் தவிர! 'ஒழிய உயிர் மாய்தல்'

இந்த உலகியற்கையைக் கண்ட நம்மாழ்வார் பொறுக்க முடியாமல் கதறினார்.

''கண்டாற்றேன்! உலகியற்கை!''

அவர் அரற்றி வேண்டுவது; அண்ணன் தம்பியை நம்பிக் கொண்டிருந்தேன் நான் இது வரை, அவர்கள் உதவவில்லை, என்னை இத்தனை நாளும் போல நினைத்திராமல்! ''பண்டே போல் கருதாது! இப்போது உங்கள் அடிமை நான்! அடியேனை உன் அடியிணைவ ாரத்திலே அழைத்துக் கொண்டு அடிமை கொண்டருள வேண்டும்! உன் அடிக்கே கூய்ப் பணிகொள்!'' முழுப்பாட்டையும் சேவிக்கலாம்!

**''கொண்டாட்டும், குலம்புனைவும், தமருற்றார், விழுத்தியும்
வண்டார் பூங்குழலாளும் மனைஒழிய, உயிர் மாய்தல்
கண்டாற்றேன் உலகு இயற்கை கடல் வண்ணா! அடியேனைப்
பண்டேபோல் கருதாது உன்னடிக்கே கூய்ப்பணி கொள்ளே,**

*(திருவாய் மொழி : 4-9-3)*

*''உன் திருவடி இணைகள் உதவுகிற மாதிரி : அண்ணன் தம்பிகள் கூட உதவ மாட்டார்கள்.''*

**'அகலகில்லேன் இறையும்' என்று அலர் மேல்
மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம்மூன்று உடையாய்! என்னை
ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக் கணங்கள் விரும்பும்
திருவேங்கடத்தானே!''**

*எனது, அண்ணன், தம்பி, உற்றார், உறவினர்கள் புகலாக உதவவில்லை: உதவ மாட்டார்கள்.*

**''புகல் ஒன்று இல்லா அடியேன் உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்!''**

*(திருவாய்மொழி 6-10-10)*

*ஏன்? உன் திருவடிகள் உதவுகிற மாதிரி, அண்ணன் தம்பிகள் கூட உதவ மாட்டார்களே! (மேலும் 9ம் பத்தில் விவரமாக உபதேசிக்கின்றார் நம்மாழ்வார்; விளக்கம் தேவைப்படாத பாடல்கள்!)*

**''கொண்ட பெண்டிர், மக்கள், உற்றார், சுற்றத்தவர், பிறரும்!
கண்டதோடு பட்டது அல்லால் காதல் (அன்பு) மற்று
யாதும் இல்லை!
எண் திசையும் கீழும் மேலும் முற்றவும் உண்டபிரான்
தொண்டரோமாய் உய்ய அல்லால் இல்லை கண்டீர்
துணையே''**

*(திருவாய் மொழி : 9-1-1)*

அடுத்த பாசுரம் :

துணையும் சார்வும் ஆகுவார் போல் சுற்றத்தவர் பிறரும்
அணைய வந்த ஆக்கம் உண்டேல் அட்டைகள் போல்
சுவைப்பர்!
கணை ஒன்றாலே ஏழ்மரமும் எய்த எம்கார் முகிலை
புணை (தஞ்சம்) என்று உய்யப் போதல் அல்லால்
இல்லை கண்டீர் பொருளே

(திருவாய்மொழி (9-1-2)

மாறன் மறை இது; இதற்கு ஆறங்கம்கூறும் அருள்மாரி வாக்கு!

''எம்மானும் எம்மனையும் எனைப் பெற்று ஒழிந்ததற்பின்
அம்மானும் அம்மனையும் அடியேனுக்காகி நின்ற
நன்மான ஒண் சுடரே நறையூர் நின்ற நம்பி! உன்
மைம்மான வண்ணம் அல்லால் மகிழ்ந்து ஏத்தமாட்டேனே!''

(பெரிய திருமொழி 7-2-3)

சடகோபர் தீர்மானிக்கிறார் :

இனி அண்ணன், தம்பி, அப்பன், ஆத்தாள் எல்லாம் என் மனத்துள் வந்த அவன் தான்!

''மேலாத் தேவர்களும், நிலத்தேவரும், மேவித் தொழும்
மாலார் வந்து இனநாள் அடியேன் மனத்தே மன்னினார்
சேலேய் கண்ணியரும் பெரும் செல்வமும், நன்மக்களும்
மேலாத் தாய் தந்தையும், அவரே இனி ஆவாரே!

தாய் தந்தை மட்டும் அல்ல! எல்லாம் நீ தானே! என்ன ஆச்சரியம் இது!

'மாயா! வாமனனே! மதுசூதா! நீ அருளாய்!
தீயாய்! நீராய்! நிலனாய்! விசும்பாய்! காலாய்!
தாயாய்! தந்தையாய்! மக்களாய்! மற்றுமாய்! முற்றுமாய்!
நீயாய்! நீ நின்றவாறு இவை என்ன நியாயங்களே!

(திருவாய்மொழி 7-8.1)

மாறன் முன் மொழிந்ததை மங்கை மன்னன் வழி மொழிகிறார்.

**"எம்பிரான், எந்தை, என்னுடைச் சுற்றம், எனக்கரசு,**
**என்னுடை வாழ்நாள்!**
**அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி அவர் உயிர்**
**செகுத்தஎம் அண்ணல்**
**வம்புலாம் சோலை, மாமதில் தஞ்சை மாமணிக் கோயிலே**
**வணங்கி**
**நம்பிகாள்! உய்ய நான் கண்டுகொண்டேன் நாராயணா!**
**என்னும் நாமம்!**
(பெரிய திருமொழி1-1-6)

இதனைப் பிள்ளை லோகாசாரியரும் தம் முமுட்சுப் படி திருமந்திரப் பகுதியில் 39வது வாக்கியமாக அமைத்தருளினார். 'ஈசுவரனை ஒழிந்தவர்கள் ரட்சகர் அல்லர் என்னுமிடம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்;'

உயிர்களுக்கு ஈசுவரன் ஒருவனே உண்மை இரட்சகன்! அவனை ஒழிந்த பெற்றோர் சுற்றத்தினர் உண்மை இரட்சகர்கள் ஆக மாட்டார்கள்' என்ற இதனை இவர் இயற்றிய பிரபந்ந பரித்ராணத்திலும் சாதித்தருளியதாக இதனால் ஏற்படுகிறது! எனவே சடகோபர் சரணாகதி அடியிணைகளிலே!

**"அகல கில்லேன் இறையும் என்று அலர் மேல் மங்கை உறை**
**மார்பா!**
**நிகரில் புகழாய்! உலகம் மூன்று உடையாய்! என்னை**
**ஆள்வானே!**
**நிகரில் அமரர் முனிக் கணங்கள் விரும்பும்**
**திருவேங்கடத்தானே!"**
(திருவாய் மொழி 6-10-10)

அண்ணன் தம்பி, உற்றார், உறவினர் புகலாக உதவவில்லை; எனவே புகல் ஒன்று இல்லா அடியேன், உன்,

அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்! எதற்காக இறைவனுடைய அடியினைப் பற்ற வேண்டும்! ''வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே'' உதவத் தூண்டும் பிராட்டியும் உதவும் எம்பெருமானும் ஒருக்கால் விட்டுவிட்டாலும் பகவானு டைய திருவடிகள் கைவிடா!

அவை நம்மைக் காப்பதில் மிக்க உறுதியாக இருக்கும். துவய அதிகாரத்திலே அதாவது மந்திர ரத்னமான துவயத்தை விவரிக்கையில் வெளியிடுகிறார் இதை பிள்ளை லோகாசாரியர்!

பிராட்டியும், அவனும் கைவிடில், திருவடிகள் விடாது! திண் கழலாய் இருக்கும். அடியிணைகள் உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவமாட்டான்!

என்ற மெய்ம்மைப் பெருவார்த்தையை இராமாயணம் மிகச் சிறப்பாக விளக்குகின்றது!

அயோத்தியை விட்டு ஆரண்ய வாசம் மேற் கொண்டனர் இராமனும் சீதையும் இலட்சுமணனும்! தூரத்தில் பரதன் சேனையுடன் வருவதைக் கண்டு விட்டான் பாம்புக்கண்ணனான இலட்சுமணன்; பாம்பெனச் சீறி மொழிவான்.

'அண்ணா ராமா! பாருங்கள்! பாருங்கள்! இம்மை மறுமை இரண்டையும் இழந்த இந்தப் பரத பாவி தோள் பலத்தையும் ராசாதி ராசா—பரத மகாராசாவுக்கு ஏற்பட்டுள்ள சேனையின் மகிமையையும் தான்! மன்னவன் படைத்த சேனையின் பெருமையும், ஒன்றும் இல்லாமல் உன்னோடு வந்துள்ள என் ஒண்டியான பலத்தையும் நின்னோடு பின்பு வந்த என் ஒருமையும் பாருங்கள் அண்ணா! பார்த்துக் களியுங்கள் கண்டு இனி உவந்தி உள்ளம் நீ! ஏதோ இளைய மனைவிசொன்னாள்; அந்த மயக்கத்தில் கிழச் சக்ரவர்த்தி— மகாபெரிய சக்ரவர்த்தி சொன்னாராம்! அதனால் கிடைத்துவிட்டது

*பரதனுக்கு சாம்ராஜ்யம்! உலகுக்கு சனியனல்லவா பிடித்தது அதனால்!*

**'ஒரு மகள் காதலின் உலகை நோய் செய்த**
**'பெருமகள் ஏவலில் பரதன் தான் பெறும் இருநிலம்**

*சக்ரவர்த்தி ஆணையால் சாம்ராஜ்யத்தையா ஆள்வான் பரதன்; என் ஆணையால் நரகலோகத்தைத் தான் ஆளப் போகிறான்.*

**ஆள்கை விட்டு இன்று, என் ஏவலால்,**
**அரு நரகு ஆள்வதுகாண்டி, ஆழியாய்!**

*பரதனுக்கு அவனுடைய நேர் தம்பி உதவ வில்லை!*

*இராமன் கங்கைக் கரையிலே வேடுவனான குகனை*

**ஏழை, ஏதலன் கீழ்மகன் என்னாது**
**இரங்கி மற்றவற்கு இன்னருள் சுரந்து**
**மாழை மான் மடநோக்கி உன் தோழி!**
**உம்பி எம்பி என்று ஒழிந்திலை**
**உகந்து தோழன் நீ எனக்கு இங்கு!**

*என்று தம்பியாகத் தத்து எடுத்துக் கொண்டான்! அந்தத் தத்துத் தம்பியான குகன் பரதனுக்கு உதவுகிற மாதிரி இது. இப்பரதன், இராமனை அண்ணன் என்று கூட மதிக்கவில்லையே!*

*'முன்னவன் என்று நினைந்திலன்!'' அது கிடக்கட்டும். அவன் பின்னால் ஒரு புலியல்லவா லட்சுமண உருவத்தில் நின்று கொண்டிருக்கிறது என்றாவது ஜாக்கிரதை வேண்டாமா?*

*'மெய்ப்புலி அண்ணான் ஓர் பின்னவன் நின்றனன் என்றிலன்; அதுவும் தான் போகட்டும்! 'அன்னவை பேணானேல்.*

*தத்து எடுக்கப்பட்ட தம்பி நான் ஒருவன் இருக்கிறேன் என்றாவது மதிக்கவில்லையே! என் எல்லையில் காலை வைத்து விட்டானே!*

**'என் இவன் என்னை இகழ்ந்தது**
**இவ்வெல்லை கடந்து இங்கே'**

ஓகோ! மன்னாதி மன்னவர்கள் நெஞ்சிலே வேடர்கள் விடும் அம்புகள் தைக்காது என்ற எண்ணம் தான்?

**'மன்னவர் நெஞ்சினில் வேடர் விடும் சரம் பாயாவோ!**

எனது நாயகனான இராமன் பரதனுக்கு வள நாட்டையல்லவா கொடுத்தான். அந்த இராமனுக்கு இவர் பரத—தம்பி காட்டைக் கூட தரமனமில்லாமல் படை எடுத்து வந்து விட்டாரே.

**'நாடு கொடுத்த என் நாயகனுக்கிவர் நாம் ஆளும்**
**காடு கொடுக்கிலர் ஆகி எடுத்தது காணீரோ;'**

அட! இந்தப் பரதன் கொண்டு வரும் படைக்குக் கொடி ஒரு கேடா?

இந்தப் படையைத் தூளாக்கி எனது நாயகன் இராமனுக்கு பரதன் வசம் உள்ள நாட்டையே தருகிறேன். இந்தப் புகழை அடைவோம் வாரீர்! என்று தன் படைகளைக் கூவுகிறான் குகன்!

**''ஆடு கொடிப்படை சாடி அறத்தவரே ஆள,**
**வேடு கொடுத்தது பார் என்னும் இப்புகழ் மேவீரோ;''**

இங்கே உள்ள திடீர் திருப்பம். அண்ணனான இராமனைக் கண்டு பரதன் வேண்டியது! அண்ணா! தரும மார்க்கத்தைக் கைவிடலாமா? என் மீது அருள் இருக்க வேண்டாமா! பாரம்பரிய முறையைக் கைவிடலாமா?

**'அறந்தனை நினைத்திலை அருளை நீத்தனை**
**துறந்தனை முறைமையை!'**

என்று சொல்லிச் சொல்லிப் புலம்பிய வண்ணம் தன்னையே மறந்து சொல்லினான்; மறந்தனன்.

இராமனின் திருவடிகளில் வீழ்ந்து விட்டான்!

**'மலரடி வந்து வீழ்ந்தனன்'**

வெறும் இராமனைப் பார்க்கவில்லை பரதன்! விண்ணுலகு சென்று விட்ட வேந்தர் வேந்தனான] தயர தனைப் பார்த்ததாகவே எண்ணிக் கொண்டான்!

**'இறந்தனன் தாதையை**
**எதிர்கண்டெனனவே!''**

அண்ணனான இராமன், தம்பியாம் பரதனுக்கு உதவுகிற அழகு; தயரதன் கொடுத்த அரசை உதறிக் கொட்டி விட்டான் பரதன் இராமனிடத்தில்; இராமன் இந்த நிலையில் 'நமது அப்பா அல்லவா நியமித்தார்! நானும் ஏழும் ஏழும் பதினாலு வருடம் காட்டில் வாழ வேணும் என்று; அப்படியே காட்டில் இருக்க வேணுமல்லவா,

**''எந்தை ஏவ ஆண்டு ஏழொடு ஏழ் எனா**
**வந்த காலம் நான் வனத்துள் வைக''**

இந்தப் பதினான்கு வருடமும் நீ எனக்குக் கொடுத்துள்ள அரசை உன்னிடம் தருகிறேன். நான் அப்பா சொல்லுக்குக் கட்டுப்படுவது போல, நீ என் சொல்லுக்குக் கட்டுப்பட வேணும்!

**''நீ தந்த பாரதம் தன்னை மெய்ம்மையால்**
**அந்த நாள் எலாம் ஆள் என் ஆணையால்!'**

அண்ணனும் உதறி விட்டான் பரதனை; தன் குகத் தம்பியும் உதவ வில்லை; ராம அண்ணனும் உதவவில்லை. இந்த நிலையில் பரதன்,

**''விம்மினன் பரதனும் வேறு செய்வது ஒன்று**
**இன்மையின், அரிதென எண்ணி ஏங்குவான்!''**

இவனுக்கு அடியிணைகள் உதவுகிற மாதிரியைப் பார்ப் போம்.

பரதன் எண்ணி, ஏங்கிக் கேட்டான்! 'இராமா! நீ இந்த அரசைத் தான் எனக்குத் தரலாம்; ஆனால், எனக்கு வேண்டியதோ உன் திருவடிகள்; அவை, சீர்மை திறம் பாதவை! ஆபத்தில் கைவிடாதவை! அவைகள் இம்மை மறுமை மட்டுமா' மறுமையாகிற மோட்ச பதவியை விட மேலாக என்ன பதவிகள் இருப்பினும் அவைகளையும் தருமே. அவைகளைத் தருவாய்!' இராமனும், தந்தான்;

**"செம்மையின் திருவடித்தலம் தந்து ஈக என"**
**இம்மையும் தருவன இரண்டும் நல்கினான்**

'அதாவது தன் தம்பிக்கு உதவாத இராமனிடம் இருப்பதைவிட, பரதனிடம், அண்ணன் தம்பி உதவாத போது—திருவடிகள் போய் உதவின பரதன் மகாநிதி பெற்றவன் போல இணையடிகளைச் சிரமேல் சூடிக்கொண்டான்.

**''அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினான்**
**முடித்தலம் இவை என் முறையில் சூடினான்''**

தரையில் வீழ்ந்து இராமனை வணங்கினான்.

'படித்தலத்து இறைஞ்சினான்,'

துயரத்தோடு விடைபெற்றான்!

'பரியில் போயினான்!'

பூமியிலுள்ள தூசுகளை அழகு தரும்படி சேர்ந்து இருந்த உடலுடன் சென்றான்!

'பொடித்தலம் இயங்குறு பொலங்கொள் மேனியான்!'

அடித்தலம் உதவின மாதிரி அண்ணன் தம்பி உதவவில்லை, என்ற பரதாழ்வான் வைபவத்தையும் அடிப்படையாகக் கொண்டு எழுந்தது இப்பழமொழி.

ஸ்ரீ வைணவ தரிசனத்தின் சிகரமான கொள்கை சரணாகதி. ஸ்ரீ ராமாயணத்திற்குச் சரணாகதி சாஸ்திரம் என்றே பெயர். ஸ்ரீ ராமாயணத்தில் உள்ள பல சரணாகதி

களில் சிறந்தது விபீடண சரணாகதியாகும். விபீடணனுக்கு ஆத்மத் தியாகம் புரிந்துகொள்ளச் சம்மதமில்லை. எனவே அவன் சன்மார்க்கத்திற்கு அவனது அண்ணன் (ராவணன்) தம்பிகள் (கும்பகர்ணன்) உதவ வில்லை. 'மேல் அரசு எய்துவான்.' விபீடணன் ராமனைச் சரணாகதியடைய, இராமனும் விபீடணனுக்குச் சரணாகதி தந்து,

'குகனொடும் ஐவரானோம் முன்பு, பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனோம்! எம்முழை அன்பின் வந்த
அகன் அமர்காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனோம்
புகல் அரும் கானம் தந்துப் புதல்வரால் பொலிந்தான்
நுந்தை!

என்று ஏற்றுக் கொண்டான்!

இராமன் இலக்குவனை நோக்கி விபீடணனுக்கு மகுடாபிஷேகம் செய்யப் பணித்தான்.

''உய்ந்தனன்! அடியனேன் ' என்று ஏழ்முறை வணங்கி
நின்ற
அஞ்சன மேனியானை (விபீடணனை) அழகனும்
(இராமனும்) அருளில் நோக்கித்
தஞ்சம் நல் துணைவன் ஆன தவறிலாப் புகழான்
தன்னைத்
துஞ்சலில் நயனத்து ஐய! சூட்டுதி மகுடம் என்றான்!'

இலங்கா ராஜ்யத்தை உரிமையாக்கும் அந்த மகுடத்தின் சிறு மதிப்பை உணர்ந்தவன் விபீடணன்! அவன் அந்த மகுடத்திற்காக வரவில்லையே! அவன் வந்தது அடியிணைகளை அடைவதற்காகவே. எனவே விண்ணப்பம் செய்தான்.

'விளைவினை அறியும்
வென்றி வீடணன்,' என்றும் வியா
அளவரும் பெருமைச் செல்வம்
அளித்தனை ஆயின் ஐய!'

இராவணனுடைய குடல் துடக்கை அறுத்துக் கொள்ளவும் உன்னுடைய தம்பி என்று என்னை ஏற்றுக்கொண்டால் உன் தம்பியான பரதனுக்குச் சூட்டிய உன் திருவடியாகிய மகுடத்தை அல்லவா சூட்ட வேணும் என்று சாமர்த்தியமாக விண்ணப்பம் செய்தான்.

**'களவியல் அரக்கன் பின்னே தோன்றிய கடன்மை தீர**
**இளயவற் கவித்த மோலி என்னையும் கவித்தி என்றான்!**

இராமனின் திருவடிகள் அவ்விதமே விபீடணனுக்கும் சூட்டப்பட்டன. எல்லோரும் மகிழ்ந்து திளைத்தார்கள்.

**'திருவடி முடியிற் சூட்டச், செங்கதிர் உச்சி சேர்ந்த**
**அருவரை என்ன நின்ற அரக்கர் தம் அரசை நோக்கி**
**இருவரும் இன்பம் உற்றார், யாவரும் இன்பம் உற்றார்,**
**பொருவரும் அமரர் வாழ்த்திப் பூமழை பொழிவதானார்!**

அயோத்தி மாநகர் இராமனின் அடித்தலம் உதவிய மாதிரி இலங்கை மாநகர் அண்ணன் தம்பி கூட உதவவில்லை விபீடணற்கு!

மகாபாரதத்திலும், இப்பழமொழி விளக்கப்படுகிறது.

பஞ்ச பாண்டவர்கட்கு அண்ணன் கர்ணன். துரியோதனாதிகள் தம்பிகள் பாண்டவர்களுக்கு. அவர்களுடைய அண்ணன் தம்பிகள் உதவ வில்லை. துரியோதனனாகிய தம்பியின் மறுப்பு

**என்று கேசவன் இயம்ப அங்கெதிர்**
**இராசராசனும் இயம்புவான்**
**அன்று சூதுபொருது உரிமை யாவும்**
**இழந்து போயினர்கள் ஐவரும்,**
**இன்று நீ விரகின் மீளவும் கவர**
**எண்ணின் நான் அவரின் எளியனோ!**
**சென்று கானில் அவர் இன்னமும்**
**திரிவது உறுதி என்று கனி சீரியே,**

கர்ணனாகிய அண்ணனின் மறுப்பு.

உரைத்த உண்மை மொழி—பொய்த்தது என்று
அமரர் புகலில் என்!
வேய் மலர்த் தொடையல்
ஐவர் என்னுடன் மிகைத்து
வெம்சமர் விளக்கில் என்
ஈ இருக்கும் இடம் எனினும்
இப்புவியில் யான் அவர்க்கு
அரசு இனிக் கொடேன்.

உதவியது கண்ணனுடைய அடிகளே! திருவரங்கத்து அமுதனார் இராமாநுச நூற்றந்தாதியில் இதை வெளியிடுகிறார்:

'அடியைத் தொடர்ந்து எழும் ஐவர்கட்காய், அன்று
பாரதப்போர்
முடியப் பரிநெடுந்தேர் விடும்கோனை, முழுது உணர்ந்த
அடியர்க்கு அமுதம் இராமாநுசன் என்னை ஆள
வந்து இப்
படியில் பிறந்தது மற்றில்லை காரணம் பார்த்திடிலே!

பஞ்ச பாண்டவர்கட்கும் கண்ணன் அடி உதவிய மாதிரி அவர்களுடைய (கர்ணன்) அண்ணன் தம்பிகள் (நூற்றுவர்) உதவவில்லை! இவ்விதமாக அனாதி காலமாக விசேடமாக இராமாயண மகாபாரத காலத்திலும் அடியிணைகள் உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவ மாட்டார்கள் என்கிறது.

இதை ஆழ்வார்களின், ஈரச் சொற்கள் மூலமாகவும் ஆசார்ய புருஷர்களின், உபதேசம் மூலமாகவும் அறிந்து கொண்ட ஸ்ரீவைணவப் பெருமக்கள் இனமும் 'அடியிணைகள் உதவுகிற மாதிரி அண்ணன் தம்பிகள் கூட உதவ மாட்டார்கள்' என்ற இதை நினைவு படுத்திக் கொண்டு சிரமேற் கொண்டார்கள், அதாவது இறைவனுடைய அடியிணைகளை சிரசில் விசாலமாக அமைந்துள்ள நெற்றியில் எழுந்தருளச்செய்து கொண்டனர். இறைவனுடைய இரு அடியிணைகளையும் வெள்ளைத் திருமண், கட்டியால் தங்களு

டைய நெற்றியில், மேல் நோக்கிய வண்ணம் அலங்கரித்துக் கொண்டனர். இந்த விதமாக இறைவனுடைய அடியிணை களை எழுந்தருள் வித்த போது, அவைகளுக்குப் பீடமாக ஒரு கமலத்தை அதாவது தாமரை மலரை இட்டார்கள்.

எனவே, கமல மலர் மீது இறைவனுடைய அடி இணைகள் எழுந்தருளி; அடியவர்கள் சென்றாலும் இருந்தாலும் நின்றாலும் கிடந்தாலும் அவர்களுக்கு உதவும் இறைவனுடைய அடி இணைகளுக்குக் கமல மலரை ஆசனமாக இட்டது தான் தாமதம்!

அந்தப் பதுமத்தை ஆசனமாக அனாதி காலமாக உபயோகித்து வரும் மகாலட்சுமியும் தன் உரிமையைக் கொண்டாட ஆரம்பித்தாள்! மேலும், இறைவனது அடியிணைகளை எழுந்தருள்வித்தால் இறைவன் முழு வடிவில் எழுந்தருளியுள்ளதையல்லவா குறிக்கும் இது! எனவே, 'அகலகில்லேன்! இறையும்!'' என்னும் அலர்மேல் மங்கை'தானாகவே எழுர்ந்தருளி அலர்ந்துள்ளபதுமமலரின் மேல் உறையும் மங்கையா கிவிடுகிறாள். அலர்மேல் மங்கை அல்லது பத்மாவதி அல்லது கமலையின் நிறம் சிகப்பாகை யாலே அவளை இறைவனுடைய அடியிணைகள் நடுவே சிகப்பாக ஸ்ரீ குறிப்பதற்கு சூர்ணம் இடுகிறார்கள் வைணவப் பெருமாகிகள் சூர்ணம் என்பது பொடி அல்லது தூள், ஸ்ரீ என்பது திரு அல்லது மகாலட்சுமியைக் குறிக்கும். எனவே ஸ்ரீ சூர்ணம் எனப் பெயர்பெற்றது. இது ஏதோ அடியேன் கற்பனையா, இதற்கு ஆதாரம் உண்டா என சந்தேகிக்கின்றீர்கள்! இதோ! சடகோபரே சாட்சி! அவரது செவிக்கினிய செஞ்சொல்லைக் கேளுங்கள்!

கண்ணபிரானைத் தொழுவதற்கு ஒரு கூட்டமே திரண்டு வந்ததாம்! ''கண்ணபிரானைத் தொழுவார்''!

ஏன் இந்தத் திருக்கூட்டம் கண்ண பிரானிடம் திரண்டு வருகிறது! அவன் தான்' நான் எல்லோரையும் ரட்சிப்பேன் என்று காட்டுவதற்காகத் தன் திருவடியிலே திருத்துழாயை சூடி விளம்பரப்படுத்துகிறானே!

''கற்றைத் துழாய் முடிக் கோலக்
கண்ணபிரானைத் தொழுவார்!''

இந்தத் திருக் கூட்டத்தின் தலைவர்களையாவது தெரிந்து கொள்ளலாமே! இதோ முதலில் வருகிறவரைத் தெரிய வில்லையா? தலையிலே மினுக்குகிறதே அந்த மூன்றாம் பிறைச் சந்திரன்! ஆம் சந்திரசேகரன் தான்!

''ஒற்றைப் பிறை அணிந்தானும்''

அவன் பின்னால் யார்? நான்கு தலைகளுடன் வருகிறானே!

''நான் முகனும்''

அவனுக்கும் பின்னால் தேவேந்திரன் தான்!

''இந்திரனும்?''

இந்திரனோடு! தேவலோகமே காலியானது போல தேவர் கூட்டம் எல்லாம்!

''மற்றை அமரரும் எல்லாம்''!

வருகிறார்கள்! வந்து எப்படி வருகிறார்கள்! கமல மலரினாலே தாங்கப்பட்ட இறைவனான திருமாலின் பாதங்களை நெற்றியில் அணிந்து கொண்டு ''திரை மலர்ப் பாதங்கள் சூடி''!

வருகின்றார்கள்; நாங்கள் அப்படி நெற்றியில் திருமாலின் பாதங்களைச் சூடி வருகின்ற சிவனையும், பிரமனையும், இந்திரனையும், தேவர் கூட்டத்தினையும் பார்க்க முடிய வில்லையே என வருந்த வேண்டாம்! இதோ! அந்த திரை மலர்ப் பாதங்களை எனது நெற்றியிலேயே சேவித்துக் கொள்ளுங்கள்; அவைகள் தான் எனது நெற்றியுள் எழுந்தருளி என்னைக் காக்கின்றவே!

'நெற்றியுள் நின்று என்னை ஆளும்,

நெற்றியில் தனது திருவடிகளை ஏன் வைத்தான்? நெற்றியின் மீது திருவடிகளை வைத்து ஏறி என் சிரசில் அமர்ந்து கொள்வதற்காகவே 'எனது உச்சி உள்ளான்'! முழுப் பாடலையும் சேவிக்கலாம்!

''நெற்றியுள் நின்று என்னை ஆளும் நிரை மலர்ப் பாதங்கள்
சூடி
கற்றைத்துழாய் முடிக்கோலக் கண்ணபிரானைத் தொழுவார்
ஒற்றைப் பிறை அணிந்தானும்! நான் முகனும்! இந்திரனும்'
மற்றை அமரரும் எல்லாம்; வந்து எனது உச்சி உள்ளானே!,

திருவடி நான்கு எழுத்துப் பதம், அதன் சிறப்பை வெளிப் படுத்துவது திருமண என்கிற நான்கு எழுத்துப்பதம். இவ்விதமாக;

**'அடியிணைகள் உதவுகிற மாதிரி அண்ணன் தம்பிகூட உதவமாட்டான்'**

என்பதைத் தெரிந்து கொண்டு தங்களை ரட்சித்துக் கொள்வதற்காக நெற்றியிலே இறைவனுடைய அடியிணை களாகிற திருமண் காப்பை அணிந்து கொள்ளும், பக்தர் களுடைய திருவடிகளில் அடியேனது வணக்கத்தைச் செலுத்தி இவ்வுரையினை முடித்துக் கொள்ளுகிறேன்!

# மூன்று தண்டனைகள்

இது அடியேனுடைய சுய சரித்திரம் அல்ல !

பரம பக்தர்களும், பாகவதர்களும் கூடியுள்ள இத்திரளிலே; அடியேன் யாரையாவது உத்தேசம் செய்து மூன்று தண்டனைகளை நிறைவேற்றித் தலைக்கட்டி வைக்க எழுந்தருளியிருப்பதாக அதிசங்கை பண்ணி ஒருவரும் சபையிலிருந்து நழுவிவிட முயற்சிக்காமல் இருக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன். அல்லது குறைந்த பட்சம் தற்காப்பையாவது தடுப்பு முறைகளையாவது கைக்கொள்ளலாமே எனத் திருவுள்ளம் பற்றவும் வேண்டாம் எனவும் வேண்டிக் கொள்ளுகிறேன். அப்படியானால், 'மூன்று தண்டனைகள்' என்ற இந்த பயங்கரத் தலைப்பு யாருக்கு அளிக்கப்பட்ட மூன்று தண்டனைகளைக் குறிக்கின்றன. என நீங்கள் கடாவினால் அடியேன் அதை விளக்கக் கடமைப் பட்டுள்ளேன்!

ஆம்! தண்டனைகள் மூன்று தான். ஆனால் மூன்று தண்டனைகளும் ஒருவருக்கே (பிர) சாதிக்கப்படவில்லை என்பதை அடியேன் விண்ணப்பித்துக் கொள்ளத்தான் வேண்டும்!

இந்த மூன்று தண்டனைகளும் மூன்று திருநாமங்களுக்கு சாதிக்கப்பட்டவைகளாகும், ஆறு என்பதே சரியான கணக்கு; ஆனால் மூன்று தான் முக்கியம். (ஆழ்வார்களின் மங்களாசாசனம் பெற்றவையாகும்) மூன்று திருநாமங்களுக்கு மூன்று தண்டனைகளை அளித்த அந்த மூன்று பேர் வழிகள் யார்? என நீங்கள் அதட்டிக் கேட்க ஆசைப்படு

கின்றீர்கள்! அதற்கு முன் அடியேனே விண்ணப்பித்து விடுகின்றேன்!

இம்மூன்று தண்டனைகளையும் அளித்தவர்கள் மூன்று பேர் வழிகள் அல்லர்!

இந்த மூன்று தண்டனைகளையும் அளித்தவர் ஆ! என்று ஆச்சரியப்படும்படியான ஒரே சாமிதான்! ஒரே ஆசாமி தான்!

இந்த ஆசாமி மூன்று திருநாமங்களுக்கு மூன்று தண்டனை அளித்தது எப்போது? எங்கு? எனும் கேள்வி களை எழுப்புகின்றீர்களல்லவா!

இந்த மூன்று தண்டனைகளையும் ஒரே சமயத்திலாவது ஒரே இடத்திலாவது அளிக்கவில்லை என்பதையும் அடியேன் விண்ணப்பிக்கத்தான் வேண்டும்.

தண்டனை! தண்டனை! என்று ஒவ்வொரு தொடரி லும் பாராயணம் செய்கிறீர்களே; அந்த தண்டனைதாம் என்ன என்றும் கேட்கிறீர்கள் அல்லவா?

அந்த ஆசாமி இந்த மூன்று பேர்வழிகளுக்கும் மூன்று தண்டனைகளை ஒரே காலத்தில் அளிக்காதது மட்டுமல்ல, ஒரே இடத்தில் அளிக்காதது மட்டுமல்ல, ஒரே விதமாகவும் அளிக்கவில்லை. மூன்று விதமான தண்டனைகளை அளித்து விட்டான் இஃது என்ன ஒவ்வொரு வினாடியும் ஒவ்வொரு புதிராகவும் கிளப்புகிறீர்கள்! நாங்கள் இவைகளைப் பொறுத்தருள்வதற்கில்லை; ஒரே அடியாகச் சொல்லி விடுங்கள். இந்த மூன்று தண்டனைகளை அளித்த ஆசாமி யார்? அளிக்கப்பட்ட மூன்று திருநாமங்கள் யாவை? (ப்ர) சாதித்தருளிய இடங்கள் எங்கு? சாதித்தருளிய காலங்கள் எப்போது? இவை எல்லாவற்றையும் விட ஏன் மூன்று விதமான தண்டனைகள் அளிக்கப்பட்டன? என்று அடியேனை மடக்குகின்றீர்கள். நியாயம்தான்! ஆனால் நானும் ஒரு அநியாயத்தை வெளிப்படுத்தத்தான்

வேண்டும்! சமீபத்தில் ஒரு சுவாமி அடியேனையும் மேற் கொண்ட கேள்விகளைக் கேட்டு மடக்கிக் கொண்டார். அடியோங்கள் பரிமாறிக் கொண்டதை விண்ணப்பித்தால் விடைகள் கிடைக்கும். விஷயமும் விளங்கும். அடியேனு டைய நண்பர் சுவாமி ஒருவர் அவருடையதிவ்யத் திருநாமம்!

மிரண்டு மயங்கி, புரண்டு போரிடும் ஸ்ரீமாந், எதிர்வாத பயங்கரம்தான். இந்தப் பயங்கர சுவாமி, ஒரு சமயம் அடியேனை மடக்கிக் கொண்டு சாதித்தருள்கிறார் அகோ! வாரும் பிள்ளாய்!

ஓ! சுவாமி! ஸ்ரீவைணவ மகாசங்கக் காரியதரிசியாரே! இந்த அநியாயத்தைக் கேட்டீரோ? பெருமாள் மூன்று அவதாரம் எடுத்த சமயம் மூன்று பேர்களைக் கொன்றா ராம்! கிருஷ்ணாவதாரம் எடுத்து சிசுபாலனைக் கொன்றா ராம்! ராமாவதாரம் எடுத்து இராவணனைக் கொன்றா ராம்! நரசிங்க அவதாரம் எடுத்து இரணியனைக் கொன்றா ராம்!

மூன்று காலங்களில், மூன்று இடங்களில் வாழ்ந்த இம் மூன்று பேர்களையும் பெருமாள் கொல்லட்டும், மூன்று அவதாரங்களை எடுத்தபோதும் கொன்றது அவர் ஒருவரே!

ஆனால் இந்த மூன்று பேர்களையும் கொல்ல வேண்டு மென்றால் ஏன் ஒரே விதமாகக் கொல்லவில்லை? ஏன் சிசுபாலனைக் கழுத்தைத் துண்டித்துக் கொல்ல வேண்டும்? இராவணனை உடம்பு முழுவதும் சல்லடையாகப் பாணத் தால் துளைத்து உயிரைப் போக்கி இருக்க வேணும்? அதை விடப் பயங்கரமாகக் கரங்களால் இரணியனைத் துடைமீது கிடத்தி மார்பை—வயிற்றைப் பிளந்து குடல்களை வெளியே எடுத்து இழுத்து மாலையாக அணிந்து கொள்ள வேணும்? நம் நீதிமன்றங்களில் சில குற்றங்களுக்கு ஆறு மாத தண்டனை அளிக்கிறார்கள். புரிகிறது! சில குற்றங்களுக்கு ஆறு வருட தண்டனை. புரிகிறது; ஆனால் உயிரை நீக்க

வேணுமானால் ஒரே விதமான தண்டனைதான் தருகிறார்கள். அதாவது தூக்குப் போடுதல்! (To be hung by the neck Until death) ஆனால் பெருமாள் உயிரை நீக்கும் ஒரே பயனைத்தரும் தண்டனையை ஏனோ மூன்று விதங்களாக அளித்தார்?

அது மாத்திரமா?

ஏன் சிசுபாலன் குடலைப் பிடுங்கி மாலையாக அணிந்திருக்கலாகாது? ஏன் இராவணன் கழுத்தைத் துண்டித்தலாகாது? ஏன் இரணியன்மீது பாணம் செலுத்தியிருக்கக் கூடாது? என்று பிரித்துப் பிரித்து, விரித்து விரித்து மடக்கி மடக்கி வினாவலானார், அடியேனுடைய நண்பர் சுவாமி மிரண்டு மயங்கி புரண்டு போரிடும் ஸ்ரீமான் எதிர்வாதப் பயங்கரனார்!

அடியேன் அந்த சுவாமியின் திருவடித் தாமரைகளில் விண்ணப்பிக்கலானேன்; அகோ! வாரீர் சுவாமி! இதற்கு ஒரே நிபந்தனைதான். அண்மையிலே சம்பாரெட்டிப் பாளைய திவ்ய தேசத்திலே ஸ்ரீவகுள பூஷண பாஸ்கர சபையின் ஆண்டு விழா நம்முடைய வித்வான் மு. சடகோப ராமாநுஜ சுவாமிகளின் தலைமையில் நடைபெற இருக்கின்றது. தேவரீரும் அதுசமயம் அவ்விழாவிலே அந்தர்யாமியாக எழுந்தருளினால் அவ்விடம் விடைகளை விண்ணப்பிக்கின்றேன் என்றேன்!

அந்த சுவாமியும் அவ்விதமே பரம கிருமையுடன் இவ்விழாவில் அந்தர்யாமியாக (பலருடைய திருவுள்ளக் கமலத்தில்) எழுந்தருளியிருப்பதை அடியேன் உணர்ந்து மேற்கொண்டு இச் சபையினை ஒரு வியாஜ்யமாக வைத்து விண்ணப்பிக்கின்றேன்!

சிசுபாலன் கதையை முதலில் கவனிக்கலாம்!

சிசுபாலனுக்குக் காரணம் இருக்கிறது. கண்ணன் மீது கோபங்கொள்ள கண்ணனால் அவமானமும் ஏற்பட்டு விட்டது, எனவே, கண்ணனைத் திட்டுகிறான்,

மிருந்த நம்பிக்கையோடு இருந்தான் சிசுபாலன்
**''திண்ணார்ந்து இருந்த சிசுபாலன்''**

என்ன நம்பிக்கை அது: ருக்மணியாகிய கன்னிதனைக் கைப்பிடிப்பான் திண்ணார்ந்து இருந்த சிசுபாலன்:

**'கள்ளக் காதலா, திருட்டுக் கல்யாணமா'?**
**'கண்ணாலம் கோடித்துக் கன்னிதனைக் கைப்பிடிப்பான்**
**திண்ணார்ந்து இருந்த சிசுபாலன்'**

என்ன விளைவு:

கள்ளக் காதலும் மைனர் பெண்ணைக் கடத்துவதுமாக சதி செய்து, திட்டம் போட்டு, நடத்தி விட்டான் கண்ணன் என்னும் ஆணாளன் அல்லன்; பெண்ணாளன். சிசுபாலன்,

**'அண்ணார்ந்து இருக்கவே அங்கு அவளைக்**
**கைப்பிடித்த பெண்ணாளன்.'**

இதனால் சிசுபாலன் தேசழிந்து போனான். இவன் விரும்பி இருக்கிற ஊரை அறிய வேணுமா? பேணும் ஊர் அரங்கமே.

**'கண்ணாலம் கோடித்துக் கன்னிதனைக் கைப்பிடிப்பான்**
**திண்ணார்ந்திருந்த சிசுபாலன், தேசழிந்து,**
**அண்ணாந்திருக்கவே, ஆங்கவளைக் கைபிடித்த**
**பெண்ணாளன், பேணும் ஊர், பேரும் அரங்கமே.'**

இந்தக் கள்ளக் கடத்தல் காட்சியைப் புகைப்படம் எடுத்ததுபோல் சேவிக்க வேணுமானால் அதற்குத் திருவல்லிக்கேணிதான்.

முதலிலே சாத்யகி என்னும் பாகன்; அடுத்து பலராமன்; அடுத்து மைனர்பெண் ருக்மணிதேவி, ஒன்றும் தெரியாத கன்னி மாதிரி நிற்கிறாள்; அடுத்தபடி முதல் குற்றவாளி பார்த்தசாரதி அடுத்தவர்கள். Abettors

வேறு எங்கும் இந்தக் கண்கொள்ளாக் காட்சியைச் சேவிக்க இயலாது. கீதோபதேசம் செய்த பார்த்த சாரதிக்கு உபதேசம் செய்யக் கோதை ருக்மிணி கடிதம்

அனுப்பினாள். அவளுடைய காதல் கடிதம் இலக்கியத்தின் சிகரமாக அமைந்துள்ளது. காதல், பக்தி, ஞானம் கலந்து இருக்கும்.

மற்றவர்கள் வேண்டுமானால் கேட்கலாம் கேசவன் கீர்த்திகளை. வயிறெரிந்து போன சிசுபாலன் கேட்க முடியுமா? எனவே

**''கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ''**

என்ற நியாயத்துக்குச் சிசுபாலனைக் கொண்டுவரமுடியாது. எனவே அவன்

**''கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்**
**சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன்''**

ஆகின்றான்.

சிசுபாலன் கண்ணனைத் திட்டுவதைக் கண்ட மக்களுக்குப் பயமும் பீதியும் உண்டாகிறது. ''ஐயோ! சிசுபாலன் ஒழிந்து விடுவானே'' என்று.

இவைகளை முன்கூட்டியறிந்த சிசுபாலனின் தாயாருக்கு மிகுந்த பயம் உண்டாகி விட்டது.

தன்மகனைக் காப்பாற்றிவிட முயல்கிறாள். கண்ணனிடம் போய் வேண்டுகிறாள். ''கண்ணா! என்மகன் எனக்கு ஒரு சிசு. ஒருபாலன். உடல் வளர்ச்சியால் ஒரு சிசு. வேண்டியது (ருக்குமணி) கிடைக்காவிடில் அழும் சிசு. அறிவு வளர்ச்சியில் அவன் முதிராத ஒரு பாலன். பெரியோர் பெருமை அறியாத பாலன்; இந்த சிசுபாலன் ஒரு நூறுதடவை திட்டினாலும் மன்னித்து விடவேண்டும் பிரபோ'' என்றாள். நூறு வசவுகள் எட்டமுடியாது தன் மகனால் என்று நம்பினாள். கண்ணனும் ஒப்புக் கொண்டான். சரி; நூறு தடவைதான் பொறுப்பேன்; பிறகு தண்டிப்பேன்; என்றான்.

சிசுபாலன் தினமும் முயற்சி செய்து வந்தான் 10, 15, 20, 25, 30 இப்படித் தன் பயிற்சியை மும்முரமாகச் செய்யலானான். 70, 75, 80, 85 என்ற நிலைமைக்கும் வந்தான்.

தருமர் ராஜ சூய யாகம் செய்தார். முதல் தாம்பூல மரியாதையைக் கண்ணனுக்குச் செய்தார். பீஷ்மரின் சம்மதப்படி இது நடத்தப்பட்டது.

கண்ணனுக்கே முதல் அர்க்யம் அவர் காட்டினார் என்று பழித்தனன். 85, 90, 95, 100க்கு மேல் போய் விட்டது திட்டு. கண்ணனுக்குச் சந்தோஷம். சமயம் வாய்த்து விட்டது என்று தாம்பூலத் தட்டையே சுழற்றி எறிந்தார். சக்கரத்தாழ்வான் அதில் பிரவேசமாகி, சிசு பாலன் தலையை அறுத்து வீழ்த்தினார்.

''பல பல நாழம் சொல்லிப் பழித்த சிசுபாலன் தன்னை
அலவலைமை தவிர்த்த அழகன்''

(பெரியாழ். திரு. 4.3.5)

பூர்ணாவதாரங்களுள் பெருமாள் கண்ணனாக அவதரித்த போதுதான் திருவாழி திருச்சங்கோடு அவதரித்தார்.

தன் பெற்றோர்களின் வேண்டுகோளின்படி சங்கு சக்கரங்களை மறைத்துக் கொண்டனர். மறைத்துக் கொண்ட சக்கரத்தை, முதல் தாம்பூல மரியாதை அளிக்கப் பட்ட தட்டிலேயே பிரவேசிக்கச் செய்து கழுத்தைத் துண்டித்து தண்டித்தார்.

இப்படியான தண்டனை எப்படிப் பொருந்தும்? இதைக் கேட்டருளியது நம் எதிர்வாத பயங்கரனார்தான்.

பெருமாளிடம் சிசுபாலன் அபசாரப்பட்டது ஓசையால் தான்—திட்டுக்களால். ஓசை பிறக்குமிடம் அடிநாக்கு, தொண்டை; வாயைமூடியபடியே 'யும்' என்று ராகம் பாடலாம். ஓசை முடிகிற இடம் உதடுகள் மற்றும் வாய்.

எனவே, பெருமாள் தொண்டையில் சக்கரத்தைப் பிரயோகித்துத் துண்டித்தார்! துஷ்டர்களை நிக்ரகம் செய்யத் திருவாழி; இஷ்ட பரிபாலனத்துக்காகச் சங்கம்.

துஷ்ட நிக்ரகத்துக்காக திருவாழியை உபயோகித்து பாண்டவர்களாகிய சிஷ்யர்களைக் காப்பாற்ற, 'ஒரு ஆயுதமும் எடுக்க மாட்டேன்' என உறுதி கூறியும் கூட சங்கத்தைக் கையிலேந்தி யுத்தகளத்தில் அர்ச்சுனனுக்கு சாரத்யம் செய்தருளினார் பெருமாள். இந்த அரிய பார்த்தசாரதிக்கோலத்தைத் திருவல்லிக்கேணியில்தான் சேவிக்கலாம்.

இதுதான் சமயம்; எனது இனிய நண்பர் ம. ம. பு. போ. திரு. எதிர்வாதப் பயங்கரனாரின் திருமுகமண்டலத்தை நோக்கினேன். அந்தர்யாமியாக இருப்பினும் அவர் சேவை அடியேனுக்குக் கிடைக்கும்.

அவருடைய திருமுகமண்டலத்தை நோக்கிய போதெல்லாம் அவர் அதை வேறு பக்கமாகவே திருப்பிக் கொண்டார். பெருமாள் இராமாவதாரம் எடுத்தபோது தன் தெய்வத்தன்மையைக் காட்டிக் கொள்ளவே இல்லை. அதனால் திருவாழி திருச்சங்கைக் காட்டவும் இல்லை. பிரயோகிக்கவும் இல்லை. சார்ங்கபாணியாகச்சேவை சாதித்தது இராமாவதாரத்தில்தான்.

'கோலவில்லி இராமனாகத் திகழ்ந்தார். நாரணன் வலியில் ஆண்ட வென்றி வில்லை' பரசுராமர் ராமரிடம் தந்தார். என்றும் உள தென்தமிழ் இயம்பி இசை கொண்ட அகத்தியர் படைக்கலம் அருளினார். இராவணனுடைய நிலையைக் காணலாம். பெருவரங்கள் பெற்றிருக்கிறான் இராவணன். கம்ப நாட்டாழ்வார் இதைத் தன் கம்பீரக் கவியால் வர்ணிக்கிறார், பத்னியான பதிவ்ரதையான மண்டோதரியின் சத்திய வாக்காலே,

''முக்கோடி வாழ்நாளும்
முயன்றுடைய பெருந்தவமும் முதல்வன் முன்னாள்
எக்கோடி யாராலும் வெலப்படாய் எனக்—
கொடுத்த வரமும் ஏனைத்
திக்கோடு உலகனைத்தும் செருக்கடந்த
புயவலியும்''

உடையவன் இராவணன். பெருவரங்கள் பற்றிய இராவணன் பிழக்குடைய இராவணனாகவும் ஆனான்.

அதனால் பெருமாள் அவனை, உருவத்தில் பொருதழித்து இவ்வுலகினைக் கண் பெறுத்தானாம்! அந்தச் சிரமம் தீர அவன் வந்து சேர்ந்த இடம் இதோ!

'குருவரும்பக் கோங்கலரக் குயில்கூவும் குளிர்பொழில்சூழ்
திருவரங்கம் என்பதுவே என் திருமால் சேர்விடமே!'

இராவணன் செய்த பிழக்கு என்ன? அதன் பலன் என்ன? விபீஷணாழ்வான் திருவாக்கிலே கம்பநாட்டாழ்வார் வெளியிடுகிறார். விஷத்தை நோக்கலாம்; கெடுதி செய்யாது உண்டால்தான் உயிரை மாய்க்கும். சானகியின் கற்பு விஷமோ முறை தவறிப் பார்த்தாலே போதும்; உயிரை இழக்கச் செய்யும்.

''உண்ணாதே உயிர் உண்ணாது ஒருநஞ்சு
சனகி யெனும் பெரு நஞ்சுதனைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே உயிர்''

பிழைத்த இராவணனைக் கொல்லப் பெருமாள் யுத்த சன்னத்தனானான்.

கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானம் கடந்துபோய்
சிலையும் கணையும் துணையாகச்
சென்றான் வென்றிச் செருக்களத்

'மலைகொண்டு அலைநீர் அணை கட்டி
மதிள்நீர் இலங்கை வாள் அரக்கர்
தலைவன், தலைபத்தறுத் துகந்தான்''
(பெரிய திரு மொழி 1-5-1)

இராவணன் முடிந்தது பற்றிப் பலவிதமான கூற்றுக்கள் காண்கிறோம்! தலைபத்தையும் அறுத்துகந்ததாகக் கூறுகின்றார் மங்கை மன்னன். பத்துத் தலைகளையும் ஏன் அறுக்க வேணும்; எல்லாத் தலைகளும் ஒரே கழுத்தில் தானே பிணைக்கப்பட்டுள்ளது? அந்தக் கழுத்தையல்லவா அறுத்திருக்க வேணும்!

பெரிய திருமொழி முதல் பத்து பத்தாம் திருமொழி முதல் பாசுரத்திலே சாதிக்கிறார் மங்கை மன்னன்.

கன்னார் கடல்சூழ் இலங்கைக் கிறைவன் தன்
திண் ஆகம் பிளக்கச் சரஞ்செல உய்த்தாய்,
(பெரிய திரு மொழி 1-10-1)

கழுத்தைக் கூடத் துண்டிக்கவில்லையாம். வலிய மார்பில் இராமபாணத்தைச் செலுத்திக் கொன்றாராம்.

அப்போது தலைபத்து அறுத்து உகந்தான் என்பது சரியா; அல்லது 'திண் ஆகம் பிளக்கச்சரம் செல உய்த்தான் என்பது சரியா? சாளக்கிராமத்தில் தலைபத்து அறுத்ததாகவும் திருவேங்கட மலையில் திண்ஆகம் பிளந்ததாகவும் சாதித்து, திருவெவ்வுளூர் தரிசித்தபோது சாதிக்கிறார். தலையையும் உருட்டவில்லையாம், மார்பையும் பிளக்கவில்லையாம், முடிகளைத் தான் உருளும்படி பாணம் விட்டாராம்.

'தையலாள்மேல் காதல் செய்த தானவன்
வாள் அரக்கன்
பொய்யிலாத பொன்முடிகள் ஒன்பதோடு
ஒன்றும், அன்று

செய்தவெம் போர்தன்னில் அங்கோர்
செஞ்சரத்தால்உருள
எய்த எந்தைஎம்பெருமான்
எவ்வுள் கிடந்தானே!' (பெரிய திருமொழி 2-2-2)

திருநாங்கூர் வைகுந்த விண்ணகரப் பாசுரத்திலே இன்னும் கொஞ்சம் வேறு அங்கங்களையும் சேர்த்துக் கொள்ளுகிறார். இல்லை சேர்த்துக் கொல்லுகிறார்! பத்து முடிகளுடன் இருபது தோள்களும் உதிர்ந்து விட்டனவாம்.

'மின்அனைய நுண்மருங்குல் மெல்லியற்காய் இலங்கை
வேந்தன்முடி ஒருபதும், தோள் இருபதும்போய்
உதிர
தன்னிகரில் சிலைவளைத்து அன்று இலங்கைபொடி
செய்த
தடந்தோளன் மகிழ்ந்தினிது மருவிஉறை கோயில்
செந்நெலோடு செங்கமலம் சேல் கயல்கள் வாளை
செங்கழுநீரொடு மிடைந்து கழனி திகழ்ந்தெங்கும்
மன்னுபுகழ் வேதியர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்குமட நெஞ்சே!''
(பெரிய திருமொழி 3-9-5)

இப்படியாக;

''வாள்நெடுங்கண் மலர்க் கூந்தல் மைதிலிக்கா இலங்கை
மன்னன்முடி ஒருபதும், தோள் இரு பதும் போய்
உதிர
தாள் நெடுந்திண்சிலை வளைத்த தயரதன் சேய்''
(பெரிய திருமொழி 3-10-6)

என்று அரிமேயவிண்ணகரத்திலும்

''கல்லார் மதிள் சூழ் கடி இலங்கைக் காரரக்கன்
வல்லாகம் கீள வரிவெஞ் சரம் துரந்த
வில்லாளன்,'' (பெரிய திருமொழி 6-8-5)

என்று நறையூரிலும் சேவை தருகிறான். இதனால் என்ன பெறப்படுகிறது?

பெருமாள் தன் பாணத்தாலே இராவணன் தலைகள், முடிகள் கைகள், 20 தோள்களையும் துணித்திருக்கிறார். மார்பிற்குக் கீழே தாக்குவது யுத்த தர்மமல்ல. க்ஷத்திரிய தர்மமல்ல.

அதாவது இராவணனுடைய சகல அங்கங்களையுமே தாக்கிவிட்டார் பெருமாள் தன் பாணத்தாலே. இந்த அங்கங்களால் மற்றவைகளை உபலட்சணமாகச் சேர்க்க வேணும். இப்படியாக அங்கம் அங்கமாக இராவணனை வதைத்ததற்குக் காரணம் என்ன?

வெற்றியடைந்த ஆனந்தத்திலே குரங்கினங்கள் ஆடிய படி இராவண சேனைகள் தோற்றமை தோற்றக் கூறியிருக்கிறார் மங்கை மன்னன்.
Eye Witness :-

மனங்கொண்டேறும் மண்டோதரி முதலா
அங்கயல் கண்ணினார்கள் இருப்ப
னங்கொள் மென்முலை நோக்கம் ஒழிந்து,
தஞ்சமே சில தாபதரென்று
புனங்கொள் மென்மயிலைச் சிறைவைத்த
புன்மையாளன் நெஞ்சில் புக எய்த
அனங்கள் அன்ன திண்டோள் எம்பிரானுக்கு
அஞ்சினோம் தடம்பொங் கத்தம் பொங்கோ!'
(பெரிய திருமொழி 10-2-8)

இங்ஙனமாக ஆழ்வார்களுடைய ஈரச் சொற்களைக் கொண்டு சேவித்து, இராமபிரான் இராவணனை மாய்ப்பதற்கு 'சிலையும் கணையும் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து' என்றும், 'அரக்கர் தலைவன் தலைபத்து அறுத்து உகந்தான்' என்றும், 'தின் ஆகம் பிளக்கச் சரஞ்செல உய்த்தான்' என்றும்,

அரக்கன் 'பொய்யிலாத பொன் முடிகள் ஒன்பதோடு ஒன்றும், செஞ்சரத்தால் எய்தான்' என்றும், 'இலங்கை வேந்தன் முடி ஒருபதும், தோள் இருபதும் போய்உதிரத் தன்னிகரில் சிலை வளைத்தான்' என்றும்,

ஆழ்வார்கள் சாதித்த (Wound Certificate) இப்படியான சேதிகளைத் தம் திருவுள்ளத்தில் தேக்கிக் கொள்கிறார் கம்பநாட்டாழ்வார். இவைகளைத் தம் திருவாக்கினால் வெளியிடும்போது ஒரு புரட்சியையே உண்டாக்குகிறார்!

வைணவனுக்கு ஓர் லட்சணம் கூறப்படுகிறது;

பிறர் நோவு படுவதைக் கண்டு 'ஐயோ' என்று இரங்க வேணும்; இவ்வளவும் படட்டும் என்றிருப்பானாகில் அவன் வைணவன் இல்லை. ஆழ்வார்களின் ஈரச் சொற்களின் படி இராமபிரான், இராவணனின் பத்துத் தலைகள், முடிகள், மார்பகம், இருபது தோள்கள் இவைகளை எல்லாம் தன் பாணத்தாலே துண்டந்துண்டமாகத் துணித்துள்ளார்;

இந்த ஆழ்வார்களின் ஈரச் சொற்களைப் படித்த, படிக்கும், படிக்கப்போகும் ஸ்ரீவைணவ பாகவத உத்தமர்கள் திரு உள்ளங்களின் நிலை என்ன?

பதறிற்றா? பதறுகிறதா? பதறுமா?

இந்த அதிசயத்தை நடத்திக் காட்டுகிறார் கம்பநாடர்.

எந்தக் கண்களால் இந்தக் கோரங்களைப் பார்த்தால் நம் உள்ளமும் பதறுமோ, அந்தக் கண்களால் நம்மையும் இராவணன் உடலைக் காணச் செய்கிறார். இராவணன் மாண்ட சேதி எட்டுகிறது அவன் மனைவி மண்டோதரிக்கு. மண்டோதரி பத்தினிகளில் ஒருத்தி. சீதைக்கு நிகரான பத்தினியே. துடித்து, பதைத்து, விம்மி, வெருவி, ஓடோடி வருகிறாள் யுத்த களத்திற்கு.

சார்ங்கம் உதைத்த சரமழைக்கு நிகராகப் பீறிடுகிறது துக்கக் கண்ணீர் மழை.

போர்க்களத்தில் ஒப்பாரி ஏது? என்ற தடையும் அவளைத் தடுக்கவில்லை. மனம் உடைந்து வாய்விட்டுப் புலம்புகிறாள். இதுவா என் கணவன் இராவணனுடைய உடல்!

மன்னிக்க வேணும். மண்டோதரி வாயில், 'இராவணன் உடல்' என்று வருமா; ஆழ்வார்கள் திருவாக்கிலிருந்து வரலாம், பாகவதர்கள் திருவாக்கில் வரலாம். இதை அறிந்து கவி அமைக்கின்றார் கவிச்சக்கரவர்த்தியான கம்பர். மண்டோதரி புலம்புகிறாள் 'திருமேனி' என்று. இறைவனுடையதை—இறைவன் சம்பந்தம் உடையவர்களுடையதை உடம்பு என்று சொல்வது அபசாரம். திருமேனி என்றே குறிக்க வேண்டும்.

இதே புனிதத் தன்மையை யாரும் ஆட்சேபிக்க இயலாதபடி இராவணனின் உடலுக்கு ஏற்றிக் காட்டுகிறார் கல்வியிற் பெரிய கம்பர்.

"திருமேனி!"

இது சாதாரண திருமேனியா?

மலையையே எடுத்த திருமேனியல்லவா! மலைபோல் இப்போது வீழ்ந்து கிடக்கிறது. வெற்பு எடுத்த திருமேனி;

சர்வசாதாரண மலையைத் தூக்கிய திருமேனியா இது: அழிவின் அறிகுறி வெள்ளெருக்கு; ஒருவர் வீட்டில் வெள்ளெருக்கு முளைத்தால் அந்த வீடு அதோகதி. அந்த வெள்ளெருக்கின் பால், யார் திருமேனியில் பட்டாலும், அந்த பாகம் கொதறி விடும்.

இப்படியான இவ்வ வெள்ளெருக்கை ஒருவர் தன் தலையிலே முளைத்துக் கொண்டால் அவரை ஒன்றும் செய்யாது அந்த வெள்ளெருக்கு.

காரணம் !

அந்த வெள்ளெருக்கையும் அவர் அழிக்கக்கூடியவரே! தான் அழிக்கும் கடவுள் என்பதைக் காட்டவே அதைத் தலையில் ஏற்றினார். இப்படியாக வெள்ளெருக்கைத் தலையில் அலங்காரமாக அணிந்துள்ள அழிக்கும் கடவுளான சிவன் என்ற பயமே இல்லாமல் அவர் தேவியோடு அமர்ந்துள்ள திவ்ய சமயமாக செந்தூக்காகத் தூக்கிவிட்டது இராவணன் திருமேனி!

'வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி'

இப்படியான திருமேனியில் ஏதோ ஒரு இடத்தில் படுகாயம் ஏற்பட்டு உயிர் பிரிந்திருந்தால் சரி! ஆனைக்கும் அடிசறுக்கும் என்றபடி.

'ஆனால் ஐய்யய்யோ! இந்தத் திருமேனி அங்கம் அங்கமாக அல்லவா துளைக்கப்பட்டுள்ளது பாணத்தினால். எள் போட, காயம்படாத இடம் இல்லையே!

எள் போட, காயம்படாத இடம் இல்லையே!

'எள் இருக்கும் இடமின்றி இழைத்த வாறோ!'

ஆழ்வார்கள் இராவணனுடைய முடியிலிருந்து முகம், கைகள், மார்பு வரையில்தான் காணமுடியும். மண்டோதரிக்கு அதற்கும் கீழே பாதம் வரை சேவிக்க உரிமை உண்டு.

'திருமேனி மேலும் கீழும்
எள் இருக்கும் இடமின்றி இழைத்தவாறோ!'

மண்டோதரி திகைக்கிறாள்! ஏன் இப்படி இராவண னுடைய பாதாதிகேசம் வரை துளைக்கப்பட்டுள்ளது!

வீரர்களுக்கு அவர்களுடைய உயிர் பூடகமான ஒரு அங்கத்தில் இருக்கும். ஜடாயு தன் துடையிலே இருந்தது என்றான் ராவணனிடம் போர் புரிந்தபோது. அதுபோல அனை வருக்கும் அப்படித்தான். ஒரு வேளை இராவணனுடைய

உயிர் எந்த பூடகமான அங்கத்தில் இருக்கிறது என்பதைத் தெரியாத இராமபாணம் ஒவ்வொரு அங்கமாக சல்லடைத்ததோ!

'திருமேனி மேலும் கீழும்
எள் இருக்கும் இடமின்றி
உயிர் இருக்கும் இடம் நாடி இழைத்தவாறோ!'

இதுவும் சரியல்ல!

யார் உடலிலும் சிரசைத் துண்டித்தால் மார்பைப் பிளந்து விட்டால் உயிர் போகத்தான் செய்யும். எனவே, அங்கம் அங்கமாக பாணம் இராவணன் உடலைத் துளைத்ததற்குக் காரணம் இருக்கவே வேணும்.

ராட்சசக் கூட்டங்கள் ஆடிப்பாடி அழுதார்கள் இராவணன் இறந்த காரணத்தைச் சொல்லி. அதாவது இராவணன் தன் பத்தினியான மண்டோதரியை விட்டு மென்மயிலான சீதையைச் சிறையில் வைத்த புன்செய்கையால் அவன் நெஞ்சில் ராமபாணம் எய்யப்பட்டது என்றார்கள்.

மனங் கொண்டு ஏறும் மண்டோதரி முதலா
அங்கயல் கண்ணினார்கள் இருப்ப
தனங் கொள் மென்முலை நோக்கம் ஒழிந்து,
தஞ்சமே சில தாபதர் என்று
புனங்கொள் மென்மயிலைச் சிறைவைத்த
புன்மையாளன் நெஞ்சில் புக எய்த
அனங்கன் அன்ன திண்தோள் எம்இராமற்கு
அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

சீதையை சிறையில் வைத்தான் இராவணன் அவன் நெஞ்சில். அதனால் பாணம் புகுந்ததாம். இவ்வளவு தான் சொல்ல முடியும் இந்த அரக்கர்களால். பத்தினியான மண்டோதரியின் புத்திக் கூர்மை இன்னும் நுண்ணியதாக ஊடுருவிப் பாய்கிறது. பத்தினியாளவள் சானகி; அவளை வெறும் வெளிச் சிறையில் அசோக வனத்தில் வைத்[illegible]

யாம் இராவணன், சீதையைத் தன் மனத்திலேயே அல்லவா வைத்துச் சிறைப்படுத்தினான். இராவணன் இதயம் தெரிந்து பேசக் கூடியவள் மண்டோதரிதான்.

சீதையை ஏன் மனச் சிறையில் வைக்க வேணும்? அவள் மீது காதல் கொண்டான்; ஆனால், சீதை அவன் மனதில் புகுவதாக இல்லை. அதனால் சீதையைத் தன் மனச் சிறையில் வைத்து விட்டான்.

''சானகியை மனச்சிறையில் கரந்த காதல்''

இப்படியான ஒழுக்கக் கேடான காதலை, இராவணன் மார்பில், உள்ளத்தில் புகுந்து தேடிற்றாம் இராமபாணம். அந்தப் பாழும் காதல் அவன் உள்ளத்தில் மாத்திரம் இல்லையாம்; பாதாதி கேசம் வரையில் பரவி இருந்ததாம்! எனவே இராம பாணம்,

''சானகியை மனச் சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக் கருதி
உடல்புகுந்து தடவியதோ ஒருவன் வாளி!

இப்படி உடல் முழுவதும் தடவக் கூடிய பாணம் ஒப்பற்றவனுடையதாக இருக்க வேணும். ஒருவன் வாளி!

சீதையாலே இராவணனுக்கு மரணம் ஏற்பட்டது. தன் கணவனுக்கு மரணத்தைத் தந்து, தன் குழலிலிருக்கும் மலரை அகற்றியவள் சீதை. இவளிடம் மண்டோதரி எந்த மனப்புான்மையைக் காட்ட வேணும்?

தன் பத்தினி நிலைமைக் கேற்பப் பாடி அழுகிறாள். அவள் செய்த குற்றம் என்ன! என்னைப் போல் அவள் கைம்மை எய்தலாமா? அவளாவது அவள் கணவனுடன் மலர் முடித்த கூந்தலுடன் வாழட்டும் என சீதையின் திருக்குழலிலே மலரைத் தேன் சொட்டும் மலரைச் சூட்டித் தன் பெருந்தன்மையை வெளியிடுகிறாள் மண்டோதரி. கம்பனுடைய சூத்திரம் இது!

''கள் இருக்கும் மலர்க் கூந்தல்
''சானகியை''

இப்போது முழுப் பாட்டையும் காணலாம்.

வெள் எருக்கன் சடை முடியான்
வெற்பு எடுத்த திருமேனி மேலும் கீழும்
எள் இருக்கும் இடம் இன்றி
உயிர் இருக்கும், இடம் நாடி இழைத்தவாறோ?
கள்ளிருக்கும் மலர்க்கூந்தல்
சானகியை மனச் சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக் கருதி
உடல் புகுந்து தடவியதோ! ஒருவன் வாளி!

இரண்டாம் முறையாக எனது இனிய நண்பர் மி. ம. பு. போ. தி. எ. பயங்கரனாரின் திருமுக மண்டலத்தை நோக்கினேன்; ஐயகோ! அவர் அதைத் தொங்கப் போட்டுக் கொண்டு தம் திருக்கண்களிலிருந்து நீர் சொரிய விக்கிக் கொண்டிருந்தார். அதைத் தடை செய்து அபசாரப் படாமல் விட்டேன்.

மூன்றாவதான தண்டனை இரணியன் விஷயத்திலே நடந்தது தான். முதலில் கவனித்த சிசுபால தண்டனையில் விவாதமில்லை. ஒரே வெட்டில் வீழ்ந்தது தலை; ஒரே தட்டில் என்றும் சொல்லலாம்.

இராண்டாவதாகக் கவனித்த இராவணனின் தண்டனையில் தலைபத்து அறுத்து நடந்ததாக ஆரம்பித்து அங்கம் முழுவதும் அணு அணுவாகத் துளைக்கப்பட்டதாகப் பேசப்பட்டது.

மூன்றாவதான இரணிய தண்டனை நடந்தது எப்படி எனக் கவனிப்போம்.

சிசுபால தண்டனை சக்கரம் பிரயோகிக்கப் பட்ட தாம்பூலத் தட்டால் தரப்பட்டது. இராவண தண்டனை

நாராயண அஸ்திரத்திலிருந்து புறப்பட்ட அம்பால் தரப் பட்டது. எனவே, இரு தண்டனைகளும் ஆயுதங்களால் தரப்பட்டன.

இரணிய தண்டனை பெருமாளுடைய திருக்கரத்தினா லேயே அளிக்கப்பட்டது. கரம் அல்ல கரத்தின் விரல் களால்; விரல்களும் அல்ல; நுனியில் வளர்ந்திருந்த நகங்க ளால் அளிக்கப்பட்டது. படைகள் திவ்யாயுதங்கள், உதவி யில்லாமலேயே பெருமாள் விரோதிகளைத் தொலைக்க முடியும் என்ற பெரிய உண்மை வெளியாயிற்று. பெரியாழ் வார் சாட்சியம்.

**கோளரியின் உருவம் கொண்டு அவுணன் உடலம்**
**குருதி குழம்பி எழக் கூர் உகிரால் குடைவாய்!**
**ஆள எனக்கு ஒரு கால் ஆடுக செங்கீரை**
**ஆயர்கள் போர் ஏறே! ஆடுக! ஆடுகவே!**

**(பெரி. ஆழ் 1-6-2)**

திரு மங்கை மன்னன் வழி மொழிவது;

**வெய்யனாய் உலகு ஏழுடன்**
**நலிந்தவன் உடலகம் இருபிளவா!**
**கையில் நீள் உகிர்ப் படையது**
**வாய்த்தவனே! எனக்கு அருள் புரியே!**
**மையினார்தரு வராலினம் பாய**
**வண்தடத்திடைக் கமலங்கள்**
**தெய்வம் நாறும் ஒண் பொய்கைகள் சூழ்**
**திரு வெள்ளறை நின்றானே!**

(பெரியதிருமொழி 5-3-3)

இரணியனது உடலை இருபிளவாக நகத்தால் கீறிய போது திருவாழி திருச் சங்கத்தைத் தரிக்காமல் எம்பெருமான் இருந்தாரோ எனச் சந்தேகமே வேண்டாம்.

இதோ : கறை நெடு வேல்வலவன் கலிகன்றி சொல் கேளுங்கள்;

மறுக்க முடியாது;

அவர் கறை நெடு வேல் வலவன்!

"சிங்கமதாய் அவுணன், திறல் ஆகம் முன் கீண்டு உகந்த
சங்கம் இடத்தானைத் தழல் ஆழி வலத்தானை
செங்கமலத்து அயன் அனையார் தென் அழுந்தையில்
மன்னி நின்ற
அம்கமலக் கண்ணனை அடியேன் கண்டு
கொண்டேனே!'
(பெரிய திரு மொழி 7-6-1)

Eye Witness :

நேரில் பார்த்துச் சேவித்தாராம். இந்த தண்டனையைத் தந்தபோது இன்னொரு விசேஷம் காண்போம்! சிசுபாலனைக் கொன்றது கண்ணனாகிய ஒரே மனிதத் திருமேனியால்; இராவணனைக் கொன்றதும் இராமனான ஒரே மனிதத் திருமேனியால். இரணியனுக்குத் தண்டனையளிக்க இரண்டு திருமேனிகளை மானிடமும் சிங்கமும் ஆன இரு திருமேனிகளை இணைக்க வேண்டியதாயிற்று. இதைக் கலியன் ஒலியில் கேட்போமே! இதையும் நேரில் சேவித்தபடியே பேசுகிறார்;

உளைந்த அரியும் மானிடமும்
உடனாய்த் தோன்ற ஒன்றுவித்து
விளைந்த சீற்றம் விண் வெதும்ப
வேற்றோன் அகலம் வெஞ் சமத்து!
பிளந்து வளைந்த உகிரானைப்
பெருந்தண் செந்நெல் குலை தடித்து
களம் செய் புறவில் கண்ணபுரத்து
அடியேன் கண்டு கொண்டேனே!
(பெரியதிருமொழி8-8-4)

இன்னொரு விசேஷத்துடன் இக்கருத்தை முடிக்கலாம்.

சிசு பாலதண்டனையைப் பற்றிய ஆழ்வார்கள் பாடல்கள் மிகச் சிலவே! இராவண தண்டனையைப் பற்றி அடுத்த படி அதிகமான பாடல்கள். ஆனால் இரணிய தண்டனையைப் பற்றிப் பலப்பல பாடல்கள் உள்ளன. காரணமும் இதற்குப் பல பல தான்! சிசுபால தண்டனைக்காகவே மட்டுமல்ல கண்ணனாக அவதரித்தது. இராவண தண்டனைக்காக மட்டும் அல்ல இராமாவதாரம், தண்டகவன முனிவர்கள், பல தம்பியர்களுடன் பழகவும் தான். இளையவர்கட்கு அருளுடையான் இராகவன்; ஆனால் இரணிய தண்டனைக்காகவேதான் நரசிம்மாவதாரம். மற்ற தண்டனைகளை அளிக்கப் பெருமாள் திருஅவதாரம் செய்து வளர்ந்து கொண்டிருந்தார்.

இரணியதண்டனைக்காக அப்படி முன்பே பிறந்து வளர்ந்து கொண்டிருக்கவில்லை. க்ஷணமாத்திரத்திலே நேர்ந்த அவதாரம். பிரகலாதன் பிரார்த்தித்த மாத்திரமே பிறந்தருளினாயே என சபாஷ் கொட்டுகிறார் பெரியாழ்வார்.

**அளந்து இட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே**
**வளர்ந்திட்டு வாள் உகிர்ச் சிங்க உருவாய்**
**உளம் தொட்டு இரணியன் ஒண் மார்பு அகலம்**
**பிளந்திட்ட கைகளால் 'சப்பாணி' (சபாஷ்)**
**'பேய்முலை உண்டானே' சப்பாணி!**

*(பெரியாழ்வார் திருமொழி 1-7-9)*

நீயும் தான் கொட்டப்பா 'சபாஷ்' என்று கேட்கிறார் பெரியாழ்வார்.

அடுத்தபடியாக இரணிய தண்டனை நிறைவேற்றப் பட்டதை விரிவாக அநுபவிப்போம்!

**மெய் நாவன், மெய் அடியான்**
**விஷ்ணு சித்தன் விரித்த தமிழ்**
**உரைக்கலாமே!**

இதே திரையில் படம் ஓடுகிறது; பாருங்கள்.

''உரம் பற்றி இரணியனை உகிர் நுதியால்
ஒள்ளிய மார்பு உறைக்க ஊன்றிச்
சிரம் பற்றி முடி இடியக் கண்பிதுங்க
வாய் அலரத் தெழித்தான் கோயில்
உரம் பெற்ற மலர்க்கமலம் உலகளந்த
சேவடி போல் உயர்ந்து காட்ட
வரம்புற்றகதிர்ச் செந்நெல்தாள் சாய்த்துத்
தலைவணங்கும் தண் அரங்கமே''

(பெரிஆழ் 4-9-8)

இரணியவதத்தை இப்படியா பாடுகிறது?

சாது பெரியாழ்வார் பாடலும் மந்தமே. இதோ! நாலு கவிப் பெருமாளைக் கேளுங்கள்; வண்ணத் திரைப் படமாகவே காட்டுகிறார். இல்லை, ஒலி ஒளி படமாகவும் காட்டுகிறார். கொஞ்சம் மூச்சுப் பிடித்தும் பாடவேண்டும். இரணியவதத்தைப் பெருமாள் புரிந்த அழகு!

''தளை அவிழ் கோதை மாலை இருபால் தயங்க
எரிகான்று இரண்டு தறுகண்,
அளவெழ! வெம்மை மிக்க அரியாகி, அன்று
பரியோன் சினங்கள் அவிழ
வளை உகிர் ஆளிமொய்ம்பின் மறவோனது ஆகம்
மதியாது சென்று ஒருகிரால்
பிளவு எழ விட்ட. குட்டம் அது வையம் உரை
பெரு நீரின் மும்மை பெரிதே''

(பெரிய திருமொழி 11-4-4)

இந்த வேகத்தையும் அட்டகாசத்தையும் நம்மால் சமாளிக்க முடியாதுதான்!

கன்னிநல் மாட மங்கையர் தலைவன் காமரு சீர்க்கலி கன்றியைப் பிரார்த்திப்போம் தயவுசெய்து நிதானமாக

வும், கருத்தை நாம் அறிந்துகொள்ளும் வகையிலும் பாசுரம் சாதிக்கவேணுமென்று. ஆம்; மங்கை மன்னனும் மனம் இசைந்து இதோ பாடுவதைக் கேளுங்கள் :

**''பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன்**
**வாயில் ஓர் ஆயிரம் நாமம்**
**ஒள்ளிய வாகிப் போத ஆங்கு, அதனுக்கு**
**ஒன்றும் ஓர் பொறுப்பிலன் ஆகிப்**
**பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண்புடைப்பப்**
**பிறை எயிற்று அனல் விழிப் பேழ்வாய்**
**தெள்ளிய சிங்கமாகிய தேவைத்**
**திருவல்லிக்கேணி கண்டேனே''**

(பெரிய திருமொழி 2-3-8)

இந்த சிங்கம் செய்த காரியங்கள் மூன்று :

1. பிறை எயிறு காட்டியது.
2. அனல் விழி காட்டியது.
3. பேழ் வாய் காட்டியது.

ஏன் இப்படி மூன்று நிலைகளில் சேவை? இரணியன் செய்த மூன்று காரியங்களுக்கு எதிர்த்தட்டாக 3 பதில் காரியங்களாம். முதலிலே :

பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன் என்ற சொல் தொடர் வந்துள்ளது. பிறகு பொறுப்பிலன் ஆகிப் பிள்ளையைச் சீறி என வருவானேன்?

தன் சிறுவன் என்ற பிறகு பிள்ளையைச் சீறி என்று மறுபடியும் இரண்டாந்தரமாகக் கூறினால் நாலுகவிப் பெருமாள் பாடலும் இரண்டாந்தரமாகுமே.

பள்ளியில் ஓதி வந்த பிரகலாதனைத்தன் சிறுவனாக எண்ணினான் இரணியன் - இது சரியா?

அவன் வாயில் ஓர் ஆயிரம் நாமம் ஒள்ளியவாகிப் போத ஆங்கு அதனுக்கு ஒன்றும் ஓர் பொறுப்பிலன் ஆகியதால்,

பிரகலாதனை, இரணியன் தன் சிறுவன் என்று உரிமை கொண்டாடும் யோக்யதையை இழந்தான்.

பிரகலாதன் தெள்ளிய சிங்கமாகிய தேவுதன் சிறுவனானான், உடனே தகப்பனற்ற பிரகலாதனுக்குத் தகப்பனானான் பெருமாள், எந்தை தந்தை தம்மான் ஆனான், எம்பெருமான்.

எனவே, இரணியன் சீறிய போது பிரகலாதன் எம்பெருமானுடைய பிள்ளையாகி விட்டான்.

எனவே இங்கு தன் சிறுவன் வேறு பிள்ளை வேறு.

எம்பெருமானது பிள்ளையாகிய பிரகலாதனைப் பார்த்து இரணியன் மூன்று காரியம் செய்தான்.

பிள்ளையைச் 1. சீறி
2. வெகுண்டு
3. தூண்புடைப்ப

எம்பெருமானும் 3 எதிர்க் காரியங்களைச் செய்தான்.

அதாவது:

இரணியன் பிள்ளையைச் சீறிய போது எம்பெருமாள், பிறைஎயிற்றைக் காட்டிப் பல்லை நறநறவென்று கடித்தான்.[1]

இரணியன் பிள்ளையை வெகுண்ட போது எம்பெருமான் அனல் விழியைக் காட்டிக் கோபாவேசனானான்.[2]

இரணியன் தூண்புடைத்த போது எம்பெருமான் பேழ்வாய் திறந்து கோபமாகக் கர்ஜித்தான்.[3]

இப்படியாக இரணியன் ஒன்றுக்கு மேல் ஒன்றாகக் காரியம் செய்யவும் பெருமாளும் வரிசைக் கிரமமாகக் காரியத்தைச் செய்த அழகைச் சேவித்த மங்கை மன்னன், மங்களாசாஸனம் புரிந்தருளுகிறார். இது சாதாரண மூர்க்கமான சிங்கமல்ல. இவன் தெள்ளிய சிங்கம் ஆகிய தேவன்.

தன்னை இகழ்ந்து தூணைப் புடைத்தமைக்காக எம்பெருமான் கோபிக்கவில்லையாம்!

தன் பிள்ளை, தன் பாகவதன், பக்தன் வணக்கத்திற் குரிய பெருமாளை அவமதித்துப் புடைத்ததற்கே அது பொறுக்காமல் பேழ்வாய் திறந்து கர்ஜித்தானாம் எம்பெருமான்; தெள்ளிய சிங்கம் ஆகிய தேவன். அதனால் தான்

**''பொங்கி அமரில் ஒருகால் பொன் பெயரோனை வெருவ**
**அங்கு அவன் ஆகம் அளந்திட்டு ஆயிரந்தோள் எழுந்து ஆட**
**பைங்கண் இரண்டு எரிகான்ற நீண்ட எயிற்றோடு பேழ்வாய்**
**சிங்க உருவில் வருவான் சித்திரகூடத்து உள்ளானே.**

(பெரிய திருமொழி 3-3-8)

இப்படி சேவை சாதித்த எம்பெருமான் இரணியனுக்குத் தந்த தண்டனையை மறுபடியும் பயங்கரமாக விவரிக்காமல் சுருக்கமாகக் கூற வேண்டுமென்று விரும்புகிறீர்கள்.

மானவேல் கலியன் வாய் ஒலி கேட்போம்!

**''முடி உடை அமரர்க்கு இடர் செய்யும்**
**அசுரர் தம் பெருமானை அன்று அரியாய்**
**மடியிடை வைத்து மார்வை முன் கீண்ட**
**மாயனார் மன்னிய கோயில்**
**படியிடை மாடத்து அடியிடைத்தூணில்**
**பதித்த மன் மணிகளின் ஒளியால்**
**விடிபகல் இரவு என்று அறிவு அரிதாய**
**வெள்ளியங்குடி அதுவே.''**

(பெரிய திருமொழி 4-10-8)

**மடியிடை வைத்து**
**மார்வை முன்கீண்ட மாயனார்**

என்று ஆறங்கம் கூற அவதரித்த அருள்மாரியின் வாக்கிற்குச் சிகரமாகவும் ரத்தினச் சுருக்காகவும் அமைகிறது,

வேதம் தமிழ் செய்த மாறன் பாடல்

**"ஆகம் சேர் நர சிங்கமதாகி, ஓர்**
**ஆகம் வள் உகிரால் பிளந்தான் உறை**
**மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம்**
**ஏகம் எண்ணும்! இராப்பகல் இன்றியே!**
(திருவாய் மொழி 4-3-7)

இராப்பகலின்றி எண்ணுகிறதாம் நம்மாழ்வார் மனம். அவர் மனம் இதையே எண்ணுகிறதாம்! 'ஏகம் எண்ணும் என் மனம்'.

ஏன் எம்பெருமான் இரணியனுடைய மார்பைப் பிளக்கவேணும்; நம்மாழ்வார் மிக அழகாகப் பதில் சொல்லி விளக்குகிறார். மார்பில் தான் இருக்கிறது மனம்.

**"திட விசும்பு எரி வளி நீர் நிலம் இவைமிசை**
**படர் பொருள் முழுவதுமாய்! அவை அவை தொறும்**
**உடல் மிசை உயிர் எனக் கரந்து**
**எங்கும் பரந்து உளனே."**
(திருவாய் மொழி 1-1-7)

பரந்து உள்ள எம்பெருமானை இரணியனது மனம்தான் ஒப்புக்கொள்ள மறுத்து விட்டது. எனவே, அபசாரப்பட்டது இரணியனுடைய மனம் ஆகும். அதனால்தான் விளைந்தன அனர்த்தங்கள் எல்லாம். இரணியனது நெஞ்சையும் தம் நெஞ்சையும் ஒப்பிட்டுப்பார்க்கிறார் நம்மாழ்வார்,

**"உயர்வற உயர்நலம் உடையவன் எவன் அவன்**
**மயர்வற மதி நலம் அருளினன் எவன் அவன்**
**அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன் அவன்**
**துயர் அறு சுடர் அடி தொழுது எழு என் மனனே!"**
(திருவாய் மொழி 1-1-1)

என்று தம் நெஞ்சுக்கு உபதேசம் செய்யும் வகையில் திருவாய் மொழியை ஆரம்பித்த நம்மாழ்வார்,

தம் நெஞ்சோடு அடிக்கடி பேசிக் கொள்வது சகஜம் தானே! நம்மாழ்வார் தம் நெஞ்சோடு பேசுகிறார்,

**'நல் நெஞ்சே'**

''ஹும்! சரி! என்ன சேதி'' என்று கேட்டது நம்மாழ்வார் மனம்.

நல் நெஞ்சே! எம்பெருமான் நமக்கு அருள் தான் செய்வானே!

''அது எப்படி நீங்கள் சொல்வது'' என்று கேட்டது மனம்! உதாரணம் உண்டா!

ஓ! உண்டு! உண்டு! தன்னிடம் நெஞ்சை வைத்த பாண்டவர்கட்காகத் தன் சபதத்தையும் மீறிப் படை தொட்டவனல்லவா அவன்!

பாரதத்துப் பாண்டவர்க்காய்ப் படை தொட்டான்!

நல் நெஞ்சே! நம்பெருமான் நமக்கருள்தான் செய்வானே!

ராமாவதாரத்தில் 'ஏக வசனன்' என்று எடுத்த பெயரையும் அல்லவா கெடுத்துக் கொண்டு உதவினான். அவனிடம் நெஞ்சை வைக்காதவரை என்ன செய்தானாம்! - என்று கேட்டது மனம். அவனிடம் மனதை வைக்காத கௌரவர்களைநடு நடுங்கச் செய்து விட்டானே.

**''மன் அஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க்காய்படை தொட்டான்**
**நல்நெஞ்சே நம்பெருமான் நமக்கு அருள்தான் செய்வானே!''**

எம்பெருமான் உங்களுடைய நெஞ்சில் இருந்ததால் என்னபலன் உண்டானதாம்?

என் நெஞ்சில் இடம் கொடுத்தேன். உள்ளே இருந்து இந்த ஆயிரம் பாடல்களான திருவாய்மொழியை அல்லவா பாடி விட்டான்! உலகு உய்ய!

**''என் நெஞ்சத்து உள்ளிருந்து**
**இங்கு இரும் தமிழ் நூல் இவை மொழிந்து.''**

*சரி! நெஞ்சத்தில் அவனுக்கு இடம் கொடாதவர் கதி என்ன? ஒரு உதாரணம்! சிறந்த உதாரணம் கேள்!*

*'வன்நெஞ்சத்து இரணியனை! மார்பு இடந்த வாட்டாற்றான்'*

*இரணியனது மனதைப் பிளந்து அவனைத் தண்டித்த காரணத்தை வெளியிட்டுவிட்டார் நம்மாழ்வார்.*

**''என் நெஞ்சத்துள் இருந்து**
**இங்கு இருந் தமிழ் நூல் இவை மொழிந்து,**
**வன் நெஞ்சத்து இரணியனை**
**மார்பு இடந்த வாட்டாற்றான்;**
**மன் அஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க்காய்ப்**
**படை தொட்டான்,**
**நல் நெஞ்சே நம்பெருமான்**
**நமக்கு அருள்தான் செய்வானே!**

*(திருவாய் மொழி 10-6-4)*

*ஆகா! இப்படியாக இரணியனைத் தண்டித்த நரசிம்ம மூர்த்தியின் பெருமையைப் பேச இயலுமா என பிரமிக்கிறார் நம்மாழ்வார்.*

**எங்கும் உளன் கண்ணன் என்ற மகனைக் காய்ந்து**
**இங்கு இல்லையால் என்று இரணியன் தூண்புடைப்ப**
**அங்கு அப்பொழுதே அவன் வீயத் தோன்றிய, என்**
**சிங்கப் பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே!**

*(திருவாய் மொழி 2-8-9)*

*பராங்குசர் அடைந்த ஆச்சர்யத்தைப் பரகாலர் தீர்மானம் செய்கிற விதம்!*

**கூடா இரணியனைக் கூர் உகிரால் மார்பு இடந்த**
**ஓடா அடல் அரியை உம்பரார் கோமானை**

**தோடார் நறுந்துழாய் மார்வனை ஆர்வத்தால்**
**பாடாதார் பாட்டு என்றும் பாட்டு அல்ல கேட்டாமே'**
*(பெரிய திருமொழி 11-7-4*

*குடலை மாலையாக அணிந்தது ஆச்சரியம். பிரகலாதன் தோன்றிய குடலல்லவா, இதையே பெரியாழ்வார், வாழ்க்கையின் குறிக்கோளாகக் காட்கிறார்—*

**பூதம் ஐந்தொடு வேள்வி ஐந்து புலன்கள் ஐந்து பொறிகளால்**
**ஏதம் ஒன்றும் இலாத வண்கையினார்கள் வாழ் திருக்**
**கோட்டியூர்**
**நாதனை நரசிங்கனை நவின்று ஏத்துவார்கள் உழக்கிய**
**பாததூளி படுதலால் இவ்வுலகம் பாக்கியம் செய்ததே!**
*(பெரியாழ்வார் திருமொழி 4-4-6)*

*நம் கடமை என்ன?*

**எந்தை! தந்தை! தந்தை தம்மூத்தப்பன் ஏழ் படிகால்**
**தொடங்கி**
**வந்து வழி வழி ஆட் செய்கின்றோம், திருவோணத்**
**திருவிழாவில்**
**அந்தியம் போதில் அரி உருவாகி அரியை அழித்தவனைப்**
**பந்தனை தீரப் பல்லாண்டு பல்லாயிரத்து ஆண்டு என்று**
**பாடுதுமே**

*இதுவே நம் மாநாடுகளின் நோக்கம்; சேவை.*

# ஒரே கவி இராமாயணம்

*காணுங்கள் இதோ! இக்கவிச் சித்திரத்தை!*

**''அரியணை அநுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்**
**பரதன் வெண் குடை கவிழ்க்க இருவரும் கவரி வீச**
**விரை செறி குழலி ஓங்க வெண்ணையூர்ச் சடையன் தங்கள்**
**மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான்**
**மௌலி''**

இராம பட்டாபிஷேகந்தான்! நுணுக்கமாக விவரிக்கப் படுகிறது. நாம் நேரில் பார்த்து வைக்கக் கொடுத்தது போல!

*ஏழு காண்டங்களாக அமைந்தது இராமாயணம்!*

இராம பட்டாபிஷேகமும் ஏழு அம்சங்களாக இயம் பப்படுகிறது இக் கவிச் சித்திரத்திலே. ஏழு காண்டங்களின் சாரத்தையும் சேர்த்துக் கலந்த அமுதமே இது.

முடி சூடும் வைபவத்தில் முதல் சேதி

*'அரியணை அனுமன் தாங்க'*

*அடுத்தபடியான சேதி:*

***'அங்கதன் உடைவாள் ஏந்த!'***

ஒரு வானரம் சிங்காசனத்தைத் தாங்குகிறதாம் மற்றொன்று சக்ரவர்த்தியின் சர்வ வல்லமையைக்குறிக்கும்.

விசேஷமுள்ள இடையிலேயே சேர்ந்தபடித் தொங்கும் வாளைத் தாங்குகின்றதாம்.

சரி, சிங்காசனத்தைத் தாங்க வேணும். உடைவாளையும் தாங்க வேணும், அவ்வளவு தானே! ஏன் அங்கதன் அரியணை தாங்கலாகாது? அநுமன் உடைவாளை ஏந்தலாகாது? ஆபத்துதான், பேராபத்து தான். இராமாயணத்தையே திருப்பி எழுத வேண்டியதாகி விடும்.

அநுமனுடைய பெருமை இராமனுடைய திருவடிகளில் கைங்கரியம் (குற்றேவல்) செய்தது மட்டுமல்ல! திக்கற்றவர்கட்கும், தீனர்கட்கும், இராமனது திருவடிகளையே தஞ்சமாகக்காட்டித் தந்ததும், பெற்றுத் தந்ததுமான பெருமையும் அநுமானையே சாரும்.

நாடிழந்து நலமிழந்து வாடிய திக்கற்ற சுக்கிரீவனுக்கு இராமனின் திருவடிகளில் அடைக்கலம் பெறுவித்தது அனுமனே: எதிராளியின் உளவாளி என்று எல்லோரும் சந்தேகித்த சூழ்நிலையிலே வாதாடி, தீனனான வீடணனுக்கு இராமனின் திருவடிகளில் தஞ்சம் அளிக்கச் செய்ததும் இவ்வனுமனே!

இன்றும் இராமனின் திருவடிகளில் சரணம் அடைய விரும்பும் பக்தர்களுக்கெல்லாம் வழியும் வழிகாட்டியுமாக விளங்குபவனும் அனுமனேயாகும். 'திருவடி' என்றாலே அனுமனைத்தான் குறிக்க முடியும் ஸ்ரீவைணவ பரிபாஷையிலே!

எனவே அரியணையைத் தாங்குகிறான் அநுமன்; 'அரியணை அநுமன் தாங்க' என்பது சரியான பாடமல்ல. அது எப்படி? உண்மை! அரியணையையா தாங்குகிறான் அநுமன்? இராமனும் சீதையும் வீற்றிருக்கும் சிங்காசனத்தைச் சுமந்து கொண்டிருக்க வில்லையே அநுமன், அம்பாரி சுமக்கும் யானைபோல, அல்லது பெருமாளைத் தாங்கும் கருடன் போல,

இராமனின் திருவடிகள் பொருந்தியுள்ள 'சிறிய ஆசனத்தை'யே தாங்குகிறான் அநுமன். சிங்காதனத்தை அல்ல.

இதை இன்னும் ஒரு பொருளிலும் கொள்ளலாம். 'அரி' என்பது திருமாலைக் குறிக்கும். அரி அணை என்பது திருமாலின் திருவடிகள் அணைந்துள்ள ஆசனம்.

ஆனால், அரியணை அநுமன் தாங்க! என்றல்லவா விவரிக்கிறார் கவி! ஏன்? இராம காதை இராம பக்தர் கட்குச் சொல்லப்படுகிறது. இராம பக்தர்கட்கு இராமன் சீதையுடன் வீற்றிருக்கும் சிம்மாசனம் முக்யமில்லையாம்! இராமனைத் தஞ்சம் அடைய உதவும் அவன் திருவடிகள் பொருந்தியுள்ள சிரிய ஆசனமே சிறந்த ஆசனமாம் சிம்மாசனத்தையும் விட.

எனவே இராமன் சிம்மாசனம் ஏறியதைவிட உலகோர்க்குத் தஞ்சமாக, இராம பாதங்கள் சிரிய ஆசனம் ஏறியதே பக்தர்கட்குக் கொண்டாட்டமல்லவா? இந்த நுண்ணிய ஆழ் பொருளையே எடுத்த எடுப்பிலேயே, சுட்டிக் காட்டுகிறார் கம்பநாட்டாழ்வார் அநுமன் புரியும் சேவையிலே! இத் திருவடி சேவையில் அநுமனைத் தவிர அருகதை வேறு யாருக்கு உண்டு?

அநுமனை உடைவாள் ஏந்த வைப்போமே! அனர்த்தம் தான்!

'கண்டுவா சீதையை' என்றனுப்பினால், இலங்கையைத் தீப்பற்றி எரியக் கண்டல்லவா வந்தான் அநுமன். தீப்பற்றி எரிக்கவா அனுப்பினான் கருணைவள்ளல்; 'ஊர் தேடிவா' என்ற உத்திரவையே இப்படி நிறைவேற்றி வைத்த அநுமனை, உடைவாளையும் ஏந்த வைத்து விட்டால் என்ன கதியாகும்.

ஆகவே, அநுமன் உடைவாள் ஏந்த வில்லை! ஏந்தலாகாது!

உடைவாளை ஏந்த அங்கதனுக்குத்தான் என்ன அருகதையோ? ஆம்! அப்படிக் கேளுங்கள்!

அலைகடலைத் தாண்டி இலங்கைக்குச் சென்று வந்தான் அநுமன்! சீதையும் மீளவில்லை; இராவணனும் யுத்தகளம் வந்து தொலையவில்லை. இரண்டும் கெட்டான் நிலைமையாகவே இருந்தது.

அங்கதன் சென்றான் தூதாக! இராவணனை, "தேவியை விடுக; அன்றேல் செருக்களத்து எதிர்த்து உன்னின் ஆவியை விடுக!" என்று அறைகூவி அழைத்தான். அமருக்கு அஞ்சி அரண்புக்க இராவணனை அழைத்தான். ஆனால் தூதின் பயன் என்னவாயிற்று? ஏந்திழையாளை விட்டுத் தன்னுயிர் பெறத் தவறிய இராவணன் தலைகள் பத்தும் சின்ன பின்னங்கள் அடையும் முகத்தான் செருக்களம் சேர்ந்தான்! காரியமும் நடந்துவிட்டது!

நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய வாகை சூடிய சிலை இராமன் வாள்வலி விளங்கியது அங்கதன் தூதினாலே தான்; உடைவாளுக்கும் வேலை கிடைத்தது.

அதனாலேதான் அங்கதன் உடைவாளை அருகதையுடன் ஏந்துகிறான்; அவனாலல்லவா உடைவாளுக்கு வேலை கிடைத்தது. அதன் பெருமையை இராமாயணத்தில் விளங்கச் செய்தான்; ராமனை ஜயராமனாக்கினான்.

வாள் பராக்கிரமத்தின் சின்னம். இராமனுக்குப் பராக்கிரமம் எது? 'இராமம் சத்தியம் பராக்கிரமம்!' அதாவது இராமனுக்கு சத்தியமே வாள்! அவன் ஏக வசன விரதனல்லவா?

வாலி இறக்குமுன், தன் மைந்தனான அங்கதனை இராமன் கையில் அடைக்கலமாக ஒப்படைத்தான். அங்கதன் இராமனின் அடிதாழ்தலோடும், தாமரைத் தடங்கணானும் பொன்னுடை வாளை நீட்டி 'நீ இது

பொறுத்தி!' என்றான்! அதாவது, அங்கதனை அடைக்லமாக மாத்திரம் ஏற்றுக் கொள்ளாமல், கிட்கிந்தை இராச்சியத்துக்கு இளவரசாகவும் நியமித்தான்! சுக்கிரீவனின் பட்டாபிஷேகம் கிட்கிந்தையிலே நடைபெற்றது! இப்போது 'அங்கத இளவரசுப் பட்டாபிஷேகம்' அயோத்தியிலே நடைபெறுகிறது ஏக வசன விரதனான இராமன் திருமுன்பே! திரு ஆணையினால், கலியாணத்தின் போது பூநூல் கலியாணமும் இடையில் நடைபெறுவது போன்று!

இதை விட்டுவிட்டு, இந்த மகுடாபிஷேக மும்முரத்தில் அநுமனுக்கு எப்படி உடைவாளைத் தருவதாம்?

அங்கதன், அரியணை தாங்கலாமா? தூது போன அங்கதன் முடிவுரையாக இராவணனிடம் 'துணிந்து உரை (வாழ) உறுதி பார்க்கின் துன்று இருங்குழலை (சீதையை) விட்டுத் (இராமனின் திருவடிகளைத்) தொழுது வாழ்!', என்று அறிவுரை கூறினான். ஆனால் இராவணன் இராமனுடைய திருவடிகளைப் பற்ற வில்லை. அங்கதன் முயற்சி இத்துறையில் கண்ணன் தூதுபோலத் தோல்வியாகவே முடிந்தது!

எனவே அங்கதன் அரியணை (அரியணை) தாங்கவில்லை. தாங்கலாகாது.

திருமாலான இறைவன் உலகில் அவதாரம் செய்வதின் முக்கிய நோக்கம் பக்தர்களை ரட்சிக்கவும், தீயோரைத் தண்டிக்கவுமே! அதாவது சிஷ்ட பரிபாலன துஷ்ட நிக்ரகத்துக்காகவே! அநுமனின் சம்பந்தமுடைய நிகழ்ச்சிகளில் சிஷ்ட பரிபாலனம் காணப்படுகிறது. அங்கதன் சம்பந்தமான நிகழ்ச்சிகளில் துஷ்ட நிக்ரகம் காணப்படுகிறது. எனவே, இராமாவதார இரு நோக்கங்களின் நிறைவை, பட்டாபிஷேகப் பெருவிழாவின் முதல் இரு நிகழ்ச்சிகளில் காட்டுகிறார் கவிச்சக்ரவர்த்தி.

சுக்கிரீவ சரணாகதியை வெற்றிகரமாக நடத்தி, சிஷ்ட பரிபாலனத்தைச் சிறக்கச் செய்கிறான் அநுமன்

கிஷ்கிந்தா காண்டத்திலே! துஷ்ட நிக்ரகத்தை இராவண வதத்தின் மூலம் நிறைவேற்றி வைக்கிறான் அங்கதன் யுத்த காண்டத்திலே!

எனவே மகுடம்புனை விழாவில் அநுமன் அங்கதனு டைய ஈடுபாடுகளைக் காட்டி, **கிஷ்கிந்தா காண்ட யுத்த காண்டங்களின்** சாரத்தையும் குறிப்பாகக் காட்டுகிறார் கவி.

அடுத்து வெளியிடப்படும் விவரங்களைக் காண்போம்.

இராமன் திருமுடியின் மேலே குடை கவிழ்க்கப் பட்டுள்ளது. எதற்காக? முடி சூட்டு மண்டபத்தில் மழை கொட்டுகிறதா? அல்லது வெய்யில் கொளுத்துகிறதா? அப்படி ஒன்றும் இல்லை. 'சக்ரவர்த்தி' என்று பட்டம் சூட்டப் பெறுவதால், கொற்ற வெண் குடையின் கீழ்தான் இருக்கவேண்டும் சக்ரவர்த்தியார். அதுவும் சிங்காதனத் தின் மீது ஏறி எழுந்தருளுகையில் கண்டிப்பாக வேண்டும் கவிகை. எனவே வானூறும் மாமதிபோல் வெண்குடைக் கீழ் மன்னர் தம் கோனாகி வீற்றிருந்து காட்சி தருகிறான் இராமன்.

இப்படியான காரணத்திற்காகத்தான்,

**'பரதன் வெண் குடை கவிழ்க்க!'**

நிழல் தரும் குடையைப் பிடிக்கும் பணியை பரதன் தான் மேற்கொள்ள வேணும். காடு சென்ற போதும் நிழலைப் போல இராமனைப் பின் தொடர்ந்தவன் இலக்குமணன் இல்லையா? —பின் அவன் தானே நிழல் தரவேணும் பரதன் நிழலில் ஒதுங்கி வாழும் குணமுடைய சத்துருக்கணன், இக்குடை நிழலையும் இயக்கித் குதா கலித்திருக்கலாமே!

இந்த இராம பட்டாபிஷேக ரயில் பதினான்கு வருடம் தாமதமாக வந்துள்ளது என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். முழுதும் உலகளித்த தந்தையான

தயரதன் முந்தையோர் முறையினின்றும் வழுவினன் பதினான்கு ஆண்டுகளுக்கு முன்! தான் செய்த இரு பெரும் தவறுகளே இதற்குக் காரணம் என்பது பரதனின் திடமான எண்ணம். அத்தவறுகளில் தலையாயது அவன் கைகேயி வயிற்றில் பிறந்ததுதான். அடுத்தது, குழைக்கின்ற கவரி இன்றி, கொற்ற வெண் குடையும் இன்றி, இழைக்கின்ற விதி முன் செல்ல தருமம் பின் இரங்கி ஏக, மழைக்குன்றம் அனையான் இராமன் மௌலி கவித்திடாமல் காடு சென்ற போது, அச்சமயம் அயோத்தியில் இருந்து கொண்டு, அவனைத் தடுத்துச் சிங்காதனமேறச் செய்து, முடியணிந்த சிரத்தின்மீது குடை கவிழ்க்கத் தவறியது தான்.

ஆழியான் (தயரதன்) உலகம் எல்லாம் தன்னிடம் தந்து இராமன் பூழிவெம்கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி ஏழிரண்டாண்டில் வந்து சிங்காதனம் ஏறும் இச்சமயம் உயிருடன் இருக்கின்ற கைகேயி அன்னை, தன்னை வியாச்சியமாக வைத்து மறுபடியும் பழைய கதையை ஆரம்பித்து விட்டால் 'என்ன நேருமோ' என்ற பயம் பரதனுக்கு உள்ளூர! அயோத்தியின் இளவரசுப் பட்டம் வேறு ஒட்டிக் கொண்டிருக்கிறதே இப்போது பரதனுக்கு. கைகேயி மட்டும் அல்ல; இனி வேறு எவருமே தன்னை முன் தள்ளி இராம பட்டாபிஷேகத்தை மறுபடியும் தடுக்காமல் இருப்பதற்கே, இளவரசு ஏந்தல் பரதர்தாம் எடுத்தே குடையைப் பிடித்தாராம்!'

பரதனின் இராம பக்தியும் தியாகமும் அயோத்யா காண்டத்தில் சுடர் விட்டு மிளிர்கின்றன. தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத் 'தீவினை' என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப் போயின பரதனை நோக்கிய குகப்பெருமானும் ''ஆயிரம் இராமர் நின் கேழ் ஆகுவரா; தெரியில் அம்மா!' என்று வியப்புக் கடலில் அல்லவா மூழ்கினான். பட்டாபிஷேகத்தில்

பரதனுடைய குடை தாங்கும் குற்றேவலைச் சித்திரித்து அயோத்தியில் அவனிருந்த தவத்தை நந்தியம்பதியின் நலத்தை, ஏன் அயோத்யா கண்டத்தின் மேன்மையை நயமாக "பரதன் வெண்குடை கவிக்க" என்று நாட்டிவிடு கிறார் கம்ப நாடர்.

இலக்குவச் சத்துருக்கனர்கட்கு இளவரசுப்பட்டமும் கிடையாது; இன்பமரும் செல்வமும் இவ்வரசின் வாசனையுங்கூட இவர்களை ஒட்டிக் கொண்டதில்லை. அவர்கள் பிறரை அடுத்துப் பணி செய்யவே பிறந்தவர்கள். இக்காரணத்தால்,

'இருவரும்கவரி வீச'

நின்றார்கள் இருபுறமும் பின்னணியிலே!

தற்போதைய சட்ட மன்றங்களில் ஒருவரை சபா நாயகராகத் தேர்ந்தெடுத்தால், அவர் உடனடியாகத் தாவிப் போய் சபாநாயகர் பீடத்தில் அமர்ந்து கொள்வ தில்லை. ஆளுங்கட்சித் தலைவரும், எதிர்க் கட்சித் தலை வரும் அவரை இருபுறமும் கைலாகு கொடுப்பது போல் அழைத்துப் போய் பீடத்தில் அமர்த்துவார்கள். இரு சார் பாருடைய நம்பிக்கைக்கும் பாத்திரமாக இருக்க வேண்டுமாம் அவர்!

அயோத்தித் திருநகரிலும் இரண்டு கட்சிகள் இராமனையே நேசிச்கிற கட்சி ஒன்று! இதற்குத் தலைவன் இலக்குமணன். மற்றொன்று இராமன் பெயரைக் கேட் கவும் விரும்பாத கட்சி பரதன் மீது ஏற்பட்ட அளவு கடந்த பாசத்தாலே சத்துருக்கனனுக்கு இராமனைப் பிடிக்காமல் போய்விட்டது. இராமனைப் பற்றித் துளிக்கூடக் கவலை யும் இல்லையாம் சத்ருக்னனுக்கு. வலது சாரிக் கட்சியின் தலைவன் இலக்குமணன் என்றால், இடது சாரி கட்சியின் தலைவன் சத்துருக்கனனே. இவ்விரு சார்புக் கட்சிகளும் ஆமோதித்து ஆதரித்தனவாம்' இராம முடிசூட்டு விழா

வைபவ மசோதாவை! எனவே இவ்விருவரும் இருபுறமும் பக்கபலமாக நின்று வீசுகின்றனர் கவரியை!

இங்கு ஒரு நுணுக்கம்! இராமனைப் பற்றித் துளிக் கூடக் கவலைப் படாத சத்ருக்கனனும் ஏன் கவரி வீசு கிறான்? தான் வணங்கும் பரதன் இராம சேவையில் ஈடு பட்டுக் கொற்றக் குடை பிடிக்கிறான்! எனவே தானும் அப்பரதன் உகப்பிற்காக அவனுடன் ஒத்துழைத்துக் கவரி வீசுகிறானாம்!

எப்படியென்றால், மதுரகவி ஆழ்வார், தன் குருவான நம்மாழ்வார் திருக்குருகூர்ப் பெருமாளை வணங்கியதால் தானும் அப்பெருமாளை வணங்கியது போல!

சத்துருக்கனன் கவரி வீசினாலும் பரதன் நின்ற பக்க மாகவே நின்று வீசுகிறான்! ஒப்புக்காக இராமனுக்கு வீசுவது போல, பரதனின் மீது படும்படியாகவும், அவன் அநுபவிக்க இயலும்படியாகவும் அவன் வீசியிருக்கலாமே!

இலக்குமண சத்துருக்கனர்களின் சேவையும் தியாகமும் சிறந்து விளங்குவது ஆரணிய காண்டத்தில் தான்? பொருந்தார் கைவேல் நுதி போல் பரல் பாய மெல்லடிகள் குருதி சோர, விரும்பாத கான் விரும்பி வெயி லுறைப்ப வெம்பசி நோய் கூர, இராமனும், சீதையும் வனத்தில் இருக்க நேர்ந்த போது இலக்குமணனே எல்லாக் குற்றேவல்களையும் இயற்றி உடனிருந்தான்! தன் மனைவி ஊர்மிளையையும் அயோத்தியிலேயே விட்டு விட்டு அதே சமயத்தில் இராம பாதுகைகளுடன் திரும்பிய பரதன், அயோத்தியிலும் அடி வைக்காமல், நந்திக் கிராமத்தில் இராமனைப் போலவே சகல இன்பங்களையும் துறந்து வாடிய போது சத்ருக்கனனும் உடனிருந்து வாடினான்.

எனவே, இருவரும் கவரி வீச' என்று இலக்கும சத்ருக் கனர்கள் புரியும் பணியைக் குறிப்பிடுகையில் கம்ப

நாடார் **ஆரண்ய காண்ட** நிகழ்ச்சிகளை மறைமுகமாகக் காட்டுகிறார்.

அநும அங்கத, பரத, இலக்கும சத்ருக்கன சமேதனாக எழுந்தருளியுள்ள பட்டாபிராமன், சீதாராமனாகவும் காட்சியளிக்கின்றான். இராமனுடன் ஒரே சிம்மாதனத்தில் எழுந்தருளியிருப்பதால் சீதையானவள்

**'விரை செறி குழலி ஓங்க''**

என வீற்றிருக்கின்றாள்.

பன்னீராயிரம் பாடல்கள் கொண்ட இராம காதையில் சீதைக்குப் பல்வேறு அடைமொழிகளை ஆங்காங்கு அமைத்து வருகிறார் கவி! இங்குச் சீதையை ''விரை செறி குழலி'' என்றே வாழ்த்துகிறார். திருமகளின் அவதாரம் என்றாவது ஜனகரின் திருமகள் என்றாவது மற்ற குண, மேனி அழகுகளைக் கூறவில்லை.

விரை செறி (மணம் மிகுந்த) குழலி (கேசத்தை உடைய) சீதை. அவள், விரை செறி குழலியாக இல்லா திருந்த காலமும் இருந்தது. அது, பிராட்டி அசோகவனச் சிறையில் இருந்த காலமாகும். அப்போது அவள் களிப்பு ஓங்கி இருக்கவில்லை; ஆனால் கற்பும், குண அழகும் ஓங்கியிருந்தன. இது சுந்தர காண்டத்திலாகும். 'இல் பிறப்பு என்பதொன்றும் இரும் பொறை என்பதொன்றும். கற்பு எனும் பெயரது ஒன்றும் சீதை என்னும் உருவில் களி நடம் புரியக் கண்டதாக இராமனிடம் விவரிக்கின்றான் அநுமன், கண் கண்ட காட்சியாக. ஸ்ரீராமாயணத்தின் மேன்மையே 'சிறையிருந்தவள் ஏற்றம் தான்'' என்று ஸ்ரீ வைணவ ஆசாரியர்கள் தீர்மானித்துள்ளார்கள்! மணமற்ற குழலுடன் மனம் வாடியிருந்த சீதை- இப்போது சிம்மாத னத்தில் இராமனுடனும் சிறந்து விளங்குகிறாள்! பிராட்டி யும் பெருமாளும் ஒரே பீடத்தில் சேர்ந்துள்ள சேர்த்தி யாக எழுந்தருளியிருக்கும்போதுதான் பக்தர்கள் சரணடையத் தக்க சமயமாகும்.

**விரை செறி குழலி ஓங்க**

என்று கவி வாழ்த்தும் போது, சுந்தர காண்ட நிகழ்ச்சிகளை மனதில் வைத்தபடி சீதையை தரிசிக்கும் களிப்பைக் காண்கின்றோம்.

'பிரஜை என்றால் ராஜா பின்னால் ஆடிவரும் வால்' என்பதல்ல, அயோத்தி இராச்சியத்தின் கொள்கை மக்களுக்காகவே என வாழ்ந்தான் மன்னன்! அயோத்தி மக்களின் பண்பையும், மேன்மையையும் பால கண்ட நாட்டுப் படலம் நகரப் படலங்களில் விரிவாகக் காணலாம்.

''The Legal king and Royal Subjects''

'உயிரெல்லாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்'

ஆனால் ''கொள்வார் இலாமையால், கொடுப்பார்களும் இல்லை மாதோ'' என்ற பெருமை, பட்டாபிஷேக வைபவத்தின் போது மறைந்து விடுகிறது! அயோத்தி மக்கள் மிக வள்ளல்கள்! இப்போது இராமனுக்குச் சக்கரவர்த்தியின் திருமுடியையே வழங்குகின்றார்கள். அதை இராமனும் சிரமேற்கொள்ளுகிறான். அதாவது அயோத்தி மக்கள் தங்கள் நல்வாழ்விற்காக, முடி சூட்டும் முகத்தான் இராமனைத் தங்கள் காவலனாக நியமிக்கின்றார்கள்! தங்களை ஆளும் அதிகாரத்தையே மனப்பூர்வமாக தானம் வழங்குகின்றார்கள் இராமனுக்கு! இதுவும் வள்ளல் தன்மை தானே.

'சுதந்திரமாக வாழ நாம் சட்டத்தின் அடிமைகள் ஆவோம்!' (We are the slaves of law so that we may be free!) என்றார் ஒரு ஞானி. தனி நபர் சுதந்திரத்தைத் தியாகம் செய்து, பொது நலத்தை உருவாக்கும் சமுதாயத்தில்தான், தன், தனி உடைமைகளை வள்ளல் தன்மையுடன் வழங்கிக் களிக்கும் சடையப்பர்கள் தோன்றக் கூடும்! ஈத்துவக்கும் இன்பம் அறிந்த சடையப்ப வள்ளல் போன்ற முத்துக்கள் தோன்றுவது பண்புடைய மக்கள் சமுதாயப் பண்ணையிலிருந்து தான். எனவே அயோத்தி மக்கள்

சடையப்பரின் முன்னோர்களே; எனவே, இராமனுக்கு முடியை வழங்கிய வள்ளல் பெருமக்களின் பிரதிநிதிதான் சடையப்பர். அதையே கவி கூறுகிறார், "வெண்ணையூர்ச் சடையன் தங்கள் மரபுளோர் கொடுக்க" என்று!

**பால காண்டத்தின்** எதிரொலிகளைத்தான் அயோத்தி மக்களின் குறிப்பு மூலமாகக் கேட்கிறோம். ஜனநாயக ஆட்சியிலும், குடிமக்களின் ஆதரவின் அடிப்படையில் அமைந்த முடியாட்சியிலும், மகத்தான பொது விஷயங்கள், முதலில் மக்கள் சபையிலும் பிறகு மேல் சபை எனப்படும் பேரறிவாளர் சபையிலும் அங்கீகரிக்கப்பட வேண்டும்.

வெண்ணையூர்ச் சடையான்தங்கள் மரபுளோர் கொடுத்தார்கள் என்றால், மகுடம்புனை மசோதா (Bill of Accession) முதலில் மக்கள் சபையிலே நிறை வேற்றப் பட்டது என்றே பொருள்!

மக்கள் வழங்கிய பிறகு எவ்விதம் வைபவம் பூர்த்திக்கு வருகிறது! என்பதைக் காண்போம். இவர்களிடமிருந்து மகுடத்தை—

'வாங்கி, வசிட்டனே புனைந்தான் மௌலி!

ராஜகுருவான வசிஷ்டர், தவச்சிரேஷ்டர்கள் மேதைகள் குணசீலர்களுடைய கூட்டத்தின் தலைவர்தான். இவர்களின் சின்னம் என்றும் கொள்ளலாம். எனவே மகுடம் அணி மசோதா, மேல், மக்கள் சபையிலும் நிறை வேற்றப்பட்டு விட்டது!

தயரதராமன், ராஜாராமனாகி விட்டான்! ராம ராஜ்யமும் ஆரம்பமாகி விட்டது! பட்டாபிஷேகத்தை ஒட்டியும் பிறகும் நடந்தவை, உத்தர ராமாயணத்தைச் சேர்ந்தவை. எனவே வசிஷ்டர் இராமனுக்கு மகுடம் புனைந்ததைத் தெரிவிக்கும் கம்பர், **உத்தர காண்டத்தை** குறிப்பிட்டார்!

இவ்வண்ணம், இந்த ஒரே கவியில், இராமயணத்தின் ஏழு காண்டங்களையும் பிரதிபலிக்கச் செய்த கவி, கல்வியிற் பெரியவர்தான் என்று ஒப்புக் கொள்வதில் தயக்கமா என்ன? இந்த ஆழமான கருத்துக்களைக் கொண்ட ஒரு நாட்டுப் பாடலையும் கேளுங்கள்!

''சீராமர் அயோத்தி வந்தா ராம்!
    சிங்காதனம் ஏறி ஆண்டா ராம்!
சிறந்த அநுமன் அடிவருட
    சீதா பிராட்டியும் அரு கிருக்க
இளவரசு ஏந்தல் பரத ராம்
    எடுத்தே குடையைப் பிடித்தாராம்!
இலக்கும சத்ருக்கன ராம்!
    இருபுறங் கவரி வீசின ராம்!
அய்யன் இராமன் அடி தொழுவோம்
    வையம் முழுதும் வாழ்ந்திடவே
ராம் ராம்! ராம் ராம்! ராம் ராம்! ராம்
    ராம் ராம்! ராம் ராம்! ராம் ராம் ராம்!

# பிராட்டியின் பெருமை

**ஆச்சாரியரின் திருவாக்கில் 'பிராட்டி'**

பிராட்டி என்ற சொல் யாரைக் குறிக்கின்றது என்பதை முதலில் காண்போம்.

பூமிக்கு அடியிலே, மிக ஆழத்திலே அமைந்துள்ள வைரங்களைத் தோண்டி வெளியே கொண்டு வந்து தருவ தைக் காண வியக்கின்றோம்! கடலின் அடித்தளத்தில் உள்ள முத்துக்களை, மூழ்கி மேலே கொண்டு வந்து தருவ தையும் கண்டு மகிழ்கின்றோம்!

ரிஷிகள் இதிகாச புராணங்களை அருளினார்கள். ஆழ்வார்கள் அருளியது நாலாயிரதிவ்யப்பிரபந்தம். இதற்கு வியாக்கியானங்களான விளக்க உரைகளை அருளி யவர்கள் ஆச்சாரியர்கள்.

நம் பிள்ளையின் கடாட்சத்தினால் வடக்குத் திருவீதிப் பிள்ளைக்குத் திருக்குமாரராய் அவதரித்த பிள்ளை உலகா சாரியர் இவைகளில் ஊறிக்கிடக்கும் ரகசியங்களை, உட் பொருள்களை, வைரத்தையும் முத்தையும் மிக முயன்று திரட்டுவதுபோல 18 நூல்களாகத் திரட்டி வெளியிட்டருளி னார். ஸ்ரீ வைணவ ஆசாரியரான பிள்ளை உலகாசாரியர் இயற்றியருளிய இந்நூல்கள் அஷ்டாதச ரகசியங்கள் எனவும் அழைக்கப்படும்.

இவற்றுள் அட்சர லட்சம் பெறும் ஸ்ரீ வசனபூஷணமும், முமுட்சுப் படியும் அடங்கும்.

இந்தப் பதினெட்டு நூல்களில் இரண்டான 1. முமுட்சுப் படியில் துவய அதிகாரத்திலும், 2. ஸ்ரீவசன பூடணத்தில் புருஷகார உபாய அதிகாரத்திலும், 'பிராட்டி' என்றும், ''பெரிய பிராட்டி' என்றும் பெயர்ச் சொல்லாகவும், 'இவள்' என்ற சுட்டுச்சொல்லாகவும் அருளப்பட்டுள்ளது.

**பெரிய பிராட்டியும் பூமிப்பிராட்டியும்**

இவ்விதமாகப் பெரிய பிராட்டியார் என்றும், பிராட்டி என்றும் பேசுவது யாரை? ஏன்?

பரமபதத்திலே 1. திருமடந்தை, 2. மண்மடந்தை இருபாலும் திகழ்வதாலே (பெரிய திருமொழி 3-10-1) பூமிப்பிராட்டியாரான மண்மடந்தையினும் வேறுபடுத்தித் திருமடந்தையை—அதாவது சீதேவியைப் பெரியபிராட்டியார் என அருளுகிறார் பிள்ளை உலகாசாரியர்.

ஸ்ரீமந் நாராயணனான இறைவனுக்குப் பரமபதம் நித்திய விபூதி (நிலையான இருப்பிடம்). அவதாரங்கள் கண்டருளும் இம்மண்ணுலகம் லீலாவிபூதி (திருவிளையாட்டுக்கிடம்.)

**அவதாரங்கள் தோறும் உடன் அவதரிக்கும் பிராட்டி:**

தெய்வீகத்தன்மை சுடர்விடும் பரமபதத்தில் எழுந்தருளியுள்ள போது உபய-தாயாரையும்-இந்த இரண்டையும் 1. பெரிய பிராட்டியார் என்றும் 2. பூமிப்பிராட்டியார் என்றும் குறிப்பிடுவதுபோல, இவர்கள் மண்ணுலகாம் லீலா விபூதியில் தெய்வீகத் தன்மையை மறைத்துக் கொண்டு அவதரித்தருள்கையில் பிராட்டி என்பது மரபு.

இவர்களைப் பிராட்டியார் என்னாமல் பிராட்டி என்றாலும் சாலும்.

இதனால், சீதாபிராட்டி, உருக்குமிணிப் பிராட்டி, நப்பின்னைப் பிராட்டி எனச் சொல் வழக்குகள் ஏற்பட்டுள்ளன.

3. பிராட்டிதான் சீதை என்பதை உறுதிப்படுத்தும்

பிள்ளை உலகசாரியரின் ஸ்ரீவசன பூடணத் திருவாக்கு:

ஸ்ரீவசன பூடண நூலிலே, ''பிராட்டி'', என்ற சொல்லாலேயே, சீதா பிராட்டியைக் குறித்தருள்கிறார் பிள்ளை உலகாச்சாரியர். உதாரணங்கள்.

'உபாயத்திற்குப் பிராட்டியையும் திரௌபதியையும், திருக்கண்ண மங்கையாண்டானையும் போல இருக்க வேணும்'. ஸ்ரீவசனபூஷணம்—(81)

'பிராட்டிக்கும் திரௌபதிக்கும் வாசி, சக்தியும், அசக்தியும்'(82)

'பிராட்டி' ராட்சசிகள் குற்றம் பெருமாளுக்கும், திருவடிக்கும் அறிவியாதவாறு போலே, தனக்குப் பிறர் செய்த குற்றங்களைப் பகவத்பாகவதர் விஷயங்களில் அறிவிக்கக் கடவன் அல்லன்.'—(366)

ஸ்ரீவசபூஷண வாக்கியங்கள்—முமுட்சுப்படி வாக்கியங்கள்:

பிள்ளை உலகாசாரியர் தமது முமுட்சுப்படி நூலிலும் இதனையே மேலும் உறுதிப்படுத்துகின்றார்.

'திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்ல வேண்டாவிறே.' முமுட்சுப்படி—(129)

இவள் சன்னிதியாலே காகம் தலைபெற்றது; இது இல்லாமையாலே இராவணன் முடிந்தான்.'—(135)

எனவே ஸ்ரீ பிராட்டியின் பெருமை என்றால், சீதா பிராட்டியின் பெருமை என்றும் கொள்ளக் கிடக்கின்றது.

இதனையே பிராட்டி வைபவம் என்பது ஸ்ரீ வைஷ்ணவ மரபு.

வைபவம் என்றாம் விசேடம் என்றும், இப்பூவுலகில் அவதரித்துக் காட்டிய அதிசயங்கள் என்றும் கொள்ளலாம்.

**கம்பர் காட்டும் சீதா பிராட்டியார்!**

'நாராயணன் விளையாட்டெல்லாம்' தென் மொழியில் இராமாயணமாகப் பாடி அருளிய கம்பர், இராமனை ஸ்ரீமந் நாராயணனாகவும் பாடினார்.

சீதையை இலட்சுமிதேவியாகவும் அதாவது திருமகளாகவும் காட்டுகின்றார். மிதிலையில் சீதை திருமணக் கூடத்தில் காலடி வைப்பது முதலே இவ்விதமாக அடி, முதல் பாடுகிறார்.

**மணவாளனை அழைக்கும் மிதிலை :**

நாம் இப்போது மிதிலா நகரில் இருக்கின்றோம்! காவல் அமைந்த மிதிலை அது! எனவே அது ''கடிநகர்!''

ஆம், கொடி பறக்கும் மிதிலா புரிதான் இது! ''செழுமணிக் கொடிகள்!''

ஞானவேந்தனான, ராஜ ரிஷியாம் ஜனக மகாராஜர் ஆளும் மிதிலையின் கொடிகளுக்குமல்லவா ஞானம் நிறைந்துள்ளது.

அவை யாரையோ கூவித் தம் கைகளைக் காட்டி அழைக்கின்றனவே, என்ன ஆச்சரியம்!

''கைகளை நீட்டி அழைப்பது போன்றதம்மா!''

யாரை? எப்படி அழைக்கின்றன? இராமனாம் ஐயனை ''சீக்கிரம் வருக!'' என்று.

''ஒல்லை வா! என்று அழைப்பது போன்றதம்மா?''

ஏன் இப்படி இராமனை அழைக்கின்றன? அந்தக் கொடிகள்!

மிதிலா புரியிலே தேர்தல் நடை பெறவில்லை! ஆனால் திருமணத் தேர்தல் நடைபெறுகின்றதாம்! இது வரை எத்தனையோ வேட்பாளர்கள் வந்தனர். ஆனால் இந்தக் கொடிகள் அவர்கள் எவரையும் சட்டை செய்யவில்லை. இராமனாம் வேட்பாளனைக் கண்டதே தாமதம்! அழைக்க ஆரம்பித்தனவாம். காரணம்?

அழுக்கற்ற செந்தாமரை மலரினை விட்டு, ''மையறு மலரின் நீங்கி!''

திருமகள் அல்லவா இங்கே அவதரித்துத் திருமணத் திற்கும் தயாராக இருக்கின்றாள்.

''செய்யவள் இருந்தாள்!'' என்று.

மிதிலையில் அவதரித்துள்ளவள் திருமகளாக இருப்பின் அவளை மணக்க வரும் இராமன், பரமபதநாதனான தாமரைக் கண்ணனாக அல்லவா இருக்க வேணும்.

ஆம்! அவன் தாமரைக் கண்ணன்தான்! புண்டரீ காட்சனே!

''கமலச்செங்கண் ஐயனை அழைப்பது போன்ற தம்மா!''

பொய்யில் புலவராம் திருவள்ளுவரும் தமது பொய்யா மொழியாம் திருக்குறளில்,

1. தாமரைக் கண்ணன் திருமால் தான் என்றும்.

2. அவன் எழுந்தருளும் இடம் உண்டு என்றும்,

3. அதுவே ''தாமரைக் கண்ணான் உலகு!'' என்றும் பரமபதம் என்றும் சான்று தருகின்றார்.

**''தாம் வீழ்வார் மென் தோள் துயிலின் இனிது கொல்!**
**தாமரைக் கண்ணான் உலகு!''**

இராமனை இப்படியாக அழைப்பதில் இந்த மிதிலைக்குத்தான் என்ன எக்களிப்பு.

பூமகள் எங்கேயோ போய்ப் பிறந்துவிடாமல், என்னிடமல்லவா பிறந்தருளியுள்ளாள். மிதிலாபுரியாம் யான் செய்த தவப் பயன் அல்லவா இது?

''யான் செய் தவத்தின் வந்து செய்யவள் இருந்தாள்.''

சாதாரண தவமா இது! செய்யவளான அவள் என்னிடம் பிறக்கும்படி மட்டுமல்ல! அதற்கு மேலும் அவள் என் மடியினிலேயே திருமணமும் செய்து கொள்ளவும் அல்லவா ''மா'' தவம் செய்துள்ளேன்.

''யான் செய் மா தவத்தின் வந்து செய்யவள் இருந்தாள்!''

பூரண சந்திரோதயமாக மிளிரும் இப்பாடலை முழுவதுமாகக்காண்போம்.

**''மையறு மலரின் நீங்கி,**
**யான் செய் மாதவத்தின்வந்து,**
**செய்யவள் இருந்தாள்!'' என்று,**
**செழுமணிக் கொடிகள் என்னும்**
**கைகளை நீட்டி அந்தக் கடிநகர்**
**கமலச் செங்கண்**
**ஐயனை, ''ஒல்லை வா!'' என்(று)**
**அழைப்பது போன்றதம்மா!**

**இலட்சுமியான சீதை வீற்று இருந்த மிதிலை:**

செந்தாமரை மலரினைவிட்டுத் திருமகள் மிதிலையில் அவதரித்ததும், மிதிலையே களிப்பிலும் சீர்மையிலும் உச்ச நிலை அடைந்து, செந்தாமரையுமாகி விட்டதாம்.

இவ்விதமாக அகம் கனிந்து, முகம் மலர்ந்து வரவேற்ற மிதிலையிலே புகுந்தனர், விஸ்வாமித்திர முனிவரின் தலைமையில், பெரிய பெருமாளும் இளைய பெருமாளும்.

**மதனற்கும் எழுத ஒண்ணாச் சீதையின் அழகு!**

செந்தாமரைக்குத் தோற்றதா சீதையின் அழகு காமனின் கற்பனைக்கும் அடங்குவதா அது!

**''ஆதரித்து அமுதில் கோல் தோய்த்(து)**
**அவயவம் அமைக்கும் தன்மை**
**யாதெனத் திகைக்கு மல்லால்**
**மதனற்கும் எழுத வொண்ணாச்**
**சீதையைத் தருதலாலே**
**நிலமகள் இருந்த செய்யப்**
**போதெனப் பொலிந்து தோன்றும்**
**பொன் மதில் மிதிலை புக்கார்!''**

**பாற்கடலில் பிரிந்து, கொடிமதில் மிதிலையில் கூடினரே! குறையுள்ள சீதையும் இராமனும்!**

சீதாபிராட்டிதான் திருமகளாம் பெரிய பிராட்டி என்று வெளிப்படுத்தும் கம்பநாட்டாழ்வார், இதனையே தொடர்ந்தும் விளக்குகிறார்.

சீதைக்கும் ஒரு குறை உண்டு. ஆம்! அவளுக்கு இடை (மருங்கு) இல்லை. ''மருங்கிலா நங்கைக்கும்.''

இராமனுக்கும் ஒரு குறை இருக்கத் தான் செய்கிறது. அவனுக்கு வசை (கெட்ட பெயர்) கிடையாதாம். ''வசையில் ஐயற்கும்!''

இவர்கள் இருவருக்கும் இடையில் இதுவரை இருந்த பிரிவு, போன இடம் தெரியாமல் ஓடிவிட்டது.

மிதிலாபுரியின் ராஜ வீதியிலே, வெற்றி நடை போட்டுக் கொண்டிருந்த இராமனும், மேலே பலகணி வழியாக வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த சீதையும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பார்த்துக் கொண்டது மட்டுமல்ல, ஒருவரை ஒருவர் அடையாளமும்

கண்டு கொண்டார்கள். "திருப் பாற்கடலிலே திருவனந் தாழ்வான் மீது குலாவிக் கொண்டிருந்தவர்களல்லவா நாம்" என்று.

**கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்:**

இப்படி அடையாளம் கண்டு கொண்டதால் என்ன ஆயிற்று. இராமன் உடல் தனியாகத் தவித்தபடி வீதியில் இருந்தது! "(ஒருங்குறும்)" சீதையின் உடல் தனியாகத் தவித்தபடி பலகணியில் இருந்தது. ஆனால் இவர்கள் இருவரின் உயிரோ ஒன்றை ஒன்று ஒட்டிக் கொண்டன!

"ஒருங்குறும், இரண்டு உடல் உயிர் ஒன்று ஆயதே!"

இவ்விதமாகப் பிரிவு நீங்கி ஒருவரை ஒருவர் கண்டு கொண்ட பிறகு பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ?

உடனே அருகில் போய்ப் பேசுவதும் அவசியம்தானா?

வாசுகிக்கு வாழ்வளித்த—வாசுகியால் வாழ்வு பெற்ற வள்ளுவரும் பேசுகிறார்.

**"கண்ணொடு கண் இணை நோக்குஒக்கின்**
**வாய்ச் சொற்கள் என்ன பயனும் இல".**

சீதாபிராட்டியே பெரிய பிராட்டியார் என்பதைக் காணலாம் கீழ்க் காணும் இப்பாடலிலும்;

**"மருங்கிலா நங்கைக்கும்,**
**வசையில் ஐயற்கும்,**
**ஒருங்குறும் இரண்(டு) உடல்**
**உயிர் ஒன்(று) ஆயதே!"**
**கருங்கடல் பள்ளியில்**
**கலவி நீங்கிப் போய்ப்**
**பிரிந்தவர் கூடினால்**
**பேசல் வேண்டு மோ!"**

காதல் என்னும் தெய்வீக உணர்வு, பிறவிதோறும் தொடரும் என்பது நமது வேத நம்பிக்கை. சதானந்தரின் சாட்சியம்.

இராமாயணக் காலத்தில் எழுந்தருளியிருந்த முனிச் சிரேட்டர்களான இருவர் இதற்குச் சான்று பகர்கின்றனர்.

ஜனகமகாராஜரின் சபையிலே குலகுருவாக விளங்கிய கௌதம ரிஷியின் புதல்வரான சதானந்தர் பேசுகிறார். பெண் வீட்டுக்காரர் அல்லவா? பெண்ணைப் பற்றி அளக்கின்றார்.

சீதை பெரிய பிராட்டியாரின் அம்சம் மட்டுமல்ல, பூமிப் பிராட்டியின் அம்சமும் கூடத்தான். பூமி தேவியின் மடியிலே ஏர்க்கலப்பையால் கீற வேண்டியதுதான்! தன் அருளைக் கொட்ட ஆரம்பித்து விடுகிறாள், அவள் மேனியி லிருந்து நெற்கதிர்களாகிய பச்சைப் பசுங்கிரணங்கள் வெளிவந்து பிரகாசிக்கும்.

ஆனால் இவை மட்டிலும் அல்ல அவள் செல்வம்; அவள் வயிற்றிலே பொன் முதலான எவ்வளவோ மூலப் பொருள்கள், கனிப் பொருள்கள், சுனைகள், திரவ ஊற்றுக்களும் பொதிந்துள்ளன. அந்தப் பல்வகைப் பட்ட மூலப் பொருள்களான செல்வங்கள் எல்லாம் ஒரே உருக் கொண்டு, ஒரே சமயத்தில் வெளிப்பட்டால், அக்காட்சி யினைப் பார்க்க வேண்டுமே கண்கொண்டு!

அந்தப் பேரழகே எங்கள் சீதை.

**''உழுகின்ற கொழு முகத்தின்**
**உதிக்கின்ற கதிரின் ஒளி**
**பொழிகின்ற புவி மடந்தை**
**உரு(வு) வெளிப்பட்டு''**

எனப் பாற்கடலைக் கடைந்த போது அமுதத்துடன் எழுந்தருளிய பெரிய பிராட்டியான திருமகள் இப்படியான பேரழகுடன் அவதரித்த சீதாபிராட்டியைக் கண்டார்.

**"புணரி எழுகின்ற தென் அமுதோடு எழுந்தவளும்"**

உடனே, பளிச்சென்று அவள் மனசாட்சி சொன்னது 'இனி நீ கொலு வீற்றிருக்கும் இடத்திலே, சீதைதான் எழுந்தருளியிருக்க வேண்டும். நீ கீழே இறங்கி, ஒரு பக்மாக நின்று, அவளைத் தொழுது கொண்டிருப்பாயாக'!

பூதேவியின் வளத்தையும், சீதேவியின் வளத்தையும் ஒருங்கே திரட்டிக் கொண்டு உருவெடுத்த சீதா பிராட்டிக்குத் திருமகள் தன் இருக்கையைக் காலி செய்து, கீழே இறங்கிக் கை கட்டிக் கப்பம் செலுத்த வேண்டியதுதானே

**"இழிந்து ஒதுங்கித் தொழுகின்ற"**

இவ்விதமாக எல்லா நல்ல நலன்களை உடைய பெண் குலத்திற்கே எங்கள் சீதை அரசியாக அவதரித்துள்ளாள் **'நல் நலத்துப் பெண்ணரசி தோன்றினாள்,** :

சதானந்தர் பெண் வீட்டார் சார்பிலே அடித்துக் கொள்ளும் பெருமை இது. தகும்! தகும்.

இதோ! அந்த அழகு சொட்டும் கவிதையின் முழு உருவம்.

**"உழுகின்ற கொழு முகத்தின்**
**உதிக்கின்ற கதிரின் ஒளி**
**பொழிகின்ற புவி மடந்தை**
**உருவெளிப் பட்டெனப் புணரி**
**எழுகின்ற தெள்ளமு தோடு**
**எழுந்தவளும் இழிந்து, ஒதுங்கித்**
**தொழுகின்ற—நன்னலத்துப்**
**பெண்ணரசி தோன்றினாள்!' '**

**வசிட்டரின் வாக்கு:**

அடுத்தபடி வசிட்டரின் வாக்கு! இவர் பிள்ளை வீட்டார். ஆகையினாலே மாப்பிள்ளையை வைத்தே மணமகளை அறிகிறார்.

மிதிலா நகரம் செய்த தவத்தினால் சீதை அவதரித்தாளா?

அப்படித்தான் தசரதச் சக்ரவர்த்தியின் சாம்ராச்சியத்தில் உள்ள நாங்கள் அனைவரும் செய்ததவத்தினால் அல்லவா இராமனும் அவதரித்தான்.

**''எங்கள் செய் தவத்தினால்**
**இராமன் என வந்தோன்''**

இந்த 'எங்கள் இராமன்' என்ன சாமானியனா?

**''வடிவார் சோதி வலத்துறையும் சுடர் ஆழியும்**
**படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்னியமும்''**

ஏந்திய ஆதி மூலபுருஷன் தான்.

உலகை எல்லாம் தன் திருவடியால் அளந்து, ஆட்படுத்தி, ஆளும் நெடுமாலே.

**சங்கினொடு சக்கரமும்**
**உடைத்த தனிமுதல் பேர்**
**அங்கண் அரசு!**

இவ்விதமாக, மணமகன் திருமால் ஆகையினாலே நிச்சயமாக மணமகள் திருமகளாகத்தானே இருத்தல் வேண்டும்.

அவன் சங்கு சக்கரத்தை விட்டு இங்கு அவதரித்தான். இவள் தாமரை மலரினை விட்டு அவதரித்துள்ளாள். அவ்வளவுதான்.

ஆதலின் ''அவ் அல்லி மலர் புல்லும் மங்கை இவளாம்'' என வசிட்டன் மகிழ்வுற்றான். சதானந்த முனிவரின் திருவுள்ளத்தை அப்படியே ஆதரித்த வசிட்ட முனிவரின் தீர்ப்பு.

**''எங்கள் செய் தவத்தினில்**
**இராமன் என வந்தோன்;**

**சங்கினொடு சக்கரம்**
**உடைத்த தனி முதல் பேர்**
**அங்கண் அரசு! ஆதலின், அவ்**
**அல்லி மலர் புல்லும்**
**மங்கை இவளாம்!'' என**
**வசிட்டன் மகிழ் வுற்றான்'**

**சீதாபிராட்டியின் திருமண வைபவம்:**

பெரிய பிராட்டியார்தான் சீதா பிராட்டி என்பதைத் தெரிந்து கொண்ட பிறகு, பிராட்டியின் பெருமையை அல்லது வைபவத்தைக் காணலாம்

அயோத்தி(யின்) இராமன், கௌசல்யா ராமனாக, தசரத ராமனாக வளர்ந்த பிறகு, சீதாராமனாவதற்குக் கலியாண ராமனாக மிதிலையின் ராஜ வீதியிலே பவனி வருகிறான். அலை அலையாகத் திரண்டு வந்த மக்கள் வெள்ளம் இராமனைக் கண்டு வியந்தனராம். ஆனால், ஒருவராவது ராமனின் முழுவடிவத்தைக்காண முடியவில்லையாம்.

''யாரே வடிவினை முடியக் கண்டார்!'' இதற்குக் காரணம் என்ன?

இராமனின் தோள் அழகைக் கண்டவர்கள், தோளையே கண்டார்களாம்.

**''தோள் கண்டார் தோளே கண்டார்''**

அடுத்தபடி இராமனின் வீரக் கழல் அணிந்த தாமரை போன்ற திருவடிகளில் கண் வைத்தவர்கள், வைத்த கண்ணை வாங்காமல் அவன் திருவடிகளையே சேவித்தார்கள்.

**''தொடு கழற்கமலம் அன்ன தாள் கண்டார்**
**தாளே கண்டார்!''**

மூன்றாவதான பிரிவினர்கள், இராமனுடைய விசால மான திருக்கைகளைச் சேவிக்க ஆரம்பித்தவர்கள், அத்திருக்கைகளின் அழகிலேயே சொக்கி விட்டார்களாம்.

**"தடக்கை கண்டாரும் அஃதே!"**

இங்கே ஒரு நியாயமான கேள்வி. ஆயிரக்கணக்கான மக்கள் கூடி, தெய்வமானாலும்கூட, மனித வடிவத்தில் உலவும் போது தோள், கால், கை இவைகளைக் கண்டு, வைத்த கண்வாங்காமல் பார்த்தார்கள் என்றால் நம்ப முடியுமா? இதைக் கவிச்சக்கரவர்த்தியின் கவிதையாகவும் கருதலாமா?

கவிச்சக்கரவர்த்தியாம் கம்பநாட்டாழ்வார் இப் பாடலில் பல பூட்டுக்களை அமைத்துத் தன் முழுத்திறமை யையும் காட்டியுள்ளார். ஒரு பூட்டை மாத்திரம் நுண்ணிதின் ஆராய்ந்து அறியலாம்.

# மிதிலை கண்ட ராமன்

மகா ஞானியான ஜனக மகாராஜன் தர்ம ஆட்சி செலுத்தும் மிதிலைப் பெருநகரின் ராஜ வீதியிலே ராமன் மாப்பிள்ளை திருக்கோலத்தில் எழுந்தருளுகிறான். சீதையைத் திருமணம் செய்து கொள்வதற்கான இக் காட்சியை மிதிலைப் பெருங்குடிகள் கண்டு களிப்பதை மகா சக்கரவர்த்தியான கம்பர் சித்தரிக்கின்றார்.

**''தோள் கண்டார் தோளே கண்டார் தொடுகழல்**
**கமலம் அன்ன**
**தாள் கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாரும்..தே**
**வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்**
**ஊழ் கண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்!**

ஸ்ரீவைணவ சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளை இப்பாடலில் கம்பநாட்டாழ்வார் மிக்க திறமையுடன் அமைத்திருப்பதை ஆழ்ந்து ஆராய்ந்தால் காண்போம்.

தை பிறந்து விட்டது! வேறு என்ன விசேஷம்! திருமணங்கள் தான் விசேஷம். தை பிறந்ததும் தை பிறந் தால் வழி பிறக்கும் என்று காத்திருந்தவர்கள் திருமண ஊர்வலம் விடுகிறார்கள். நடமாடும் மற்றவர்களும் ஒதுங்கிக் கொள்வதால் இவர்களுக்கு வழியும் பிறக்கிறது.

இதோ இந்த ஊர்வலத்தைப் பாருங்கள். இதுதான் மிதிலா நகரத்து ராஜ்வீதி. ஆம்; ஜனக மகாராஜர் தர்ம ஆட்சி செலுத்தும் பாக்கியம் பெற்ற மிதிலா நகரம் தான். ஆனால், இந்த ஊர்வலத்தில் வரும் 'புள்ளி'களைப் பார்த்

தால் மிதிலா நகரத்தைச் சேர்ந்தவர்கள் இல்லை என்று தானே சொல்லுகிறீர்கள்? உண்மை தான்; இவர்கள் மிதிலை மக்கள் அல்ல தான். உற்றுப் பாருங்கள் உங்களுக்கே தெரியும், இவர்கள் அயோத்தி நகர மக்கள் தாம். தருகை நீண்ட தயரத சக்கரவர்த்தி, தன் குடும்ப பரிவார சகிதம் பவனியாக எழுந்தருளுகிறார். இருகைவேழத்து இராமன் மாப்பிள்ளைக் கோலத்தில் வீற்றிருக்கிறான். கலியாண மாப்பிள்ளை ஊர்வலம்தான் வெற்றிச் சேனை போல் ஜயகோஷமிட்டு முன்னேறிக் கொண்டு செல்கிறது மிதிலைப் பெருநகரின் ராஜ வீதியிலே.

ஏன், அப்படி திருவடிகளையே நோக்கிக் கொண்டிருந்தார்கள். சாதாரண திருவடிகள்தானா அவைகள். தாமரை மலர்களே மலர்ந்த மாதிரி அழகு சொட்டுகின்ற திருவடிகள் அல்லவா அவைகள். அதனால்தான் அந்தத் தாமரைக்கு நிகரான திருவடிகளைப் பார்த்தபடியே இருக்கின்றார்கள்.

**''கமலம் அன்ன தாள் கண்டார், தாளே கண்டார்''**

அழகு மட்டுமா காணப்படுகிறது அத் திருவடிகளில். வீரமும், வெற்றியும் அல்லவா பின்னிக் கிடக்கின்றன! அத் திருவடிகளை வீரத்திற்கும், அதன் விளைவான வெற்றிக்கும் சின்னமான கழல்கள் அத் திருவடிகளைத் தொட்டுக் கொள்கின்றனவே. அதனால்தான் வேடிக்கை பார்க்கிறார்கள் ஜனங்கள் இமை கொட்டாமல்!

> **''தொடுகழல் கமலம் அன்ன**
> **தாள் கண்டார், தாளே கண்டார்.''**

இராமன் திருவுருவை மேல் இருந்து பார்க்க ஆரம்பித்தவர்கள் மேலேயே பார்த்துக் கொண்டு நின்றார்கள். அடியில் இருந்து பார்த்தவர்கள் அடிகளையே கண்டு நின்றார்கள். இடையில் பார்த்தவர்களோ? தன்னுடைய திருக்கைகளை ஒய்யாரமாக மடியிலே வைத்தபடி வீற்றிருக்

கின்றான் மாப்பிள்ளை. இந்தக் கைகள் விசாலமான கைகள் தான், எந்தக் காரியத்தையும் சாதிக்கும். இப்படி யான,

**'தடக்கை கண்டாரும்'**

என்ன செய்தார்கள் மேலே குறித்த இரு சாராரையும் போல் கண்ட கண்கள், மற்றொன்றினைக் காணாவே என்று அக்கைகளையே பார்க்கும் நிலையில் இருந்தார்களாம்.

**'தடக்கை கண்டாரும், அஃதே!'**

இந்த ஊர்வலத்தில் நடுநாயகமாக எழுந்தருளிய இராமனின் உருவத்தில் ஒரு அங்கத்தைப் பார்த்து அந்த அங்கத்தின் அழகையே ரசித்து நின்றவர்கள், தங்கள் கண் களின் பார்வையின் குறைவின் காரணமாக வேறு அங்கத் தைப் பார்க்க முடியாமல் தவித்தார்களா? அப்படிப் பார்த் தவர்கள் எத்தகைய கண்ணை உடையவர்கள்? பார்வையின் வீச்சிலே வெட்டி வீழ்த்தும் கூர்மையும், வசீகரிப்பும் கொண்ட கண்களை உடையவர்கள்தான், பார்த்து அப்படிப் பிரமித்து நின்றார்கள். இந்த கண்களை, வாள்கள் என்றே சொல்லி விடலாம். எனவே அவர்கள்

**வாள் கொண்ட கண்ணார் தான்**

இத்தகைய வாள் கொண்ட கண்ணார் பங்கு போட்டுக் கொண்டு ஒவ்வொரு அங்கமாகப் பார்த்தார்களே. அப்படி யாவது அந்த சுந்தரராமனின் வடிவழகை முற்றும் பார்த்து முடித்தார்களா? கம்பர் சந்தேகத்துக்கு இடம் இல்லாமல் கூறிவிடுகிறார் இல்லை என்று. முற்றும் பார்த்துவிட்டவர் கள் ஒருவரும் இல்லையாம் அந்த வாள் கொண்ட கண்ணார் கூட்டத்தில்.

**'வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்!**

இப்படியும் தோற்க முடியுமா இராமனின் வடிவழகைக் காணும் முயற்சியில் என்று சந்தேகப்படுகிறோம் அல்லவா சந்தேகமே வேண்டாம்; இதுதான் முடிவு என்று கம்பரே நம்மைச் சமாதானப்படுத்துகிறார்.

அநாதி காலமாகச் சமய அறிவு ஒரு காரியத்தைச் செய்து வருகிறது. இன்றுவரையில் அந்த காரியம் பூர்த்தியாகவில்லை. அந்த முயற்சி இன்னும் வெற்றியடையவில்லை. அந்த முயற்சிதான் இறைவனின் முழுத்தன்மையையும் அறிந்து விடுகிற காரியம். எனவே மிதிலை நகரின் வாள் கொண்ட கண்ணார்கள், இராமனின் வடிவினை முடியக் காணாமல் தவித்ததைப் பார்த்தால், யாரைப் போன்று காணப்பட்டார்கள்?

**'ஊழ்கண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்'**

*அருமையான உதாரணம்!*

உதாரணம் அருமையானதுதான். இறைவனுடைய முழு வடிவழகை ஊழி ஊழியாக வளர்ந்து வரும் சமயம் முடிவாக அறியவில்லை என்பதை ஒப்புக் கொள்ளலாம். ஆனால், 'ராமனாகிய மனித உருவை, அதிலும் அதில் அமைந்துள்ள அங்கங்களைப் பார்த்து முடிப்பதற்கு 'வாள் கொண்ட கண்ணார்கள் தவித்தார்கள்' என்று சொன்னால் அதைச் சுலபமாக நம்ப முடியாமல் இருக்கிறதே! ஏதோ உணர்ச்சி வசப்பட்டு அதிகமாக 'அளந்து கொட்டி'யிருப்பதாகவும் காணப்படுகிறதே! கவிச் சக்ரவர்த்தியான கம்பன், ஏதோ சாதாரண சீட்டுக்கவி விடும் புலவர்களைப் போல், பொறுத்தமில்லாத புகழ்ச்சியில் ஈடுபட்டு, இப்படிச் சுவையற்றதாகக் காணப்படும் நிகழ்ச்சிகளையும் உதாரணத்தையும் தீட்டியிருப்பானா என்ற சந்தேகமும் ஏற்படுகிறது! இதை ஆராய்வதே இக்கட்டுரையின் முக்கிய நோக்கமாகும்.

'நீங்கள் இதைச் செய்ய முடியுமா?' என்று நண்பரைக் கேட்கிறோம்; 'இது என்ன பிரமாதம்! இது என்ன கம்ப

சூத்திரமா?' என்று நண்பர் நம்மைக் கோபமாகத் திருப்பிக் கேட்கிறார். எனவே, கம்ப சூத்திரம் என்றால் செய்வதற்கு அரிய செயல் என்று தெரிகிறது. கவிகளுக்குள் செயற்கரிய செய்யும் பெருமை நமது கவிச் சக்ரவர்த்திக்கே உள்ளது. மற்ற புலவர்களிடம் கவிச் சித்திரம் காணலாம். ஆனால், கம்பர் ஒருவரிடமே கவிச் சித்திரத்துடன் சூத்திரமும் காண லாம். கம்பருடைய பெயர் தவிர மற்றக் கவிகளுடைய பெயர்களை இணைத்து அவர்களுடைய சூத்திரம் என்று சொல்ல முடியாது.

இது கம்ப சூத்திரம் நன்கு மிளிரும் பாடல்.

இராமனுடைய தோள் கண்டவர்கள் ஏன் தோளையே பார்த்து வியந்து கிடந்தார்கள்? தாள் கண்டவர்களும் தடக்கை கண்டவர்களும் அவ்விதமே அதிசயித்துக் கிடந்தது ஏன்?

விஸ்வாமித்திர முனிவருடன் இராம லட்சுமணர்கள் மிதிலா நகரம் வந்தபோதே மக்களின் மனதைக் கவர்ந்தார் கள். ஜனகமகாராசரது சபைக்கு எழுந்தருளி சிவதனுசை முறித்த அதிசயத்தையும் கண்டார்கள் மக்கள். சீதையை மணம் புரியும் இம்மாப்பிள்ளையின் வீரதீரச் செயல்களை எல்லாம் அறிந்துகொண்டு ஆனந்தமும், பெருமையும் அடைந்தார்கள்.

இவ்வண்ணம் தங்களுடைய மாப்பிள்ளையான இராம னைப் பற்றி அறிந்து கொண்ட சேதிகளில் மூன்று நிகழ்ச்சி கள் மகத்தானவையாகும். இந்த மாபெரும் முச்செயல் களைச் செய்து முடித்தது தங்கள் மாப்பிள்ளையின் மூன்று திரு அங்கங்களாகும். அவைகளைச் சரியாகப் பார்த்துக் களிக்க வேண்டுமென்று தவித்திருந்தார்கள் மிதிலை மக்கள்: தங்கள் கண்களை வாள் கொண்ட கண்களாக மாற்றிக் கொண்டு காத்திருந்தார்கள். கூர்மையும், பிரகாசமும் கொண்டு துடித்துக் கொண்டிருந்தன அந்தக் கண்கள் இராமனின் புகழ் பொருந்திய அங்கங்களைச் சேவிப்பதற்கு

அந்த அங்கங்கள் யாவை? அவைகள் அடைந்த புகழ் என்ன?

தாடகை என்னும் அரக்கியின் கூட்டத்தால் மக்களும் முனிவர்களும் பலகாலம் பல துன்பங்கள் அநுபவித்துக் கொண்டிருந்தார்கள். இதற்கு முடிவே இல்லாமல் இருந்தது. இந்தத் தாடகை விஸ்வாமித்ர முனிவரின் பெருவேள்வியைக் குலைப்பதற்கு வந்த சமயம் அவளைக் கொன்று ஒழித்தது இராமனது தோள்கள். கரிய செம்மலான இராமனது தோள்களால் ஏவப்பட்ட கடியவேகச் சுடுசரம் அல் ஒக்கும் நிறத்தளான தாடகையின் வயிரக்குன்றம் போன்ற மார்பில் தைத்துப் புல்லோர்க்கு நல்லோர் சொன்ன பொருள் என நெஞ்சில் தங்காது போயிற்றாம்! இந்த தீரச் செயலைப்புரிந்த வீரத்

''தோள் கண்டார் தோளே கண்டார்!''

இராமனின் வேறு அங்கத்தில் கண்மாற்ற விரும்பாமல் தவித்தார்கள் தோளைப் பார்த்தவர்கள். தாடகையை வதம் செய்த பெருமையையும், அருமையையும் நினைந்து நினைந்து சொல்லிச் சொல்லி அவைகளைப் புரிந்ததற்குக் காரணமாகத் தோள்களைப் பார்த்துப் பார்த்து, அதே செயலாகவே கிடந்தார்களாம்.

இன்னொரு அதிசயத்தையும் இராமன் புரிந்ததாகக் கேள்விப்பட்டார்கள் மிதிலை மக்கள். முன்னையதைவிட இதுவே பெரிய காரியம் என்பது ஒரு பிரிவினரின் எண்ணம். தீவினை நயந்து செய்த தேவர்கோன் செய்கையால் அநியாயமான பழியும் சாபமும் ஏற்பட்டுவிட்டது, பத்தினியான அகலிகைக்கு; கவுதம முனிவரின் சாபத்தால் கல்லாகிக் கிடந்தாள்;

இந்த பரிதாபத்தை மக்களால் சகிக்க முடியவில்லை; இதற்கு விமோசனம் ஏற்படவேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டே இருந்தார்கள். இந்த உத்தமியான

அகலிகையும், முக்கணான் அனைய ஆற்றல் முனிவர் தந்த சாபம் நீங்கித் தன் முன்னுருவை அடையப் பெற்றது, தாடகையை வதம் செய்து ஜயமாலை அணிந்து வந்த தசரத இராமனின் கால் துகள்பட்ட பெருமையினால். எனவே இந்த அஞ்சன வண்ணத்தான்தன் அடிகளைக் காண்பதற்குத் துடித்துக் கொண்டிருந்தார்கள் ஒரு சாரார்.

மாப்பிள்ளைக் கோலத்தில் இராமன் எழுந்தருளிய சமயம் இவர்கள், அவனுடைய

**தொடு கழல் கமலம் அன்ன தாள் கண்டார்!.'**

பிறகு வேறு ஒன்றைப் பார்க்க மனம் வருமா? எனவே தாளே கண்டார்.

இவைகள் எல்லாம் தூர தேசங்களில் நடந்தவைகளே: மிதிலை மக்கள் பார்த்ததில்லை; கேட்டதோடு சரி. மேலும் இவைகளில் தங்களுக்கு ஏதும் தொடர்போ, நன்மையோ கிடையாது, ஆனால் மூன்றாவதாக நடைபெற்ற நிகழ்ச்சி, இவைகளுக்கு எல்லாம் சிகரம் வைத்தது போல் அமைந்தது. அது மட்டுமல்ல, மிதிலை மக்களுடைய வாழ்க்கையிலே மகிழ்ச்சிப் பொங்கலை உண்டாக்கியது. இதுவே சீதையின் திருமணமாகும்.

சிவதனுசை ஒடிக்கிறதாவது! சீதைக்கு மணம் முடிக்கிறதாவது! என்று மிதிலை மக்கள் மனம் வருந்திக் கொண்டிருந்தார்கள். நல்லகாலமாக இராமனான மாப்பிள்ளையும் கிடைத்தான், அவனும் மணத்தை மகிழ்ந்தனன்; என்றால், ''கொள்'' என முன்பு (சீதையைக்) கொடுப்பது அல்லால் (ஜனகனான) வெள்ளை மனத்தவன், வில்லை எடுத்து இப்பிள்ளை முன் இட்டது பேதமை'' என்று மிதிலை மக்கள் அங்கலாய்த்துக் கொண்டிருந்தார்கள். அதிர்ஷ்டம் அடித்தது இவர்களுக்கு. போர் ஏறு போன்று இராமனும் அந்த நெடுஞ்சிலையை

நோக்கினான். பொழிந்த நெய் ஆகுதி வாய்வழி பொங்கு எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தான். அச்சமும், ஆச்சரியமும் கலந்த மனத்துடன் மிதிலை மக்கள், என்ன நடக்குமோ என்று தடுத்து இமையாமல் இருந்தார்கள். இப்படி இருந்தும், இராமன் சிவவில்லைக் காலால் தரையில் ஊன்றிக்கொண்டு வளைக்க முற்பட்டதைக் கூடச் சரியாகக் கவனிக்க முடியவில்லையாம்.

**'கடுப்பினில் யாரும் அறிந்திலர் (ஏன்?)**

இராமன் வில்லைக் கையால்

**எடுத்தது கண்டார் இற்றது கேட்டார்!**

பார்ப்பதற்குள் அந்தக் கவனத்தைக் கலைத்து விட்டது வில் முறிந்து ஒடிந்த போது எழுந்த ஓசை. இப்படியாக நேரில் பார்த்துக் கொண்டிருந்த போது ஏற்பட்ட ஓசையால் தடுக்கப்பட்ட கண்கள், தாளைப் பார்க்கவேண்டும் என்றும் தோளைப் பார்க்க வேண்டும் என்றும் துடித்துக் கொண்டிருந்தவர்களுடைய கண்களைப்போல் சிவதனுசை முறித்த அந்தக் கைகளையும் காணவேணும் என்றே துடித்துக் கொண்டிருந்தனவாம் அதனால்தான் கவிச் சக்ரவர்த்தி கூறுகின்றார்.

**"தடக்கை கண்டாரும் அஃதே"**

அதே கைகளை மறுபடியும் பார்த்த பிறகு, மற்றவைகளையா பார்ப்பார்கள் மிதிலை மக்கள்.

இராமனைப் பார்த்து வியந்து கொண்டிருந்த சாதாரண மக்களின் கண்களைச் சித்தரிக்கும் கம்பர் பெருமான், இப்பாடலின் கடைசியில் சதாகாலமும் சர்வேஸ்வரனான இறைவனின் பெருவடிவைக் காணும் சமயத் தலைவர்களுடைய மனக்கண்களையும் சம்பந்தப் படுத்துகிறார். மகாவீரன் ஒருவனைக் கண்டால் அவன் புரிந்த செயல்களை எண்ணி எண்ணி அவைகளைச் சாதித்த அவனுடைய அங்கங்களையும், அவைகளின் வலிமை, வண்ணத்தலையும், தனித்தனியாகக் கண்டு களிப்பதை

நாம் சரியாக அறிந்து கொள்ள வேணும் என்பது கவிச் சக்ரவர்த்தியின் நோக்கம். எனவே, சமயத் தலைவர்களுடைய மனக் கண்ணை நினைவுபடுத்துகிறார். பல காலமும் சமயத்தின் தலை நின்றவர்கள் செய்கிற காரியம் என்ன? இறைவனின் பெருவடிவை, அங்கம் அங்கமாக அவன் பெருமைகளை விளக்கும் அவைகளை அநுபவித்துச் சுவைத்துக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா? இப்படித் தான் மிதிலை மக்களும், சிவதனுசை முறித்து, சீதாவை மணம் புரிய வந்த இராமனைத் தங்களுக்கு விமோசனம் அளித்த கடவுளாகவே போற்றி அவன் உருவில் அமைந்த அங்கங்களைத் தனித்தனிக் கண்டு களித்தார்களாம்.

எனவே மிதிலை மக்கள்.

**''ஊழ் கண்ட சமயத்து அன்னான்**
**உருவு கண்டாரை ஒத்தார்!''**

பல் ஊழிக்காலமாக வளர்ந்து வரும் சமயத்தின் தலைவர் யாராவது இறைவனைக் கண்ட போது இப்படி அநுபவித்தது உண்டா? இறைவனது அங்கங்களையும் இந்த வரிசையிலேயே அநுபவித்தார்களா? என்றெல்லாம் நமக்கு அறிய ஆவல் எழலாம். இதையும் பார்க்கலாம்.

''எண்ணும் திருநாமம் திண்ணம்}நாரணமே'' என்ற பேருண்மையை அறிய, வேண்டிய வேதங்கள் ஓதி விரைந்து கிழி அறுத்த பட்டர்பிரான் வந்தான் என்று ஈண்டிய சங்கம் எடுத்து ஊதி, பாண்டியன் கொண்டாடினான்: யானை மீது பவனியாக மதுரையின் வீதியிலே எழுந்தருளப்பட்ட பெரியாழ்வாருக்கு இறைவன் கருடன் மீது அமர்ந்த திருக்கோலத்தில் சேவை சாதித்தானாம்: இறைவனுடைய திவ்யத் திருமேனியழகைச் சேவித்த பெரியாழ்வார் இந்த மகா சுந்தரமேனிக்குக் கண்ணெச்சில் பட்டதே என்று பிரமித்து பல்லாண்டு பாட ஆரம்பித்தாராம்.

**"பல்லாண்டு பல்லாண்டு பல் ஆயிரத்தாண்டு
பல கோடி நூறு ஆயிரம்"**

என்று திருப்பல்லாண்டு பாட ஆரம்பித்ததும் இறைவனும், "ஆழ்வீர்!" நமக்குத் தீங்கு வரும் என்றா பல்லாண்டு பாடுகிறீர், நாமென்ன அப்படி பலம் இல்லாத வரா இதோ பாரும் நாம் கிருட்டிண அவதாரம் எடுத்து மல்லர்களைக் கம்சன் முன்னேயே கொன்று வீழ்த்திய தோள்கள் என்று தன் திருத்தோள்களைக் காண்பிக்கவும் பெரியாழ்வார்,

**"மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா!"**

என்று முதலில் இறைவனுடைய அங்கத்தைப் பார்த்தது அவனுடைய மல்லாண்ட தோளைத்தானாம்.

மிதிலையிலே தோள் கண்டு குதூகலித்த மக்கள் போலே.

இறைவனது தோளைப் பார்த்துக் களித்துக் காப்பிட்ட விஷ்ணுசித்தர் அடுத்தபடி அநுபவித்த அங்கம் சேவடிகளே.

**"மணிவண்ணா!"
உன்சேவடி செவ்வித்திருக்காப்பு!"**

மிதிலை மக்களைப் போல் முதலில் தோளைக் கண்ட வில்லிபுத்தூர்க்கோன் அடுத்தபடி கண்டது தாளைத்தான்.

மேலும் பார்க்கலாம். "இறைவனே! அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு என்றும் பெரியாழ்வார் பாடியபடி மிதிலை மக்கள் இந்த சமயத்தில் பாட முடியாது. இன்னும் கௌசல்யாராமன், சீதாராமனாகிவிடவில்லை. அதனால் சீதையைச் சேர்த்துப் பார்க்கவில்லை. தங்களை மறந்து அங்கங்களைச் சேவித்தார்கள். திருஷ்டி கழிக்கத் தோன்றவேயில்லை,

மிதிலையில் தோளையும், தாளையும் பார்த்துக் களித்தவர்கள் தடக்கை கண்டு மகிழ்ந்தார்கள்- பெரியாழ்வாரும் முதலில் மல்லாண்ட தோளையும் பிறகு சேவடி செவ்வியையும் சேவித்த பிறகு, கடைசியாக இறைவனின் திருக்கைகளையும் அவைகள் ஏந்தியிருக்கும் திவ்ய ஆயுதங்களையுமே தரிசித்து மகிழ்ந்தார்.

**'வடிவார் சோதி வலத்து உறையும் சுடர் ஆழியும் பல்லாண்டு'**

**'படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்யமும் பல்லாண்டு;'**

என்று மிதிலையிலும், மதுரையிலும், நடந்த நிகழ்ச்சிகளும், நிகழ்ச்சி வரிசைகளும் ஒத்திருக்கும் அழகு ஆச்சரியமாக இருக்கிறது.

மிதிலை நகர மக்கள் கல்யாணராமன் ஊர்வலத்தை அநுபவித்து ஆனந்தத்தில் முழ்கியிருந்ததை விவரித்து வந்த கம்ப நாட்டாழ்வார், இவர்களை சமயத்துறையில் ஊழிக் காலமாகப் படிந்து இறைவனைக் காண முயன்றுவரும் சாதுக்கோட்டியிலேயே வைத்துவிடுகிறார். ஊழ்கண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரையே ஒத்திருந்தார்களாம். இப்படி ஒப்பிடுவதனால் மேலும் சில ரகசியங்களையும் கவிச்சக்கரவர்த்தி நம்மை உணரச் செய்கிறார்.

ஞானிகளுக்கு இறைவனுடைய திருமேனியைச் சேவிக்கும் போது ஆழ்ந்த கருத்துக்கள் மனதில் தோன்றுகின்றன. அவைகளின் அடிப்படையில் இறைவனுடைய திருமேனியையும் அதில் அமைந்துள்ள அங்கங்களையும் அநுபவித்து அநுபவித்து, அந்த அநுபவத்திலேயே ஆழ்ந்து விடுவார்கள். ''பத்துடை அடியவர்க்கு எளியவனும், பிறர்களுக்கரிய வித்தகனும், நம் அரும் பெறல் அடிகளுமான இறைவன், மத்துறு கடை வெண்ணெய் களவினில் உரலினோடு ஆப்புண்டு. இருந்து ஏங்கிய எளிவு எத்திறம்?'' என்று நினைத்து நினைத்து நம்மாழ்வார் ஆறுமாதம்

மோகித்துக் கிடந்தாராம். இறைவனுடைய சுந்தரமான மேனியும் தாம்புக் கயிற்றினால் கட்டுண்ணப் பண்ணிய அவனது இடையும் எளிவையும் பெருமாயத்தையும் அறிவித்தனவாம் அவாவற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபருக்கு.

இங்கே மிதிலையிலே இறைவனாகவே கண்டார்களாம் இராமனையும். ஏன்; இராமனது அங்கங்களும் இறைவனது பெருந்தன்மைகளையே வெளியிட்டுப் பிரகாசித்தனவாம்.

தாடகையை வதம் செய்த, இராமனுடைய தோள் கண்டார்? தோளே கண்டார்? ஏன்?

இராமனுடைய திருத்தோள்களிலே இறைவனுடைய துஷ்ட நிக்ரக லீலையையே கண்டார்களாம், அடுத்தபடி கண்ணன் என்னும் மல்லாண்ட திண்தோளனாகவும் தற்போது இராமன் என்னும் தென்னிலங்கைக் கோமானைச் செற்று வீழ்த்த வந்துள்ள மனத்துக்கு இனியவனாகவும் வந்தவன் துஷ்ட நிக்ரகத் திருப்பணியை மேற்கொண்டு வந்த இறைவன் தானே.

அகலிகைக்குச் சாப விமோசனம் அளித்த தொடு கழல் கமலம் அன்ன தாள் கண்டார் தாளே கண்டார்! ஏன்?

ஆழ்ந்த ஞானக்கருத்துக்களுடன் துஷ்ட நிக்ரகம் புரியக் கூடிய தோள்களைச் சேவித்தவர்களுக்குத் தாள்களைச் சேவித்தவர்களும் தோற்கவில்லையாம். சிஷ்டபரிபாலனம் செய்யும் இறைவனின் கல்யாண குணத்தையே அத்தாள் களில் காணவும், அவை, 'தொடு கழல் கமலம் அன்ன தாள்களாக' அவர்களுக்குச் சேவை தந்தனவாம். வீரக் கழலுடன் தாமரை போன்று காணப்பட்ட அத்தாள்களைக் கைகளால் தொட்டே அநுபவிக்கத் தோன்றிற்றாம்.

விஸ்வாமித்திர முனிவன் தன்னுடன் ''இராமனை அனுப்பித்தான் ஆகவேணும்'' என்று தசரதச் சக்கரவர்த்தி யிடம் அடம் பிடித்த ன் ரகசியம் இப்போது வெளிப்படு

கிறதல்லவா? இறைவன் ராமனாகப் பிறந்தது, அயோத்தி யில் தொட்டிலில் கிடக்க அல்ல. துஷ்ட நிக்ரஹமும் சிஷ்டபரிபாலனமும் செய்து உலகை வாழ்விக்கவே. இதனால்தான் இந்த அவதாரத்தில் இவைகளை இராம னுக்குக் கற்றுத்தர அயோத்தியிலிருந்து மிதிலை வரை வந்து ஒட்டிக் கொள்ளுகிறார் விஸ்வாமித்திர மகாமுனிவர்.

அரசனுக்கும் ஆண்டவனுக்கும் இறைவன் என்றே பெயர். இருவரும் துஷ்ட நிக்ரஹமும், சிஷ்ட பரிபாலனமும் செய்வதைக் கடமையாக ஏற்பதாலே. துஷ்ட நிக்ரஹமும் சிஷ்ட பரிபாலனமும் நன்கு கற்றுத் தேர்ந்த சக்ரவர்த்தித் திருமகனாக இராமன் மிதிலையை அடைகிறான், சீதை யைத் திருமணம் புரிய ஆனால் இது என்ன? வெறும் சுண்ணாம்புக் கட்டடங்களும் சோலைகளும் சூழ்ந்த சாதாரண நகரமா மிதிலை? செங்கண் ஐயனை ராமனை தன்னைச் சரியாகப் பார்த்துப் புரிந்து கொள்ளும்படி அழைப்புக் கொடுத்ததாம் மிதிலை. 'செழுமணிக்கொடிகள் என்னும் கைகளை நீட்டித்' தான் அழைப்புத் தந்தது மிதிலை. அந்த அழைப்பிலே மிதிலை மாநகரம், ''மையறு மலரின் நீங்கி யான் செய்த மாதவத்தின் வந்து செய்யவள் (இலக்குமி) இருந்தாள்' எனக் குறிப்பாக உணர்த்தித் திருமணம் புரிந்து கொள்ளவே அழைத்ததாம். இப்படி சீதையைத் தருதலாலே திருமகள் இருந்த செய்யபோது (சிவந்ததாமரை) எனப் பொலிந்து தோன்றியது பொன் மதில் மிதிலை. இலட்சுமியே வந்து தன் பிறப்பிடமாகக் கொண்டு விட்டால் மதில்தானா பொன்னாகாது!

'தோள் கண்டார் தோளே காணும்படியாகவும், தொடு கழல் கமலம் அன்ன தாள் கண்டார் தாளே காணும் படியாகவும் பொன்மதில் மிதிலை புக்க சுந்தரராமனுக்குச் சீதையும் தோற்றுவிடவில்லையாம்! ஆதரித்து, அமுதில் கோல் தோய்த்து 'அவயவம் அமைக்கும் தன்மை யாது'

எனத் திகைக்கும் அல்லால் (மன்) மதனற்கும் எழுத ஒண்ணாத சீதை யல்லவா இவள்! எனவே ''இராமனுக்கு துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலன யோக்கியதைகள் மட்டும் போதாது; இன்னும் ஒரு யோக்யதாம்சமும் வேணும் என்னை மணந்துகொள்ள'' என்று லட்சுமியின் அவதார மான சீதையும் ஒரு நிபந்தனை ஏற்படுத்தினாள். 'இராமன் மக்களில் சிலரை துஷ்டர்கள் என்றும் சிலரை சிஷ்டர்கள் என்றும் பேதம் காட்டிப் பிரித்து, துஷ்டர்கள் என்று பெயர் சூட்டப்படுபவர்களை நிக்ரகம் செய்வதை என்னால் ஏற்க முடியாது. நான் சகலருக்கும் தானே தாய்; எனவே என் மக்களில் ஒரு சிலரைத் தண்டிப்பதை நான் சகிக்க முடியாது, இதை ஏற்றுக் கொள்வதனால், சம்காரக் கடவுளான சிவனின் ஆயுதமான இந்த வில்லை எல்லோர் அறியவும் சபையிலே வந்து, முறித்துப்போட்டு. என்னைப் பக்கத்திலே வைத்துக் கொண்டு யாரையும் கொல்வதில்லை' என்று காட்டவேண்டும் என்பதுவே அந்த நிபந்தனை. அன்று சராசரங்களை வைதந்தத்து ஏற்ற வந்த இராமனும், இந்த நிபந்தனையையும் ஏற்றுக் கொண்டு சங்காரத்தின் சின்னமான அந்த வில்லையும் நிடவிழ்மாலை ஈதென்ன எடுத்து முறித்துப் போட்டா னாம் தன் தடக்கையினாலே. எல்லோரையும் அன்பாக நடத்த விசாலமான மனம் வேண்டும். எவரையும் துஷ்டர் களாக மதித்துக் கொல்லாமல் இருப்பதற்கு 'விசாலமான' கையும் வேண்டுமல்லவா? இப்படியாகத் தங்கள் 'கல்யாணப் பெண்' ஏற்படுத்திய கட்டளையை நிறை வேற்றவும் 'அவள் தன் அழகாலே திருத்தினபடி (துஷ்டர் களையும்) ரட்சிக்கவும் தயாரானதைக் கண்ட மக்களும் தோள் கண்டாரைப் போன்றும், தாள் கண்டாரைப் போன்றும் அந்தத் தடக்கைகளையே கண்டு ஆனந்தித்தார் களாம்!

**'தடக்கை கண்டாரும் அஃதே!**

இதனால்தான் 'இவள் சந்நிதியாலே காகம் தலை பெற்றது; அது இல்லாமையினாலே இராவணன் மடிந்தான்' என்று பெரியோர்கள் கூறுகின்றார்கள்.

மக்களிடையே காணப்படும் குணங்களை மூன்றாகப் பிரித்தார்கள் ஞானிகள்; ரஜோ குணம் என்பது தீய குணம்; தமோ குணம் என்பது தீயதும் நல்லதும் இணைந்த குணம்; சத்வ குணம் என்பது நல்ல குணம்.

இங்கு மிதிலை மக்கள் இராமன் பவனியாக வந்த போது இம் முக்குணங்களின் சாயல்களையும் கண்டார் களாம்.

தீய ரஜோ குணத்தின் சின்னமாக இருந்த தாடகையை வதம் செய்த இராமனின் 'தோள் கண்டார் தோளே கண்டார்'.

ரஜோ குணத்தை, இறைவனைப் போல், இராமனும் ஒழித்து விடவே பவனிவருகிறானாம்! இதைவிட வேறு காட்சி வேணுமா மக்களுக்கு.

தீயது கலந்துவிட்டது நல்ல உத்தமியான அகலிகையின் வாழ்விலே. எனவே அவள் தமோ குணத்தின் சின்னமாகி விட்டாள். அவளிடம் இருந்த தீய வடுவைப் போக்கி சுத்த பாத்திரமாக ஆக்கினான் இராமன் தன் திருவடிச் சேர்க் கையாலே; தீயதும் நல்லதும் கலந்து வாழ்க்கையில் பெரும் பாலும் மக்களிடம் காணப்படுவது. இவர்கள் தங்கள் வாழ்க்கையில் தீயது கலந்துவிட்ட காரணத்தால், நம்பிக்கை இழந்து மேலும் தீயதுடனே சம்பந்தப்பட்டுக் கிடக்க வேண்டியதில்லை. இறைவனின் திருவடித்தா மரைகளை அடையப் பெற்றால் அவன் 'செயல் நன்றாகத் திருத்திப்பணி கொள்வானாம்! கள்வனேன் ஆனேன், படிறு செய்து இருப்பேன் கண்ட வாதிரி தந்தேனேலும் செல்கதிக்கு அமைந்தேன்! என்று இறைவனது பாத கமலங்களை அடையப் பெற்றால் சிக்கெனத் (தாமதம் இல்லாமல்) திருவருள் பெறலாம்.

தமோ குணம் உடையவர்களுடைய மாசு போக்கி ஆட்கொள்ளும் பெருங்குணத்தைக் கொண்டுள்ள இறைவனின் திருவடிகளைப் போன்றவை, அகலிகைக்குச் சாப விமோசனம் அளித்த இராமனின் திருவடிகள். எனவே அவன்.

**'தாள் கண்டார்! தாளே கண்டார்!'**

துஷ்ட நிக்ரகம் செய்யும் தோள்களைவிட சிஷ்ட பரிபாலனம் செய்ய அபயம் அளிக்கும் தாள்கள் சிறந்தன அல்லவா! அதனால்தான் கவிச்சக்ரவர்த்தியும் தாள்களைக் குறிப்பிடும் போது,

**'தொடுகழல் கமலம் அன்ன தாள்'**

என்று விசேஷித்துக் கூறுகின்றார்.

சீதை லட்சுமியின் அவதாரம்; சத்வ குணத்தின் சிகரம்; இவளை அடையும் பேராசையாலே சக்ரவர்த்தித் திருமகனும் கைகளையும் அகல விரித்துக் கொண்டே வருகிறானாம். இந்த விசாலமான கைகளையும், வாள் மின்னுவது போன்ற குறும்புச் சிமிட்டுகளுடன் கண்டு களித்துக் கொண்டார்களாம் பெண் வீட்டுக்காரர்களான மிதிலை மக்கள்.

**'தடக்கை கண்டாரும் அஃதே!'**

சத்வ குணத்தை இறைவன் ஆட்கொண்டு அணைத்துக் கொள்ளுகிற விதம் எவ்வளவு ரசமாக அமைந்துவிட்டது! ஞானிகளும் பக்தர்களும் பகவர்களும் சத்வ குணம் தலையெடுக்கப் பெற்றவர்கள். இதனால்தான் பகவானும் பக்தபராதீனன், அவர்கள் இட்டவழக்காக இருப்பவன் எனப்படுகிறான். சீதையின் உள்ளக் குறிப்பின்படி நடந்தது போல் எத்தனை அடியாரானார்க்கும் இரங்கும் அப் பித்தன் அவன்!

பிரபஞ்சமெல்லாம் முப்பிரிவில் அடங்கி இருப்பதாக அறிவிக்கிறது விசிஷ்டாத்வைத சித்தாந்தம். இது

ஸ்ரீவைணவ சமயத்தின் பெருங் கொள்கையாகும். அசித் சித்—ஈஸ்வரன் என்னும் முப்பிரிவில் அடங்கியதே உலகம். அசித் என்பது உயிரற்ற பொருள்கள். சித் என்பவை உயிர்ப் பொருள்கள்; ஈஸ்வரன் இறை தத்துவம். நாட்டில் காணப்படும் தீயதெல்லாம் அசித்தான உலகப் பொருள்கள் மீது வைத்த ஆசையால் ஏற்படுவதே. பொய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்கு உடம்பும் இவ்வுலகில் இன் நின்ற நீர்மையும் ஏற்படுவது அசித் சம்பந்தத்தால்தான். உலக மாயையான அசித்தின் பிடிப்பை அறுத்துக் கொண்டு சித் ஆகிய ஜீவாத்துமா, ஈஸ்வரனாகிய பரமாத்மாவை அடைதல் வேண்டும்.

அசித் சம்பந்தம் தலை எடுத்து, ''கொன்றேன் பல் உயிரைக் குறிக்கோள் ஒன்று இல்லாமையினால்!'' என்று திரிந்தவள் தாடகை. அசித்தின் சின்னமான இவளை வதம் செய்த இறைவன் போன்ற இராமனின்,

**''தான் கண்டார்! தானே கண்டார்!''**

மிதிலை மக்கள்.

இருள் தரும் மாஞாலத்தில், பாவத்தினிடையே வாழ வேண்டிய தலைவிதியுடைய ஜீவாத்துமாவின் சின்னம் அகலிகை. 'என்னையும் என் உடைமையையும் நின் சக்கரப் பொறி ஒற்றிக் கொண்டு நின் அருளே புரிந்திருந்தேன்! இனி என் திருக்குறிப்பே!' என்னும்படி,கல்லாகவே உடலிலும் உள்ளத்திலும் அசைவு இல்லாமல் 'சித்' என்னும் அகலிகை கிடந்தாள். இவ்விதமான சித்' சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாய்' என்று உயந்தது திருவடிச் சேர்க்கையாலே.

எனவே மிதிலை மக்களும், அந்தத்

**தொடு கழல் கமலம் அன்ன தாள் கண்டார்!
தாளே கண்டார்!!**

மூன்றவதான அடியும் வேண்டித் திருவிக்ரமனாக ஓங்கிப் பிறகு மகாபலிச் சக்ரவர்த்தியின் சிரசின் மீது ஒரு திருவடியை வைத்து அழுத்த வேண்டியதாயிற்று அவனை ரட்சிக்க. இங்கே இறைவனான இராமனின் வருகையை எதிர் நோக்கி அகலிகையே பலகாலமாகக் காத்துக் கிடந்த தனால் சேவடிபடுமுன், சேவடித்துகள் (பொடி) பட்டதுமே உய்வு பெற்றாளாம்; சுத்த 'சித்' தின் லட்சணம் இங்கு காட்டப்பட்டது. மகாபலிச் சக்ரவர்த்திக்குக் கிடைத்த ஏக பாத பட்டாபிஷேகத்தைவிட அகலிகைக்குக் கிடைத்த ஏகபாத தூளிப் பட்டாபிஷேகம் சிறந்ததுதானே.

இறைவனான ஈஸ்வரனே சர்வ சக்தன். அவனன்றி ஓர் அணுவும் அசையாது. சிவ தனுசையும் ஒடிப்பது சர்வேஸ்வரனால் தான் முடியும். தானே ஈஸ்வரன் என்பதை நிரூபித்துக் காட்டும்படியாக மழவிடையோன் சிலையை இறுத்த போது மிதிலை மக்களே சொல்லத் தொடங்கிவிட்டார்களாம். இவ்வுண்மையை கம்ப நாடர் கூறுவதையும் கேட்கலாம்.

மிதிலை மக்கள் இராமனை :

**''மானுடன் அல்ல என்பார்!**
**கயல் பொரு கடலுள் வைகும்**
**கடவுளே காணும்! என்பார்''**

மிதிலையின் வாள் கொண்ட கண்ணார்கள், இவ்வளவு ஞானத்தையும் அமைத்துப் பார்த்து ஆனந்தித்தார்களா என்று எண்ண முடியுமா? சந்தேகமே வேண்டாம்! அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி! மகாஞானியும் ராஜரிஷியுமான ஜனக மகாராசனின் குடி மக்களுடைய ஞானத்தைப் பற்றி கேட்கவும் வேண்டுமா? முழுப் பாடலையும் பார்க்கலாம்.

**'தோள் கண்டார் தோளே கண்டார் தொடு கழல்**
**கமலம் அன்ன**
**தாள் கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாரும்**
**அஃதே**

**வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக்**
**கண்டார்!**
**ஊழ்கண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை**
**ஒத்தார்'**

திருமண ஊர்வலத்தையே எவ்வளவு நேரம் அநுப வித்துக் கிடக்கிறது? திருமணம் நடைபெறவேண்டாமா? அதோ ஜனகமகாராசர் குடும்ப ஜன சமேதராகத் தம் பரிவாரங்களுடன் திருமணப் பேரவையிலே பூர்ண கும்பங் களுடன் காத்துக் கிடக்கிறாரே! என்ற உங்கள் குரலும் கேட்கிறது. "மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றூத முத்துடைத்தாமம் நிரை மலர்ப் பந்தரின் கீழ் இதோ திருமணம் நடை பெறுவதையும் காணுங்கள்!

**மன்றலின் வந்து மணத் தவிசு ஏறி**
**வென்றி நெடுந்தகை வீரனும் ஆர்வத்து**
**இன்துணை அன்னமும் எய்தி இருந்தார்**
**ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்!**

**சீதா ராம ஜெயம்!**

# கம்ப-சிம்மம்

கம்ப சிம்மம் என்னும் மகுடம் மூன்று வகையாகப் பொருள்தரும்.

1. கம்பத்திலிருந்து வெளிப்பட்ட நரசிம்ம வைபவம்! ஆழ்வார்கள் ஆச்சாரியர்கள் அருளிச் செயல்களில் அனுபவித்தபடி.

2. கம்ப நாட்டாழ்வாரின் திருவாக்கிலிருந்து வெளிப்பட்ட நரசிம்மவைபவம்.

3. கம்பமாகிய அடியேனது இளைய புன்சொற்களிலிருந்து வெளிப்படும் நரசிங்க வைபவம்.

அடியேனது அழுக்கு உடம்பு எச்சில்வாயால் இவ்வுரையை நிகழ்த்தும் நோக்கம்! 1. கேள்விகளில் மிகப் பெரிய கேள்வி! மகத்தான கேள்வி! சக்ரவர்த்தியான கேள்வி! எது? ''கடவுள் உண்டா?'' என்பதே!

கடவுள் உண்டா என்ற வினாவிற்குக் ''கடவுள் உண்டு'' என்று விடைதந்தது ஸ்ரீ வைணவமே. மற்ற மதங்கள் ''கடவுள் உண்டு'' என்று ஏற்றுக் கொண்டு கடவுளின் பெருமையைப்பாடின!

ஒரு தூணைக் காட்டி ''இதில் கடவுள் உண்டா?'' என்றுகேட்ட போது ''இத் தூணில் மட்டுமல்ல, இத்தூணின் கோடானு கோடி அணுக்களிலும்கூட கடவுள் உண்டு'' என்று சவால் பதில் கொடுத்தது ஸ்ரீ வைணவமே!

தோள் வலிக்கும், வாள் வலிக்கும் ஆட்பட்டு, அடிமைப் பட்டு கடவுள் உண்டு என்று கூற பயப்பட்டபோது, அஞ்சாமல் 'கடவுள் உண்டு' என்று எதிர்த்துச் சொல்வது ஸ்ரீவைணவம்.

2. ''கடவுள் உண்டு'' என்று வேதங்கள் கூறினால் பலனில்லை (போதாது) யார்வாய்ச் சொல் இது!

இந்த வேதங்களை யார் இயற்றியது என்று ஏற்பட வில்லையே! ரிஷிகள் கூற்றும் பயன் இல்லை. அவர்கள் கடவுளாகார்.

கடவுள் உண்டு! என ஆழ்வார்கள் அருளினாலும் பலனில்லை! போதாது! ஆழ்வார்கள் கடவுளாகார்.

ஆச்சாரிய சிரேஷ்டர்கள் அருளினாலும் பலனில்லை! போதாது! ஆச்சாரியசிரேஷ்டர்களும் கடவுளாகார்!

''கடவுள் உண்டு'' என்று யார் சொல்லவேணும்?

கடவுளே தான் மார் தட்டிக் கூற வேணும்? கடவுளே ''நான் உண்டு'' என்றுபிறரும் ஒப்புக்கொள்ளும் வகையில் தூணில் தோன்றி நிரூபித்தது வைணவமே!

3. திருமால் மச்சாவதாரம் எடுத்தார். 'அப்போது கடவுள் உண்டா?' என்ற கேள்வி எழவில்லை. ஏன்? மச்சாவதாரம் நீரிலே தோன்றியது. கடலிலே தோன்றிய பிராணிவர்க்கங்களுக்கு ஆறாவதான பகுத்தறிவு கிடையாது! எனவே கடவுள் உண்டா? என்ற சர்ச்சை எழவில்லை. பெருமாள் கூர்மாவதாரம் எடுத்தார் ஆமை அவதாரமும் கடலிலே! எனவே அங்கேயும், பகுத்தறி வுடைய பிறப்புகள் ஏற்படவில்லை. எனவே ''கடவுள் உண்டா'' என்ற கேள்வி எழவில்லை. வராக அவதாரமும் நரசிங்க அவதாரமும்! ஜோடி அவதாரங்கள்! இந்த அவதாரங்களால் வதைக்கப்பட்ட இரணியாட்சதனும் அவனது அண்ணனான இரணிய கசிபும் அபூர்வ

சகோதரர்கள்! வராக அவதாரம் தோன்றிய நிலத்திலே இரணியாட்சதன் தோன்றினான். இவன் மனித வர்க்கத்தின் முதல் அலையின் மாதிரி.

அசித்தான உலகைப் பார்த்தான். சித்தான உயிர்களையும் பார்த்தான்! இதற்கு மேல் அவனுடைய மூளை வளரவில்லை. அறியாமையே, வளர்ந்தது! அகம்பாவமே வளர்ந்தது! அசித், சித் உலகங்களை சுய நலத்திற்காக அழித்து விடும் சக்தியால், அசித்தையும் சித்தையும் பிரளய ஜலத்திற்குள் ஆழ்த்தினான்.

அழித்து விடமுயன்றான்!

ஈஸ்வரன் தன்னுடைய லீலாவிபூதியான அசித்தும், சித்தும் கொண்ட உலகை தன்னுடைய உடலாகக் கொண்டு விளங்குவதால், ஓர் முனை போன்ற கோட்டால் வராக அவதாரம் எடுத்து அசித், சித்தாலான உலகை மீட்டான்.

கடவுளால் ஈஸ்வர ஞானம் அருளப்பெறாத இரணியாட்சதனான அறியாமையும், அகம்பாவமும் வதை செய்யப்பட்டன.

இரணியாட்சதனுடைய அண்ணன், இரணியகசிபு; மனித வர்க்கத்தில் தோன்றிய மறு அலையின் மாதிரி.

தனது தம்பியான இரணியாட்சதன்போல் அசித் சித்தாலான உலகை ஏன் அழித்துவாழ வேண்டும்? இவைகளை வளர்த்து வளர்த்து அடக்கியே வாழலாமே! என முயன்றான்?

பொன் விளைந்த களமாயிற்றுஉலகம்!

அறியாமை, அகம்பாவம் என்னும் நாணயங்களின் மறுபாகமே இவைகளும். "கடவுளாவது, அவர் உலகை உண்டாக்குகிறதாவது, ரட்சிக்கிறதாவது, அழிக்கிறதாவது!

இவை எல்லாம் அறிவீனம்! நானே சகலமும்! என எண்ணி விட்டது இரணிய கசிபுவின், பகுத்தறிவு விபரீதம்.

இவனும் கடவுளால் ஈஸ்வர ஞானம் அருளப்பெறா தவன்.

எனவே (உலகில்) நிலத்தில் தோன்றிய இரணி யாட்சதன் இரணியகசிபு என்னும் மனிதவர்க்கத்தின் பிரிவுகளின், ''கடவுள் உண்டு'' என்று ஒப்புக் கொள்ளாத அறியாமையையும், அப்படிக் கடவுள் இருப்பினும் அவர் எனக்கு நிகரில்லை என அகம்பாவமும் கொண்ட, விபரீதப் பகுத்தறிவையும் ஒழித்து ''கடவுள் உண்டு!'' என்று நிலை நாட்டிய அவதாரங்கள் வராக அவதாரமும் நரசிங்க அவதாரமும் ஆகும்.

நேரிலேயே தோன்றி சவால் ஏற்றது நரசிங்க அவதாரம் ''கடவுள் உண்டா?'' என்ற கேள்விகளில் மிகப்பெரிய கேள்விக்கு பதிலளித்துக் 'கடவுள் உண்டு' எனக் காட்டியதால்,

வராக அவதாரத் திருமால், வராக நாயனார் எனத் துதிக்கப்படுகிறார்.

நரசிம்மப் பெருமாளும் 'தெள்ளிய சிங்கப் பெருமாள், என மங்களாசாசனம் பெற்றார்.

''கடவுள் உண்டு'' என்று பெருமாள் நிரூபித்துக் காட்டியமையால் சமயங்கள் பிழைத்தன; சமயத்தை அநுஷ்டிக்கும் மக்கள் உயர்ந்தனர்! மக்கள் வாழும் உலகமும் ஆன்மீக ஒருமைப்பாட்டை அடைந்தது.

''கடவுள் உண்டு'' என்றும் அவரே உலகை உண்டாக்கு கிறார் என்றும் இவ்வுலகை அவரே காப்பாற்றுகிறார் என்றும் அவரே இந்த உலகை அழித்து மறுபடியும் தோற்று விக்கக்கூடிய சக்திகளை உடையவர் என்றும், இவ்விதமான மூன்று அரிய, பெரிய சக்திகளைக் கொண்டவரே பிரபஞ்சத்

தின் தலைவர் என்றும், இந்தத் தலைவரே ஸ்ரீமந்நாராயண மூர்த்தி என்றும், இந்தப் பெருமைகளைக் கொண்ட ஸ்ரீமந் நாராயண மூர்த்திதான் அவதாரங்கள் புரிந்து முடிவில்லாத திருவிளையாட்டுகளை நிகழ்த்துகிறார் என்பதையும் இராம காதையின் எடுப்பிலேயே கடவுள் வணக்கத்திலேயே, அமைத்து அற்புதமாகப் பாடுகிறார் கவிச்சக்ரவர்த்தி யாகிய கம்ப நாட்டாழ்வார். சரணாகதி உப தேசத்தையும் சேர்த்து!

1. ''உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்,

2. நிலை பெறுத்தலும்;

3. நீக்கலும்; நீங்கலா அலகிலா விளையாட்டு உடையாரவர் (யார்+அவர்) தலைவர்! அன்னவர்க்கே சரண் நாங்களே!''

இரணியாட்சதனுக்குப் பிறகு பிழைத்துக் கிடந்தவன் இரணியகசிபு.

தம்பி, உலகை அழித்துக் காட்டித் தன் பலத்தை நிரூபிக்கமுயன்றான். அண்ணன் இந்த உலகைத் தன் சுய நலத்திற்காக அடக்கி ஆண்டு நீடூழி வாழ்ந்து தன் பலத்தை நிரூபிக்க முயன்றான்!

இதற்கு ஆயுள் பலம் வேண்டுமே!

''தனக்குச் சாவு கிடையாது!'' என்று இறுமாந்திருந்த தம்பியான இரணியாட்சதனைப் பெருமாள் வராக அவதாரம் எடுத்து வதம் செய்துவிட்டாரே!

அவரால் தனக்கும் மரணம் ஏற்பட்டு விடுமோ எனச் சந்தேகம் வந்து விட்டது இரணியனுக்கு.

தன் ஆயுளைத் தானே நீட்டித்துக் கொள்ள முடியாது என்றும், தானே தன் மரணத்தைத் தடுத்துக் கொள்ள முடியாது என்றும், அவனுடைய பகுத்தறிவுக்கு எட்டி விட்டது.

''உலகை நீடூழி ஆளவேண்டின் நீடித்த ஆயுள் பலமும் வேணும். இதை அளிக்க வல்லவர்கள் மூவரே.

இவர்களைக் குறித்துத் தவம் செய்து ஆயுள் பலம் பெற வேணும். திருமாலிடம் வரம் பெறலாமா? அவன்தான் தம்பியைத் தொலைத்து விட்டானே! தன்னையும்தான் அழிக்கச் சமயம் பார்த்துக் கொண்டிருப்பானே!

திருமாலைக் குறித்துத் தவம் செய்து விட்டால், நரசிங்க வைபவமே இல்லையே! சிவனைக் குறித்துத் தவம் செய்யலாமா? சிவனுக்கு ஒரு விதமான வரம் தரும் சக்தி தான் உண்டு!

அதாவது இன்னொருவனை அழிக்கும் வரம் தருவான்:

பஸ்மாசுரனுக்கு இந்த வரத்தை அளித்தான். தனக்கே ஆபத்து ஏற்பட்டு விட்டது. மோகினி அவதாரம் கொண்ட பெருமாளால் ஒருவாறு தப்பித்துக் கொண்டான். இந்த வைபவத்திற்குப் பிறகு வரம் தரும் வழக்கத்தையே கைவிட்டான்.

கடைசியாக உள்ளவன் பிரமன்!

பிரமனும், இரணியனின் தவத்திற்கு உகந்து வரம் அளிக்க வந்தான்.

இரணியன் வேண்டல்: ''பிரம தேவனே! எனக்கு உன்னால் படைக்கப்பட்ட உலகில் பகலிலும் மரணம் ஏற்படக்கூடாது.

பிரம வாக்கு: ''சரி!''

''இரவிலும் மரணம் ஏற்படக்கூடாது''

''அப்படியே!''

''பஞ்சபூதங்களாலும் ஏற்படக்கூடாது''

''ஆம்!''

''தேவர்கள், அசுரர்களாலும் கூட''

"சரி! சரி!"

"மேலும் உன்னால் படைக்கப்பட்ட மனிதர்களால் கூட எனக்கு மரணம் ஏற்படக் கூடாது"

"சரி"!

"மனிதர்கள் படைத்த வீடுகளின் உள்ளும் வெளியிலும் எனக்கு மரணம் ஏற்படக் கூடாது"

"சரி!"

"உன்னால் படைக்கப்பட்ட மனிதர்களால் படைக்கப் பட்ட ஆயுதங்களால்"

"ஆம், அவைகளும் உன்னை அழிக்கமாட்டா!"

"ஈரமுள்ளவைகளால் மற்றும் ஈரம் பாயாதவைகளால் கூட"

"சரி அப்படியே!"

"உன்னால் படைக்கப்பட்ட மிருகங்களால் கூட மரணம் ஏற்படக்கூடாது"

"சரி";

"ஆண் அல்ல, பெண் அல்ல, அலியினாலும், சாவு ஏற்படக் கூடாது" அட! யமனாலேயே கூட மரணம் உண்டாகக் கூடாது!" "உண்டாகாது."

இதற்கு மேல் பகுத்தறிவு வேலை செய்ய வில்லை!

"பிரம்மதேவனே! சரி, நீர் போகலாம்!" என்றான் இரணியன்!

சாகாவரம் பெற்று விட்டதாக எண்ணி இறுமாந்த இரணியன் மீசை முறுக்கித், தோள்கொட்டித் தொடை தட்டிப் பாடுகிறான்! இரணியன் அபிநயம் கம்பர் பின்னணி சங்கீதம் பாடுகிறார்.

**பெண்ணில் சாகிலேன் பேர் எழில் ஆணில் அலியினில்**
**பிறந்ததன்**
**உள் நிற்கும் உயிரா உள்ளதில் இல்லதில் உலவேன!**
**கண்ணின் காண்பன கருதுவ யாவினும் கழியேன்!**
**மண்ணில் சாகிலேன்! வானிலும் சாகிலேன்!—வரத்தால்!**
**(விட்டின்) உள்ளில் சாகிலேன்! புறத்திலும் உலக்கிலேன்!**
**உலவாக்**
**கொள்ளைத் தெய்வ வான் படைக்கலம் யாவையும் (எனைக்)**
**கொல்லா**
**நள்ளில் சாகிலேன்! பகலிடைச் சாகிலேன்! நமனார்**
**கொள்ளச் சாகிலேன்! ஆர் இன் என் உயிர் கொள்வார்?**

"பராக்; பராக்; இரணியனுடைய சொரூபம், பிரமாண்டமாகி விட்டது! வீரச் செயல்களில் அவனுக்கு இணை கிடையாது. மூவுலகங்களும் அவனுக்கு அடக்கமே! அவனுடைய செல்வமோ அமோகமாகக் கிடந்தது.

தரணியிலுள்ள தங்கம் எல்லாம் அவனைச் சூழ்ந்து விட்டது!

தங்க மயமாகப் பொன்மயமாகச் சொலித்தான்! "இரணியன் என்றால் பொன்; அவனும் பொன்னானான், இரணியனாகி விட்டான்;

"எவ்வும் வெவ்வேல் பொன் பெயரோன்!" என்றே மங்களாசாசனம் பெற்று விட்டான். (பெரியதிரு. 7-7-4)

இரணியன் மனதில், உலகில் பரவும் சக்தி எல்லாம் தன்னது என்று எண்ணி விட்டான்.

கடவுளாவது, காரியமாவது! என்று பேச ஆரம்பித்து விட்டான்!

மக்களும் அவனைக் கடவுள் என்றே கருதி வணங்கினார்கள்!

உபசாரவார்த்தை மெள்ள மெள்ள உண்மை உரை யாகி விட்டது!

''நானே கடவுள்! என்னையே வணங்குங்கள் ''இரணியாயநம:'' என்னுங்கள்'' என்றான்.

மக்களும் 'இரணியாய நம!' என்று கோஷித்தார்கள்!

காசே தான் கடவுளடா—என்று பாடினார்கள்!

இரணியாட்சதனும்,இரணியகசிபும் உலகில் தோன்றிய ஆதி மனித பரம்பரையின் சின்னங்கள்; அறியாமையின் உருவங்கள்; அகம்பாவத்தின் உருவங்கள்; தெளிந்த பகுத்தறிவால் ஏற்படும் கடவுள் அறிவு நிரம்பாதவர்கள்; அஞ்ஞானிகள்! வாலறிவன் நற்றாள் தொழாதவர்கள்.

இவர்களுக்கு அடுத்த தலைமுறை ஞானிகளுடைய தலைமுறை! தெளிந்த பகுத்தறிவு நிரம்பியவர்கள்; அகம்பாவம் அகற்றி ஆண்டவன் திருவடி தொழுதவர்கள்; ஆதி பகவன் முதற்றே உலகு! என வணங்குபவர்கள்.

இந்தத் தலைமுறையின் தலைவனே, விடிவெள்ளியே, பிரகலாதன்.

பிரகலாத பரம்பரை தோன்றா விட்டால் உலகம் நரகமே!

நம்பியின் நாமங்களை நவின்ற பரம்பரை தோன்றியதால்தான் நரகமயமான உலகம் சுவர்க்கமாகியது!

அடியார்களுடைய ஈடுபாட்டை, பக்தியை எடைபோட்டு விருது அளித்துள்ளது ஸ்ரீ வைணவம். அருளிச் செயல்களை வழங்கியவர்கள் பெற்ற விருது ஆழ்வார்கள்; 'பக்தியில் ஆழ்ந்தவர்கள்-ஆழங்கால்பட்டவர்கள். இவர்கள் மயர்வற மதி நலம் அருளப் பெற்றவர்கள்;

இவர்களுடைய ஞானம், கடுந்தவம் இயற்றி அடைந்த ரிஷிகளைப் போன்றதல்ல! இவர்களுடைய ஞானம் இறைவனால் அருளப் பெற்றது. இறைவனிடமிருந்து பள்ளமடையாகப் பெறப்பட்டது.

''உயர்வற உயர் நலம் உடையவனால் அயர்வறும் அமரர்கள் அதி பதியால் தன் துயரறு சுடரடியைத் தொழுது எழுவதற்காக மயர்வற மதி நலம் அருளப்பட்டவர்கள்'' 'ஆழ்வார், என்னும் அரிய விருதை மேலும் சில பக்தி ரத்தினங்களுக்கு ஸ்ரீ வைணவம் அளித்துள்ளது.

''கஜேந்திர ஆழ்வான்''. அழியக் கூடிய ஹேயமான தன் உடலுக்கு ஏற்பட்ட துன்பத்தை மதியாமல் திருமாலின் திருவடிகளில் கமலமலரைச் சேர்க்கத் தடை ஏற்பட்டதே என்பது தான் ஆனையின் துயரம்.

''விபீஷண ஆழ்வான்''. தர்மத்திற்கு விரோதமான பாவச் செயல்களைப் புரியும் இராவணனை நீக்கி அருளின் கருணையின்—கடலான இராமபிரானைச் சரணடைந்தான் 'ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்'' என்றானே! இவன்! கம்ப மதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன், என்றானே இவன்!

''வானாளும் மாமதி போல் வெண்குடைக்கீழ், மன்னவர் தம் கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்' என்றானே இவன்.

விபீஷணாழ்வானின் இந்த மேன்மையைப் பற்றிக் கம்ப நாட்டாழ்வாரின் திருவாக்கு.

''முரண்புகு தீவினை முடித்த முன்னவன், (இராவணன்)
கரண்புகு சூழலே சூழக் காண்பதோர்
அரண் பிறிது இல்'' என அருளின் வேலையைச்
சரண் புகுந்தான்'' என முன்னம் சாற்றினான்''
இது ராமபிரானிடம் மைந்தன் விண்ணப்பித்தது.

இந்த வரிசையிலே வரும் பிரகலாதனும் பிரகலாதாழ்வான் என உயருகிறான்.

நம்மாழ்வார் உள்ளிட்ட ஆழ்வார்கள் அனைவரும் உலகில் பிறந்த பின்பே; மயர்வற மதிநலம் அடைந்தனர் கஜேந்திராழ்வானும் விபீடண ஆழ்வானும் அவ்விதமே!

ஆனால், பிரகலாதாழ்வானோ கருவிலே திருவுடையவன்! ''கருவரங்கத்துள் இருந்தே கை தொழுதவன். ஸ்ரீ வைணவ பரிபாஷையிலே ஜாயமான கடாட்சம்பெற்றவன்!

எனவே இரணிய பிரகலாதக் கதை; பொய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் அமைந்த இரணிய அஞ்ஞானிக்கும், மயர் வற மதி நலம் அருளப்பட்ட பிரகலாதாழ்வானாகிற ஞானிக்கும் ஏற்பட்டமோதல்தான்.

''அதமனுக்கும் ஆழ்வானுக்கும் ஏற்பட்ட வாதமே!''

மனித குலத்திற்கு, கடவுள் மீது கொண்டிருந்த அவமதிப்பையும், அறியாமையையும் நீக்கி மதிப்பையும், ஞானத்தையும் நிலை நாட்டிய பெருமகன் பிரகலாதன்.

எல்லா உயிரற்ற பொருள்களும் உயிருள்ளவைகளும் தன் ஆட்சியில் இருப்பதாக இரணியனின் நம்பிக்கை.

தானே எல்லாவற்றையும் ரட்சிப்பதாயும், தன்னிடமே எல்லாம் அடக்கம் என்றும் எண்ணம்.

எனவே கடவுள் என்று வணங்குவதை விட்டு 'என் பெயரையே துதியுங்கள்' என்று ஆணையும் இட்டுவிட்டான்.

பிறவி ஞானியான பிரகலாதாழ்வானுக்கும் இந்த உபதேசம் செய்யப்படவே, அவன் இதை எதிர்த்து ''ஓம் நமோ நாராயணாய!'' என்று உண்மை ஞானத்தை வெளியிட்டான்.

இதைக் கண்டு அஞ்சிய ஆசிரியர் இரணியனிடம் பிரகலாதனைக் கொண்டு வந்து சேர்த்தார்.

இனி, இரணிய-பிரகலாத சம்வாதத்தை ஆராய்வோம்.

இரணியனுடைய இரத்தினச் சுருக்கமான கேள்வி :

மிகப் புனிதமான வார்த்தைகளிலே விண்ணப்பிக்கிறேன், "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?"

இரணியன் கருத்துப்படி இதன் பொருள் : செத்ததன் வயிற்றில் அசித் சம்பந்தத்தால் ஆன உடலிலே, சிறியது பிறந்தால் ஜீவாத்மா சேர்ந்து பிறவி எடுத்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்? எவைகளை ஆதாரமாகக் கொண்டு உலகில் ஏற்பட்ட பிறவியை அனுபவிக்கும்.

பிரகலாதாழ்வாரின் பதில்: "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்", "அகார வாச்சியனான ஸ்ரீமந் நாராயணனின் திருவடிகளையே தஞ்சமாகக் கொண்டு தன் தேக யாத்திரையை நடத்தும்.

இந்த பதில் அஞ்ஞானியான இரணியனுக்குப் புரிய வில்லை.

"பிரகலாதா! இந்த பதில் புரியவில்லை; நீ இந்தக் கேள்வியைக் கேள்! என்ஞானத்தின் அடிப்படையில் நான் பதில் சொல்கிறேன் என்றான்".

பிரகலாதாழ்வார் அதே கேள்வியைக் கேட்டார்: "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?"

பளிச்சென்று பதில் சொன்னான்! இரணியன், தன் அஞ்ஞானத்தின் அடிப்படையில்,

"அத்தைத் தின்று அங்கே கிடக்கும்"

இரணியனுடைய பதிலின் கருத்து! உலக அசித் சம்பந்தத்துடன் ஜீவாத்மா பிறவி ஏற்றால், அந்த அசித்தையே பெரிதும் உகந்து அதையே அனுபவித்துக் கொண்டு வேறு ஈஸ்வர கவலையும் தேவையும் இல்லாமல் வாழ்ந்திருக்கும்.

காசேதான் கடவுளடா.

இந்த இரணியாயிசத்தை மேலும் விவரிக்கிறான் இரணியன்.

தன் திடமான நம்பிக்கை நீண்ட அனுபவத்தின் அடிப் படையில், தந்தைப் பாசத்துடன் கூறுகிறான்.

எல்லா உலகத்தையும் நானே அடக்கி ஆண்டு வருகிறேன்! காப்பாற்றுகிறேன். என்னையன்றி வேறு சக்தி இல்லையே;

எனவே, ''இரணியாயநம.'' என்று சொல்வாயாக'' என்றான்.

பிரகலாதாழ்வான் : இந்தக் கருத்தை மறுக்கும் வகை யில், எதிர்க்கும் வகையில், மாய்க்கும் வகையில், வீழ்த்தும் வகையில், தன் கருத்தை விளக்கும் வகையில், ''ஓம் நமோ நாராயணாய'' என்றான்.

இங்கே ஒரு சூட்சுமமான விஷயத்தைக் கவனிக்கலாம்;

பிரகலாதாழ்வான் இறைவனுடைய பன்னிரு திரு நாமங்களில்,

1. ஓம் கேசவாய நம: எனக் கூறியிருக்கலாமே;
2. ஓம் மாதவாய நம: எனக் கூறியிருக்கலாமே,
3. ஓம் கோவிந்தாய நம: எனக் கூறியிருக்கலாமே,
4. ஓம் விஷ்ணவே நம; எனக் கூறியிருக்கலாமே,
5. ஓம் மதுசூதனாய நம: எனக் கூறியிருக்கலாமே,
6. ஓம் திருவிக்கிரமாய நம: எனக் கூறியிருக்கலாமே,
7. ஓம் வாமனாய நம: எனக் கூறியிருக்கலாமே,
8. ஓம் சிரீதராய நம: எனக் கூறியிருக்கலாமே,
9. ஓம் இருஷீகேசாய நம: எனக் கூறியிருக்கலாமே,
10. ஓம் பத்மநாபாய நம: எனக் கூறியிருக்கலாமே,
11. ஓம் தாமோதராய நம: எனக் கூறியிருக்கலாமே,

ஏன் கூறவில்லை அந்த பிரகலாத ஞானி?

பெரிய திருமந்திர அவதாரமான நரசிம்ம—பிரகலாத வைபவம் மிகமிக ரசமானது! ஸ்ரீ வைணவ வைபவங் களிலேயே சிங்கமானது.

எட்டு எழுத்து கேட்டுப் பதினாறு அடிதாண்டும் மிகு ஞானச் சிறு குழவியின் வைபவம். ஸ்ரீ வைணவத்தை அணுவிலிருந்து அண்டம் வரை காட்டும் வைபவம்.

நாராயண நாமகரணம் யாரால் வழங்கப்பட்டது!

பெருமாள் மீனாகப் பிறந்தருளினார்; மக்கள் அதனால் காரணப் பெயராக மச்சாவதாரம் என நாமகரணம் சூட்டினர்.

அடுத்து, பெருமாள் ஆமையாகப் பிறந்தருளினார்; மக்கள் அதனால் கூர்மாவதாரம் என நாமகரணம் சூட்டினர்.

அடுத்து பெருமாள் பன்றியாகப் பிறந்தருளினார்;மக்கள் வராகவதாரம் என நாமகரணம் இட்டனர்.

அடுத்து, பெருமாள் நரனான மனிதனும் சிம்மமும் கலந்த பிறவி எடுத்தார்; மக்கள் நரசிம்ம அவதாரம் என நாமகரணம் இட்டனர்.

அடுத்து பெருமாள் குறள் வடிவுடன் அவதரித்தருளி னார்; மக்கள் வாமனாவதாரம் என நாமகரணம் சூட்டி னர். வாமனம் என்றால் குள்ளம்.

எல்லாரும் ரமிக்கத்தக்க விரும்பத்தக்க பிறவி எடுத்தருளினார்; மூக்கறுபட்ட சூர்ப்பனகையும் வர்ணித் தாளே அவன் அழகை, எனவே மக்கள் இராமன் என நாமகரணம் இட்டனர்.

தனக்கென, பரசு என்னும் கோடாரியை ஏந்திக் கொண்டு நாராயண வில்லைக் கொணர்ந்து சீதாராமனிடம் தந்து இராமவதார நோக்கத்தை வெளியிட்டமைக்காக மக்கள் பரசுராமன் என நாமகரணமிட்டனர்,

ஹல என்கிற அகிம்சையின் சின்னமான கலப்பையைத் தோளில் தாங்கி சமாதானம் போதித்ததால் மக்கள் 'ஹல ராமன்' "அலங்கெழுநடக்கையன் பலராமன்" என நாமகரணமிட்டனர். பாரதப் போரிலும் நடுநிலை வகித்தார்.

பின்னர் சாதுசனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்காக அவதாரம் செய்தார்; அவனுக்குக் கண்ணன் என்னும் கரும் தெய்வம் என்று திருப்பெயர் ஏற்பட்டது.

ஸ்ரீ ஆண்டாளே கண்ணன் கறுப்பாக இருந்தமையால் கிருஷ்ணன் எனத் திருநாமம் ஏற்பட்டது எனக் கூறுகிறார்.

கிருஷ்ணம் கறுப்பு

கலியுகத்தின் முடிவிலே அவதரிப்பதால் "கல்கி."

எனவே இவை எல்லாம் காரணப் பெயர்களே.

மேலெழுந்த காரணங்களே! உள் அர்த்தம் இல்லை. அர்த்த புஷ்டியில்லை.

'சுவாபதேசம்' என்று விவரிப்பதற்கில்லை.

ஸ்ரீமந் நாராயணத் திருநாமம் மக்களால் வழங்கப் பட்டதா! இல்லை.

ஸ்ரீமந் நாராயணனாலேயே தனக்கே அருளப்பட்டது. இது அபூர்வம்.

'ஓம்நமோ நாராயணாய' என்னும் பெரிய திருமந்திரம் உலகிற்கே எப்படிக் கிடைத்தது?

இந்தக் கேள்விக்கு ஸ்ரீ வைணவம் சந்தேகத்துக்கு இடமில்லாமல் தெளிவாக அருளும் பதில்: பதரிகாச்சிரமத்திலே பெருமாள்தானே—ஆசாரியனான நாராயணனாகவும், தானே நர நாராயணனான சீடனுமாக அமைந்து பெரிய திருமந்திரத்தை வெளியிட்டருளினான். ஏன் இப்படியான உபதேசம்?

நாராயண நாமமாகிய திருமந்திரத்தை, தானே சிஷ்யனுமாய், ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டருளினான். வெளியிட்டருளி:

**"தேனும் பாலும் அமுதும் ஆயதிருமால் திருநாமம்,**
**நானும் சொன்னேன் நமரும் உரைமின்**
**நமோ நாராயணமே"!**

என நியமித்தருளினான்.

அதனால் "இத்தை வேதங்களும், ரிஷிகளும், ஆழ்வார்களும், ஆச்சார்யர்களும் விரும்பினார்கள்"

ஏன் இந்த ஸ்ரீமந் நாராயண மந்திரத்தை இறைவன் வெளியிட்டருள வேணும்?

தன்னுடைய சர்வ தன்மைகளையும், குணங்களையும் மேன்மைகளையும் உலகம் அறிந்து உய்வதற் பொருட்டேயாகும்!

**பிள்ளைலோகாசாரியர் அருளிய முமுட்சுப்படி**

**சூத்திரம்—5**

**"சம்சாரிகள் தங்களையும் ஈசுவரனையும் மறந்து, ஈஸ்வர கைங்கரியத்தையும் இழந்து, "இழந்தோம்!" என்கிற இழவும் இன்றிக்கே, சம்சாரமாகிற பெருங்கடலில் விழுந்து, நோவு பட சர்வேசுரன் தன் கிருபையாலே, இவர்கள் தன்னையறிந்து கரைமரம் சேரும்படி. தானே சிஷ்யனுமாய், ஆசார்யனுமாய் நின்று திருமந்திரத்தை வெளியிட்டருளினான்!"**

பெருமாள் திருமந்திரத்தை வெளியிட்டருளியது அவனுடைய நீர்மையால்— கருணையால்.

அண்ணரான பிள்ளைலோகாசாரியர் முமுட்சுப்படியில் அருளிச் செய்ததை வழிமொழிகிறார். அவரது திருமத்தம் பியாராகிய அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் "ஆச்சாரிய இருதய" முதல் சூத்திரத்திலே ;

**"காருணிகனான சர்வேஸ்வரன், அறிவிலா மனிசர் உணர்வெனும் சுடர் விளக்கு ஏற்றிப் பிறங்கிருள் நீங்கி, மேல் இருந்த நந்தாவிளக்கினைக்கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின பிரதீபமான கலைகளை நீர்மையினால் அருள் செய்தான்!"**

(*நீர்மையினால்—பரிவினால் அருள் செய்தான்!*)

ஸ்ரீமந்நாராயணனே ஏன் வதரிகாச்ரமம் வந்து பெரிய திருமந்திரத்தை அருளவேணும்! வேதங்களிலே பெருமானுடைய பலதிருநாமங்கள் சொல்லப்படும், நாராயணன் என்னும் பெரிய திருமந்திரம் கூறப்படவில்லை. எனவே ஸ்ரீமந்நாராயணனே உலகில் உயரத்திலே உள்ள வதரிகாச்ரமம் வந்து வெளியிட்டருள வேண்டியதாயிற்று. வேதம் வெளியிடத் தவறிய இடத்தைப் பெருமாள் தன் நீர்மையினால் பூர்த்தி செய்தருளினான்!

இங்கே ஒரு புதிர் ஏற்படுகிறது. அதை விளக்க வேண்டும் வதரிகாச்ரமம் திவ்யதேச மாயிற்றே!

திவ்யதேசம் அர்ச்சையாயிற்றே! வணங்கப்படும் திருமேனியாயிற்றே! நரசிங்க வைபவம் அவதாரமாயிற்றே! எப்படி அவதாரமான விபவத்திற்குப் பின் ஏற்பட்ட அர்ச்சையான வதரிகாச்ரமத்திலிருந்து திருமந்திரம் வெளியிடப்பட்டிருக்கும் அவதார முற்காலத்தோடு எப்படி இதை இணைக்க முடியும்?

மற்ற திவ்ய தேசங்களுக்கு இல்லாத ஒரு தனிச் சிறப்பு வதரிக்கு உண்டு. அதாவது இத்திவ்ய தேசம் 'வதரிகாச்ரமம்' என்ற திருநாமம் உடையது. அதாவது எம் பெருமான் திருகோயில் கொண்டு வணங்கப்படும் சிலா திருமேனியோடு எழுந்தருளவில்லை.

ஆச்சிரமம் என்றால் தங்கி உறைந்து தவவாழ்க்கை இயற்றும் இடம் எனப் பொருள்படும்;

இறைவன் பரமபதத்திலிருந்து அவதாரம் எடுக்காமல் அப்படியே தன் திருமேனியுடன் எழுந்தருளி வந்து வதரியில் ஆசிரமம் அமைத்து வாழ்ந்தான். இது அவதார காலங்களுக்கு முன்பே ஏன் இறைவன் வதரியில் ஆசிரமம் அமைக்கவேண்டும். வேதம் விட்ட குறையை (நாராயண மந்திரத்தை வேதம் வெளியிடத்தவறிய குறையை) நீக்குவதற்கு என்றே வதரிக்கு எழுந்தருளினான்.

பரமபதத்திலிருந்து ஒரு நரனை, மனிதனை, சீடனாக அழைத்துவர முடியாது, அதனால் அவனே சீடனான, நர நாராயணனானான்!

(1). நாராயணனும், (2). நர நாராயணனுமாக வதரியாச்சிரமம் எழுந்தருளியது, பெரிய திருமந்திரத்தை உலகுக்கு அருளவேதான்!

சரி! இந்தப் பெரிய திருமந்திரம் நாரத பகவானுக்கு எப்படிக் கிடைத்தது!

பரமபதத்திலிருந்து ஸ்ரீமந் நாராயணன் அரவிந்த வல்லித் தாயாருடன் வதரிகாச்சிரமத்திற்கு எழுந்தருளியது திருமந்திரத்தை வெளியிட்டருளவே!

இது உபதேசிக்கப்பட்ட சீடனும் நரனான நாராயணனாகையாலே அவனைக் கொண்டு இதனை உலகில் பரப்ப முடியாது போயிற்று.

அதற்காகவே பரமபதத்திலிருந்து நாரதரையும் உடன் அழைத்து வந்தார் பெருமாள். நாராயண மந்திரத்தையே சிரஞ்சீவியாக சர்வ சதா காலமும், சகல லோகங்களுக்கும் சென்று பரப்பிட வேண்டுமென்று நாரதருக்கு நியமித்தருளினார்.

நாரதர் வதரிவாசியாக எழுந்தருளியிருந்தாரா? என்பதைக் கவனிக்கலாம்.

வதரிகாச்சிரமத்தில் உள்ள தப்தகுண்டம் முதலான ஐந்து தீர்த்தங்களில் நாரதகுண்டமும் ஒன்று.

தினமும் நாரதர் தீர்த்தமாடிய புனிதம் உடையது.

வதரியில் ஐந்து மூர்த்திகளுக்கு சிலாரூபத்தில் ஆராதனை உண்டு.

இவைகளில் நாரதமுனிவருக்கும் ஒரு சிலை அமைந்துள்ளது!

நாரதபகவான், உலகில் இரணியாட்சதன் அடுத்து இரணியகசிபு பரம்பரையை அடுத்துதித்த ஞானிபரம்பரையில் தோன்றிய பிரகலாதாழ்வானுக்கு, கருப் பருவத்திலேயே உபதேசித்தருளினார். மனித குலத்தின் முதல் ஞானக் கொழுந்து பிரகலாதன். எனவே ஜீவாத்மாவான பிரகலாதனுக்கு பரமாத்மாவிடமிருந்து நாரதபகவான் மூலமாகத் திருமந்திரம் கிடைத்தது.

ஸ்ரீமந் நாராயணனே பிரகலாதனுக்கும் நமக்கும் எந்தை, தந்தை, தந்தை, தந்தைக்கும் முந்தை. திருமாலால் அருளப்பட்டதால், சிரஞ்சீவியான நாராயண மந்திரத்தை ஸ்ரீமந் நாராயணனிடமிருந்தே அருளப்பெற்ற நாரதர் சிரஞ்சீவியானார். நாரத பகவானிடமிருந்து அதனை உலக மக்கள் சார்பில் பெற்ற பிரகலாதனும் சிரஞ்சீவியானான். எனவே எல்லா சாஸ்திரங்களிலும் கிடைக்கும் ஞானம் நாமே சம்பாதிக்கும் சொத்துபோல; திருமந்திரத்தால் அடையும் ஞானம் பரம்பரைச் சொத்து போல!

## மூமுட் சுப்படி-7

**"சகல சாஸ்திரங்களாலும் பிறக்கும ஞானம் சுயமார்ஜிதம் போலே; திருமந்திரத்தால் பிறக்கும் ஞானம் பைத்ருக தனம் போலே."**

எனவே பிரகலாதன் இரணியனான தேகத்தந்தையின் கட்டளைக்கு அடிபணியாமல் நாராயணனான ஆத்ம தந்தையின் உயர்வையும் உறவையும் வெளியிட்டான்.

எனவே தான் நாரங்களுக்கு அயனம் நாராயணனே, நாரங்களின் அயனமும் நாராயணனே, இரணியன் அல்ல; என்று பதிலளித்தான் பிரகலாதாழ்வான்!

பிரகலாதாழ்வான் பெரிய திருமந்திரத்தை இரணியனுக்கு உபதேசித்ததைக் கம்பநாட்டாழ்வார் அறிவிக்கிறார்;

**"அன்னது கேள்! நாராயணாய!"**

இது ஒப்பு உயர்வற்ற இறைவன் திருநாமம்;

**"ஒருவன் நாமம்"**

இது அறம் பொருள் இன்பம் ஆகிய எல்லா புருஷார்த்தங்களையும் தரும்.

**"காமம் யாவையும் தருவதும்"**

இவ்வுலக வாழ்விற்குப் பிறகு பரம பதம் அளிக்கும்;

**"சேமமுறச் செய்வதும்,"**

சுவர்க்கம் முதலிய சுக போகங்களுக்காகச் செய்யப் படும் யாகங்களின் பலன்களையும் தரும்.

**"செந்தழல் முகந்த" ஓமவேள்வியின் உறுபதம் உய்ப்பதும்"**

பிரகலாதாழ்வானின் முழு வாக்கையும் சேவிப்போம்!

**"காமம் யாவையும் தருவதும், அப்பதம் கடந்தால்**
**சேமவீடுஉறச் செய்வதும், செந்தழல் உகந்த**
**ஓம வேள்வியின் உறுபதம் உய்ப்பதும், ஒருவன்**
**நாமம் அன்னது கேள்! நமோ நாராயணாய"**

பிரகலாதாழ்வானின் வாதத்திற்கு எதிர் வாதம் புரிகிறான் இரணியன், வேதத்தில் கர்ம காண்டத்தில் எப்படி எல்லாம் விதிக்கப்பட்டுள்ளதோ அதன்படி தவம், யாகங்களைப் புரிந்தான். அதன்படி பலன்கள் கிடைக்கின்றன, வேதம் (Traveller's Guide Book). நாளும் வேதம்

சொன்னபடி தவம் இயற்றி எனது உலகத் தலைமையைப் பெற்றுள்ளேன்; இதற்கு ஒரு தெய்வ தயவும் தேவையில்லை.

**வேதம் எவ்வணம், ''பேர் உலகில் அவ்வணம் அவ்வணம்**
**அவை சொன்ன விதியால்**

**கோதுஇல் நல்வினை செய்தவர் உய்குவர்''**

கொடிய செயல்களை எண்ணிச் செய்தவர் தாழ்ச்சி அடைவார்கள்.

குறித்துத் **''தீது செய்தவர் தாழ்குவ;''**

இதை தவிர உலகில் முதலும் இல்லை, முடிவும் இல்லை.

**''ஆதி அந்தங்கள் இதனின் மற்று இல்லை;**

இந்த உண்மையைத் தெரிந்து கொள்வாயாக.

**''இது மெய்ம்மை தெரியின்!''**

எதிர் உபதேசத்தின் முடிவு, '

**''ஆதி அந்தங்கள் இதனின் மற்று இல்லை, பேர் உலகில்**
**வேதம் எவ்வணம், அவ்வணம், அவை சொன்ன**
**விதியால்**

**கோதுஇல் நல்வினை செய்தவர் உய்குவர், குறித்துத்**
**தீது செய்தவர் தாழ்குவர் இது மெய்மை தெரியின்''**

எல்லாம் கர்ம பலன்தான்!

முன் பிறவிகளில் நாம் புரிந்த நல்வினை தீவினைகள் அதாவது கர்மாக்களின் விளைவாகவும் இப்பிறவியில் புரியும் வினைகளின் பயனாகவும் நமக்கு வாழ்க்கையில் பயன்கள் ஏற்படுகின்றன.

இது தவிர்க்க முடியாத ஒரு சுழல் சக்கரம் என ஏற்றுக் கொண்டால் ஈஸ்வர தத்துவத்திற்கே இடமில்லாமல் போகிறது.

கடவுள் தத்துவமே தேவையில்லை; எல்லாம் கர்மத்தின் ஆட்சியே.

இது கர்ம காண்டத்தையே நம்பி, ஞான காண்டத்தை இகழ்வதாகும்; இழப்பதுமாகும்.

கர்மாவின் சக்தி தானே இயங்காது. இறைவன் திருவருளும் அவ்வித மிருப்பின்தான் தொழில்படும்.

இறைவன் திருவுள்ளம் வேறுவிதமாக இருப்பின் கர்மாவின் சக்தி தொழில்படாமல் இறைவனின் திருவுள்ளமே நிறைவேறும். குயவன் சக்கரச் சுழலை நிறுத்துவதுபோல; வினைச் சூழலில் சிக்கிய நாம் கர்மாவின் சக்தியைப் பற்றி அஞ்சாமல் சரணாகதி செய்தால் கர்ம பலன்களும் தொலையும்.

இதுவே ஸ்ரீவைணவத்தின் சிறந்த கொள்கை!

சகல பாவங்களிலிருந்தும் விடுதலை (பெற) சரணாகதியே நமக்குத் தஞ்சம்;

கர்மா >< சரணாகதி இரணியன் >< பிரகலாதன் இக்கருத்தையே திரு மந்திரமாகிய ''ஓம் நமோ நாராயணாய'' உபதேசிக்கின்றது!

இதனால் தான் ஸ்ரீ ஆண்டாள்

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கைத்
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனைத்
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது
வாயினால் பாடி மனத்தினாற்சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்,
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்''

என்று அருளி உபதேசிக்கிறாள்.

விஷ்ணு சித்தரான பெரியாழ்வாரும்

''மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணா மறுபிறவி தவிரக்
கர்மாவத்தைத் திருத்தி, உன் கோயில் கடை புகப்பெய்
திருமாலிருஞ் சோலைஎந்தாய்!

என்று அருள்கிறார்.

திருமழிசைப்பிரான் அருள்வது:

''அத்தனாகி அன்னையாகி! ஆளும் எம்பிரானுமாய்
ஒத்துஒவ்வாத பல்பிறப்பு (கருமங்களை) ஒழித்து!
நம்மை ஆட்கொள்வான்;
முத்தனார்! முகுந்தனார்! புகுந்து தம்முள் மேவினார்!
(அதனால்)
எத்தினால் இடர்க்கடல் கடத்தி ஏழை நெஞ்சமே!''

திருமங்கை மன்னனின் தெளிவுரை:

''குலம் தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுயர்
ஆயின எல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும்பு அருளும் அருளோடு
பெருநிலம் அளிக்கும்
வலந்தரும், மற்றும் தந்திடும், பெற்ற தாயினும்
ஆயின செய்யும்
நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்''
(பெரி-திரு-1-1-9)

ஆதலால்:

துஞ்சும்போது அழைமின் துயர்வரில் நினைமின்
துயர் இலீர் சொல்லினும் நன்றாம்
நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு
நாராயணா என்னும் நாமம்

இத்தகையவான ஆழ்வார்களின் அருளிச் செயல்களை எல்லாம் உள்ளடக்கிக் கம்பநாட்டாழ்வார் பிரகலாதாழ் வானின் திருவாக்கிலே அமைத்து இரணியனை நோக்கிப் பேசுகிறார் :

எல்லாத் தீமைகளையும், திருமாலின் பலத்தையும் அகற்றி அவன் திருமந்திரமான நாமம் அருளும் நன்மை களை நம்மால் கூற முடியுமா?

**''காமமும், வெகுளியும், முதல கண்ணியம்**
**தீமையும், வன்மையும் தீர்க்கும் செய்கையான்**
**நாமமும் அவன் பிற நலி கொடா நெடும்**
**சேமமும், பிறர்களாற் செப்பற் பாலவோ''**

திருமந்திரத்தில் :

1. ஓம் 2. நமோ 3. நாராயணாய, என்னும் மூன்று பதங்கள் அடங்கியுள்ளன்'

**ஓம் :** என்னும் பிரணவத்தினால் சேஷத்துவமும்; அ தா வ து, பரமாத்துமாவிற்கு சீதையைப்போல் ஜீவாத்துமா அடிமைப்பட்டு தாசநிலையில் இருப்பதையும்,

**நம :** என்பதால் பாரதந்திரியத்தையும் அதாவது அவனிட்ட வழக்காகப் பரதாழ்வானைப் போல் செயலற்று இருக்கும் நிலையையும்,

**நாராயணாய :** என்னும் பதத்தில் உள்ள ஆய என்னும் வேற்றுமையால், இலட்சுமணனுடைய கைங்கரியம் (குற்றேவல்—தொண்டு), என்றநிலையும் ஆகிய மூன்றும் சொல்லப்படுகின்றன.

இதனால், இறைவனே தலைவன் என்பதும், ஆத்மா அவனுக்கு அடிமை என்பதும், ஆத்மா அவனிட்ட வழக்காக இருத்தல் (பாரதந்திரியமான) கடமை என்பதும், அப்படி யானநிலையில் பரமாத்மாவுக்கு ஜீவாத்மா குற்றேவல், தொண்டு, கைங்கரியம் புரிவதே வாழ்க்கையின்

கோள் என்பதையும் திருமந்திரம் வெளியிட்டு வாழ்க்கைக்கு வழிகாட்டியாக விளங்குகிறது. வாழ்க்கையின் வேதாந்தம் இதுவே!

1. எட்டிழையாய், மூன்று சுடராய் இருப்பதொரு மங்கள சூத்திரம் போன்ற திருமந்திரத்தால்,

2. ஈஸ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று ரட்சிக்கும் என்கிறது;

3. ஆக திருமந்திரத்தால் எம்பெருமானுக்கே உரியேனான நான் எனக்கு உரியன் அன்றிக்கே ஒழிய வேணும், சர்வ சேஷியான (தலைவனான) நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேன் என்றாய்த்து.

இந்த வாழ்க்கைத் தத்துவ உபதேசத்தை தன் திருநாமத்தில் அமைத்து இறைவன் வதரிகாச்சிரமத்தில் வெளியிட்டருளி;

நாரதமுனிவருக்கு இதனைத் திரிலோகமும் சஞ்சரித்து உச்சரித்து எல்லோரும் பயனடையச் செய்ய வேண்டுமென நியமிக்க;

அதன்படி நாரதமுனிவரும் பூலோகத்தில் தோன்றிய ஞானபரம்பரையின் தலைவனான பிரகலாதாழ்வானுக்குக் கருவிலேயே உபதேசிக்கவும்;

இந்த வாழ்க்கைத் தத்துவத்தை எதிர்த்த இரணியன் உய்ய வேண்டியே; ஓம், நமோ, நாராயணாய என்று உச்சரித்தார்.

அதாவது சேஷித்துவமும், பாரதந்திரியமும், கைங்கரியமும் ஆன மூன்று இதன் பொருள்: இப்படியாகப் பெரிய திருமந்திர உபதேசம் இல்லையானால், நரசிங்க வைபவத்தை ரசிக்கவே முடியாது. நரசிம்ம அவதார வைபவத்தில் உயிரே பெரிய திருமந்திர உபதேசமாகும்.

தர்க்க ரீதியாகவும் தத்துவத்தின் அடிப்படையிலும் அமைந்த பிரகலாதாழ்வானின் ஞான உபதேசம் அஞ்ஞானி யான இரணியனின் ஒரு செவியில் நுழைந்து, மறு செவி வழியாக வெளியே ஓடிவிட்டது.

"வந்து எதிர்ந்த தாடகை தன் உரத்தைக் கீறி வரு குருதி பொழிதர, இராமபிரான் வன்கணை ஒன்று ஏவியது போல, அஞ்ஞானிகட்கு ஞானிகள் உபதேசித்த ஞானம் போல (அரசனின்) சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல் அல்லொக்கும் நிறத்தினாள் மேல் விடுதலும், வயிரக் குன்றக் கல்லொக்கும் நெஞ்சில்தங்காது அப்புறம் கழன்று கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்றன்றே!"

ஞானக்கண் பெற்றிலாத இரணியனுக்கு, அவன் ஊனக் கண்கொண்டாவது பெருமாளைத் தரிசிக்க உதவலாமே எனத் திருவுள்ளப்பட்ட பிரகலாதாழ்வான் பேசுகிறார்: நாரங்களுக்கெல்லாம் ஆதாரமான நாராயணன்—நாரங் களை எல்லாம் தமக்கு ஆதாரமாகக் கொண்டுள்ள நாராயணன், எங்குமுளன்.

தன் கையை நீட்டிக் காட்டி இந்தக் கையின் முடிவில் உள்ள சாணிலும் உளன்; எதிரில் உள்ள தூணிலும் உளன்; எதுவும் அணுவாகும், அந்த அணுவிலும் உளன்; அதில் உள்ள நன்மை கடவுளுடையதே; 'கடவுள் இல்லை' எனச் சொல்லுகிறாயே?

இது கடவுளே உன்னைச் சொல்ல வைக்கிற வேடிக்கை தான்! உனக்கு ஞானம் அளிக்கிற நிலையில் இந்த நிலை களை நீயும் காணலாம்.

"சாணிலும் உளன் ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட
கோணிலும் உளன், மாமேருக் குன்றிலும் உளன்,
நின்ற

**தூணிலும் உளன், நீ சொன்ன சொல்லினும் உளன்**
**இத்தன்மை**
**காணுதி விரைவின் என்றான் நன்று எனக் கனகன்**
**நக்கான்''**

குட்டிப் பயலின் பேச்சைக் கேட்ட இரணியன் குலுங்கிக் குலுங்கிச் சிரித்து விட்டான்!

எனது மாளிகையில் என் உத்திரவுப்படி அமைந்துள்ள இந்தத் தூணிலுமா அக்கடவுள் ஒளிந்து கொண்டிருக்கிறான்; இதோ அறைகிறேன்! இத்தூணை; வெளி வரட்டுமே அவன் உள்ளே இருந்தால்; அறைந்தான் தூணை இரணியன்.

ஆவேசத்துடனும், அதிர் இடிச் சிரிப்புடனும், அகில நாலாபக்கமும் அகன்று இடம் தரும்படியாகப் பெரிய திருமேனியுடன் சேவை சாதித்து விட்டார் நரசிங்கப் பெருமான்.

**''நசை பிறந்து, இலங்கப் பொங்கி,**
**நன்று நன்று என்னநக்கு,**
**விசை பிறந்து உருமு வீழ்ந்தது**
**என்ன ஓர் தூணின், வென்றி**
**இசை பிறந்து உயர்ந்த கையால்**
**எற்றினான், எற்றலோடும்**
**திசை திறந்து அண்டம் கீறிச் (வான் முகடு)**
**சிரித்தது செங்கட் சீயம்''**

இரணியன் கண்ணுக்குப்பட்டது சிங்கமாக. இரணியன் பிரகலாதனிடம் அபசாரப்பட்டதற்காகக் கோபமும் ஏளனமும் கலந்து சிரித்தது.

தூணிலிருந்து தரிசனம் தந்த நரசிம்மப் பெருமாள் தொழில் படவும் செய்தார். மனித அறிவைவிட ஈஸ்வர அறிவின் பெருமை வெளிப்பட்டது.

இரணியன் பெற்ற வரங்களை மீறாமல்,இரவும் பகலும் கூடும் அந்திப் பொழுதிலே அவனுடைய மாளிகையின் உள்-

வெளிப்பாகங்கள் அல்லாது வாயிற்படி மீதில் வைத்து, ஈரமும் ஈரமல்லாததுமான தன் நகங்களால் பூமியும்ஆகாயமு மல்லாத் தன் மடியிலே இருத்திக் கொண்டு இரணியனைக் கொன்று தீர்த்தார்.

இரணியனைக் கொல்வதுதான் நோக்கமில்லை; தேவர் களுடைய துயரத்தைத்தான் தீர்த்து வைத்தான்,

'ஆயவன் தன்னை, மாயன்
அந்தியில் அவன் பொற்கோயில்
வாயிலின் மணிக் கவான் மேல்
வயிரவாள் உகிரின் வாயின்
மீஎழக் குருதி பொங்க
வெயில் விரி வயிர மார்பு
தீ எழப் பிளந்து நீக்கித்
தேவர் தம் இடுக்கண் தீர்த்தான்'

பெருமாள் நரசிம்ம அவதாரம் எடுத்ததன் நோக்கம் என்ன? மேன்மை என்ன?

இரணிய வதம்தான் நோக்கமா! அப்படியானால் பரம பதத்திலிருந்தே நினைத்த மாத்திரத்திலே இரணியனை வீழ்த்தியிருக்கலாமே! இராவணனுடைய வலிமையை வர்ணிக்கின்றார், கம்பநாட்டாழ்வார்; அத்துடன் இராம பாணம் தொகுத்ததையும் பாடுகிறார் :

''மூக் கோடி வாழ்நாளும் முயன்றுடைய
பெரும் தவமும் முதல்வன் முன்னாள்
எக்கோடி யாராலும் வெலப்படாய்
எனக் கொடுத்த வரமும்! ஏனைத்
திக்கோடு உலகனைத்தும் செருக்கடந்த
புயவலியும் தின்று மார்பில்
புக்கோடிஉயிர் பருகிப் புறம் போயிற்று
இராகவன் தன் புனித வாளி!''

இமயவரும், முனிவர்களும், பாற்கடலில் பெருமாள் சயனித்திருந்த சமயத்தில் இராவணனுடைய அக்கிரமங்களை முறையிட்ட போதே, தனது திருவுள்ளத்தில் ஏற்பட்ட சினத்தினாலேயே இராவணனை வதம் செய்து விட்டதாக மங்களாசாசனம் புரிகின்றாள் ஸ்ரீ ஆண்டாள்.

கனைத்திளங்கற்றெருமை பாசுரத்திலே, சினத்தினால் தென் இலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கு இனியானைப் பாடவும் நீ வாய் திறவாய்!

பெருமாள் இராமவதாரம் எடுத்தது இராவணவதத்திற்காக இல்லை. தண்டகாரண்ய முனிவர்களுடன் கூடிக் குலாவவே.

இரணியனை நரசிங்கப் பெருமாள் வதைத்தது எப்படி? தனது வளைந்த நகங்களினாலே அவனுடைய மார்பைப் பிளந்து மாய்த்தார் என்பது ஆழ்வார்களின் அருளிச் செயல்;

**''அளந்திட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே,**
**வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்க உருவாய்,**
**உளந் தொட்டு இரணியன் ஒண் மார்பு அகலம்**
**பிளந்திட்ட கைகளால் சப்பாணி பேய் முலை**
**உண்டானே சப்பாணி**

(பெரியாழ்வார் திருமொழி-169)

ஸ்ரீ ஆண்டாள் !

**''வான் கொண்டு கிளர்ந்தெழுந்தமாமுகில்காள்**
**வேங்கடத்துத்**
**தேன் கொண்ட மலர் சிதறத் திரண்டேறிப்**
**பொழிவீர்காள்!**
**ஊன் கொண்ட வள் உகிரால் இரணியனை**
**உடலிடந்தான்**
**தான் கொண்ட சரிவளைகள் தருமாகில் சாற்றுமினே!**

(நாச்சியார் திருமொழி—5)

திவ்யப் பிரபந்தத்திலேயே ஒரு முழு பத்துப்பாசுரங்கள் நரசிம்மாழ்வார் மேன்மைக்கே!

அதில் முதல் ஐந்து பாசுரங்களில் இரணியனை வதம் புரிந்த பெருமானுடைய நகங்களுக்கு மங்களாசாசனம், பெரிய திருமொழியில் சிங்க வேள் குன்றம் பாசுரம்; முதல் பத்து ஏழாம் திருமொழி.

**''அங்கண் ஞாலம் அஞ்ச அங்கோர் ஆளரியாய், அவுணன்**
**பொங்க ஆகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதன் இடம்!''**

**''அலைத்தபேழ்வாய் வாள் எயிற்று ஓர் கோளரியாய், அவுணன்**
**கொலைக் கையாளன் நெஞ்சு இடந்த கூர் உகிராளன் இடம்''**

**''ஏய்ந்த பேழ்வாய் வாள் எயிற்று ஓர் கோளரியாய் அவுணன்,**
**வாய்ந்த ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்த அம்மானது இடம்!**
**எவ்வும் வெவ்வேல் பொன்பெயரோன் ஏதலனின் இன்னுயிரை,**
**வவ்வி, ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்த அம்மானது இடம்!''**

**''மென்ற பேழ்வாய் வாள் எயிற்று ஓர், கோளரியாய் அவுணன்**
**பொன்ற ஆகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதன் இடம்!'**

பெருமாள் உண்மையாகவே தனது திரு நகங்களால் இரணியனை வதைத்தார் என்பது ஆராய வேண்டிய விஷயம்.

பெரிய திருவந்தாதியிலே நம்மாழ்வாரது கடைசி பாசுரம்

**''இப்போதும், இன்னும் இனிச்சிறிது நின்றாலும்,**
**எப்போதும் ஈதே சொல் என் நெஞ்சே—எப்போதும்,**
**கை கழலா நேமியான் நம்மேல் வினை கடிவான்**
**மொய் கழலே ஏத்த முயல்!''**

நரசிம்மாவதார சமயத்திலும்கூட திருவாழியாழ்வான் பெருமானுடைய கையை விட்டு நீங்கவில்லை! அவனுடைய திருநகங்களிலே பிரவேசித்திருந்தான்!

கருதும் இடம்பொருது சக்கரமல்லவா! இதைக் கண் கூடாகச் சேவிக்கலாம். சக்கரத்தாழ்வானின் மறுபக்கம் எழுந்தருளி இருப்பவர் நரசிம்மரே. அவருடைய எல்லாத் திருக்கைகளிலும் எழுந்தருளியிருப்பவர் சக்கரத்தாழ் வானே!

எனவே சக்கரத்தாழ்வாரைத் தனது திரு நகங்களிலே பிரவேசிக்கப் பண்ணி இரணியனை வதைத்த பெருமாள், பரம பதத்திலிருந்த படியே சக்கரத்தாழ்வானை ஏவி இரணியனை வதைத்திருக்கலாம்.

அதாவது: நரசிங்கப் பெருமாள், இரணியனை மிகச் சோகமாகக் குரூரமாக வதைத்ததை மிகவும் விரிவாக, வெளிப்படையாக அருளும் பெரியாழ்வார்;

'தன் தந்தையான இரணியனைத்தன் கண் எதிரிலேயே பெருமாள் வதைத்ததைப் பார்த்தும் பிரகலாதன் ஆழ்வானாகையாலே அஞ்ஞானத்தையும், அகம்பாவத்தையும் வதைத்தருளிய பேருபகாரத்திற்காகப் பெருமாள் திருவடியில் தலைவணங்கித் தண்டனிட்டுக் கிடப்பதைக் காட்டுகிறார்; மறைமுகமாக, உவமைமூலமாக, திருவரங்கத்தில் வரப்புகளால் அமைக்கப்பட்ட வயல்களில் விளைந்த பருத்த செந்நெற் கதிர்கள் தாள்களைப் பெருமாளின் பக்கமாகநீட்டித் தலைவணங்கி நின்றன, எனக் காட்டுகிறார் பெரியாழ்வார்! சாதுர்யமான பாசுரம்! பெருமாளை நோக்கியச் செந்நெல் கதிர்கள்; பிரகலாதனைப் போல் வளைந்து வணங்கினவாம்!

### திருவரங்கம் பெரிய கோயிலிலே :

கம்ப நாட்டாழ்வாரின் இராம காதையைச் சிறப்பாக இரணியன் வதைப்படலத்தைத் திருச் செவியேற்று,

திருக்கையை உயர்த்தி, சிரித்த செங்கட்சியமான மேட்டழகிய சிங்கர் எழுந்தருளியுள்ளாரே! பிரகலாதன் வணங்குவதற்கு!

**உரம் பற்றி, இரணியனை உகிர் நுதியால் ஒள்ளிய**
**மார்பு உறைக்க ஊன்றி,**
**சிரம்பற்றி, முடி இடியக் கண் பிதுங்க வாய் அலறத்**
**தெழித்தான் கோயில்**
**உரம்பெற்ற மலர்க்கமலம் உலகளந்த சேவடி போல்**
**உயர்ந்து காட்ட (அதனால் பிரகலாதன்**
**வரம்பு உற்ற கதிர்ச் செந்நெல் தான் சாய்த்துத்**
**தலைவணங்கும் தண்அரங்கமே!**

பிரகலாதன் என்ற பெயரே பிரபந்தத்தில் இல்லை; இங்கும் இல்லை!

அவ்விதமாயின் நரசிம்மப் பெருமாளாகத் திருவவதாரம் செய்த காரணம் என்ன? நோக்கம் என்ன?

திருமால் மச்சாவதாரம் எடுத்தது எதற்காக? நோக்கம் என்ன?

ஒரு சங்கத்தை ஆரம்பிக்கும் முன் அந்த சங்கத்திற்கு விதிமுறைகளை அமைக்கின்றோம்.

உலகத்தைத் தோற்றுவிப்பதற்கு முன், அது நடைபெறுவதற்காக விதிமுறைகளை அளித்தான். அதாவது வேதங்களை உலகுக்கு அளித்தான்.

திருமால் கூர்மாவதாரம் எடுத்ததன் நோக்கம் என்ன?

இந்த வேத விதிமுறைகளின்படி இயங்க உலகச் சிறப்புகளைத் தந்தான்.

இலட்சுமி, சூரியன், சந்திரன், காமதேனு. இந்திரன் செல்வங்கள் இப்படியான உலகசாதனங்கள் எல்லாம் தந்தான்.

அடுத்தபடியாக, வராக அவதாரத்தின் நோக்க மென்ன?

உலகில் தோன்றிய உயிர் வர்க்கங்கள் உய்யும் படியாக வராக சரமசுலோகத்தை அருளினான்.

வராக சரமசுலோகம் யாருக்கு யார் மூலம் அருளப் பட்டது?

பிராட்டி மூலமாக உலகிற்கே, அவளுடைய அம்சமான ஸ்ரீ ஆண்டாளின் திருவாக்கு :

**"பாசி தூர்த்துக்கிடந்த பார்மகட்குப் பண்டு ஒருநாள்**
**மாகடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாம்**
**தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்**
**பேசி இருப்பனகள் பேர்க்கவும் பேராவே!"**

பிராட்டிக்கு அருளிய பெருவார்த்தை வராக சரம சுலோகத்தின் சாரம்—

சரீரம், மனம் முதலியவை பாங்காய் இருக்கும் போது என்னை ஒருவன் சரண் அடைந்தால் பின்பு அவன் மூச்சடங்கி முடியும் அளவான போது அவனை நான் நினைத்திருந்து நற்கதியை நண்ணுவிப்பேன்.

இந்த வராகச் சரம சுலோக ஞானத்தை அருளிய வராக நாயனார் "ஞானப்பிரான்!" எனப் போற்றப்படுகிறார்.

பெருமாள் நரசிங்கப் பெருமாளாக திருவவதரித்ததன் நோக்கம் என்ன? இந்த நோக்கத்தைப் பொது நோக்கம் என்றும், சிறப்பு நோக்கம் என்றும் பிரிக்கலாம்.

பொது நோக்கம் எல்லா அவதாரங்களுக்கும் பொருந்தும். சிறப்பு நோக்கம் அந்தந்த அவதாரத்திற்கே அசாதாரணமானது.

பொய் நின்ற ஞானமும், பொல்லா ஒழுக்கும் அழுக்கு உடம்புமாக நாம் பிறப்பது நமது கருமத்தின் அடிப்படை யிலாகும்,

இமையோர் தலைவன் எந்நின்ற யோனியுமாய்ப் பிறப்பது அவனது கருணையின் அடிப்படையில்தான்.

அவதாரம் என்பது மேலிருந்து—பரமபரதத்திலிருந்து கீழே உலகுக்கு வருவதாகும்.

இது உயர்ந்தவன் தாழ்ச்சியாகும்.

'கூபத்தில் விழுங் குழவியுடன் குதித்து அவ்வாபத்தை நீக்கும் அந்த அன்னை போல்' இறைவனும் நாம் சம்சாரக் கிணற்றில் வீழ்ந்து தவிப்பதைக் கண்டு அவனும் உலகில் பரமபதத்திலிருந்து கீழே இறங்கி அவதாரம் எடுத்து நம்மைக் காப்பாற்றுகிறான்.

நரசிங்க அவதாரத்தின் சிறப்பு நோக்கத்தைக் கவனிப் போம்!

'ஓம் நமோ நாராயணாய' என்னும் பெரிய திருமந்திரத்தை வேதம் வெளியிடத் தவறியதால், பெருமாள் வதரிகாச்சிரமம் அடைந்து வெளியிட்டார்.

கேட்டவனும் நாராயணனாகிய நரன். அவன் வாசல் படி தாண்டவில்லை!

திருத்தாயாரின் கருவிலே சிசுவாக எழுந்தருளியிருந்த போது பிரகலாதாழ்வானுக்கு நாரத பகவானால் பெரிய திருமந்திரமும் திரு அஷ்டாட்சரமுமான ஓம் நமோ நாராயணாய மந்திரம் உபதேசிக்கப்பட்டது.

நாரத பகவான் பெரிய திருமந்திரத்தை ஏன் உபதேசித் தருளினார்!

அவருக்கு இந்த மந்திரம் எப்படிக் கிடைத்தது!

துப்பறியும் நவீனங்களும் தோற்று நிற்கும் இடம் இது!

நாரதரை நாடகமேடையிலும் வெள்ளித்திரையிலும் சித்திரங்களிலும் சேவிக்கிறோம்! சில சமயம் தாடியுடன் விளங்குவார்! சில சமயம் நன்றாக க்ஷவரம் செய்து கொண்

டிருப்பார்! சில சமயம் ஜடாதாரியாக சேவை சாதிப்பார்; சில சமயம் உச்சிக் குடுமியுடன் திகழ்வார்! சில சமயம் துளபமணிமாலை அணிந்திருப்பார்! சில சமயம் ருத்திராஷ தாரியாகக் காணப்படுவார்! சில சமயம் திருமண் காப்புடன் எழுந்தருளுவார்! சில சமயம் பட்டை பட்டையாக விபூதியும் அணிந்திருப்பார்! எப்படியான திருக்கோலத்தில் நாரத பகவான் சேவை சதித்தாலும் நாவினால் நாராயண! நாராயண! என்றே நவிற்றி இன்பம் எய்துவார்!

மறந்தும் புறம் தொழாமாந்தர் என்றால், இவர்தான் இலக்கணம்!

எத்தனை முறை இந்த மத்திரத்தை உச்சரித்துள்ளார்! எங்கு எங்கு எல்லாம் உச்சரித்துள்ளார் என்று கணக்கே கிடையாது! பிரகலாதனான கருவுருவில் வளர்ந்த சிசுவுக்கும் உபதேசித்து விட்டார்! இதுவே ஸ்ரீவைணவத்தின் பாக்கியம்!

எனவே நாரத முனிவர் மூலம் திருஅஷ்டாட்சர மந்திரத்தை மூவுலகும் பரப்பியபோது, பூவுலகில் இதனை 'கருவரையகத்துள் கிடந்து கை தொழுது' கேட்ட பிரகலா தாழ்வான் மூலம் உலகறிந்து உய்ந்தது. அதாவது சேஷத் துவமும், பாரதந்திரியமும், கைங்கரியமும் என மூன்று இதன் பொருள்.

இப்படியாகப் பெரிய திருமந்திர உபதேசம் இல்லை யானால், நரசிங்க வைபவத்தை ரசிக்கவே முடியாது.

நரசிங்க அவதார வைபவத்தின் உயிரே பெரிய திருமந்திர உபதேசம் ஆகும்.

பெருமாள் வதரிகாச்சிரமத்தில் பெரிய திருமந்திர உபதேசத்தைக் கேட்டுய்ந்த 'சிஷ்யனாய் நின்றது சிஷ்யன் இருக்கும் இருப்பு நாட்டாரறியாமையாலே; அத்தை அறிவிக்கைக்காக,'

இத்தகைய சிஷ்யனைத் தேடி உலகில் உபதேசிக்கவே மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம அவதாரங்கள் வரை பொறுத்திருக்க வேண்டியதாயிற்று.

வயலாலி மணவாளப் பெருமானை ஆச்சாரிய ஸ்தானத்தில் கொண்டு தனது வலது திருச்செவியைத் தாழ்த்தி பெரிய திருமந்திர உபதேசம் பெற்ற சிஷ்யனான திருமங்கை மன்னன் சிஷ்யன் இருக்கும் இருப்பை வெளியிடுகிறார்.

"மஞ்சுலாஞ் சோலை வண்டறை மாநீர் மங்கையார் வாள்கலிகன்றி செஞ்சொலால் எடுத்த" பெரிய திருமந்திரமாகிய தெய்வ நன்மாலை இவை கொண்டு சிக்கெனத் தொண்டீர் (சிஷ்யர்களே) துஞ்சும் போது அழைமின் துயர் வரில் நினைமின், துயர் இலீர்சொல்லிலும் நன்றாம்; நஞ்சு தான் கண்டீர் நம்முடைய வினைக்கு "நாராயணா" என்னும் நாமம்.

இந்த சிஷ்யனிருக்கும் இருப்பை எழுத்து தவறாமல் நடந்து, நடத்திக் காட்டியவன் பிரகலாத ஆழ்வான்.

மேலும் இந்த உபதேசம் பெறாத அன்று நான் பிறந்திலேன், பிறந்தபின் மறந்திலேன் என்னா நின்றானிறே பிரகலாத சிடன்!

நரசிம்ம அவதாரப் பொது நோக்கம் பகவானுடைய அவதார லீலைகளுக்கு 'நாரணன் விளையாட்டு' என்று பெயர்.

நரசிம்ம அவதாரமும் நாராயணன் விளையாட்டேயாகும்.

இந்த அவதார விளையாட்டுகளை எப்படி நடத்துகிறான் என்பதைப் பகவானே கீதையில் அருளியது: "பரித்ராணாய ஸாதூநாம்"

இதை சுந்தர காண்டத்திலே இராவணன் சபையிலே அனுமான் திருவாக்காக அமைத்துக் காட்டுகிறார் கம்ப நாட்டாழ்வார்.

**"அறம் தலை நிறுத்தி, வேதம் அருள் சுரந்துஅறைந்த நீதித்**
**திறம் தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தித்**
**தீயோர்**
**இறந்து உகநூறித் தக்கோர் இடம் துடைத்து ஏக ஈண்டுப்**
**பிறந்தனன் தன் பொற்பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்"**

*பெருமாள் அவதரிப்பதால்,*

1. *துஷ்டநிக்ரகம் ஏற்படுகிறது;"தீயோர் இறந்துக நூறி.*
2. *சிஷ்டபரிபாலனம் நடைபெறுகிறது, "தக்கோர் இடர் துடைத்து."*
3. *இவை இரண்டாலும் அடையப்பெறுவது "வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித் திறம் தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தி அறம் தலை நிறுத்தி."*
4. *இதற்காக நாம் செய்ய வேண்டிய கடமை; "விண்டு தன் பொற்பாதம் ஏத்துவம்."*

*அவன் பிறப்பது நம் பிறப்பை அறுப்பதற்கே!*

*நரசிம்மப் பெருமாளின் துஷ்ட நிக்கிரகம் ஆழ்வார்கள் மங்களாசாசனம்.*

**"அந்தியம் போதில் அரிவுருவாகி அரியை அழித்தவனைப்**
**பந்தனை தீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு என்று**
**பாடுதுமே"**
*(திருப்பல்லாண்டு—6)*

**"எங்கும் உளன் கண்ணன் என்ற மகனைக் காய்ந்து,**
**'இங்கு இல்லையால்' என்று இரணியன் தூண்புடைப்ப**
**அங்கு அப்பொழுதே அவன் வியத் தோன்றிய, என்**
**சிங்கப் பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே"**
*(திருவாய் 2-8-9)*

**தூணாய் அதனூடு அரியாய் வந்து தோன்றிப்**
**பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய்**

**சேணார் திருவேங்கடம் மாமலை மேய**
**கோள் நாக அணையாய் குறிக்கொள் எனை நீயே!**

(பெரிய திருமொழி 70—4)

நரசிம்மப் பெருமாளின் சிஷ்ட பரிபாலனம்:

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் பிரகலாதாழ்வான் வைபவம் மிளிரும் ஒரே பாடல்,

பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன் நரசிங்கப் பெருமானுடைய சிறுவனே!

1. பெருமானுடைய பிள்ளையை இரணியன் சீறியதால் பெருமாள் பிறை எயிற்றைக் காட்டினார்.

2. தன் பிள்ளையை வெகுண்டதால் அனல் விழியைக் காட்டினார்.

3. இரணியன் தூண் புடைத்ததால்—பிரகலாதன் அந்தர்யாமித்துவ நிலையில் வழிபட்ட தூணைப் புடைத்ததால் பேழ்வாய் காட்டி வதம் செய்தான்.

**''பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன்**
**வாயில் ஓர் ஆயிரம் நாமம்**
**ஒள்ளிய வாகிப்போத, அங்கு அதனுக்கு,**
**ஒன்றும் ஓர் பொறுப்பிலன் ஆகி,**
**பிள்ளையைச் சீறி வெகுண்டு, தூண்புடைப்பப்**
**பிறை எயிற்று அனல் விழிப்பேழ்வாய்**
**தெள்ளிய சிங்கம் ஆகிய தேவைத்**
**திருவல்லிக் கேணிக் கண்டேனே.''**

பரமாத்துமாவே கதி என்று இருக்கும் பரம ஞானிகள் தங்களுக்குத் துன்பம் வந்தபோதும் துன்பத்தை இழைத்தவர்களுக்கும் பரமாத்துமாவைச் சரணமடையும்படி உபதேசித்துப் பெருமை பெற்ற ஐவர்களில் பிரகலாதாழ்வானையும் சேர்த்து மெச்சுகிறார், ஆசாரிய இருதயத்திலே அழகிய மணவாளப் பெருமான் நாயனார்;

'பரமாத்மாவினுடைய சம்பந்த ஞானம் அற்று அஞ்ஞானிகள் படும் அநர்த்தம் கண்டு ஆற்றாது மிக்க கிருபையுடன் இவர்கள் உபதேசம் செய்தருளினார்கள். இவர்கள் ஆவார்.

1. தாய்க்கும் : சீதாபிராட்டி இராவணனுக்கு உபதேசித்தாள்.

2. மகனுக்கும் : தன் சிறுவன்—பிள்ளை—பிரகலாதாழ்வான் இரணியனுக்கு உபதேசித்தான்.

3. தம்பிக்கும் : விபீஷணாழ்வான் இராவணனுக்கு உபதேசித்தான்.

4. இவர்க்கும் : நம்மாழ்வார் வீடுமின்முற்றவும் முதலாக உலகோருக்கு உபதேசித்தார்.

5. இவர் அடிபணிந்தார்க்குமே : பாமன்னுமாறன் அடி பணிந்து உய்ந்தவர் ஆன இராமானுஜர்'

என உள்ளது.

பிறர் அநர்த்தம் கண்டு பொறாமல் கருணையுடன் அவர்கள் கடைத்தேற உபதேசித்தது.

ஒவ்வொரு அவதாரத்திலும் துஷ்ட நிக்ரகமும் சிஷ்ட பரிபாலனமும் உண்டு.

இறைவனின் இந்த லீலைகள் அந்த அந்த அவதாரத்தைப் பொறுத்தது.

ஆனால் இறைவன் சர்வ யுகங்களுக்கும் பொருந்துவதான ஒரு கிருபையைச் செய்கிறான்.

இதுவே: அறம் தலை நிறுத்தி வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித் திறம் தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்துவது!"

நரசிம்ம அவதாரத்தில் எந்தச் செந்நெறியைச் செலுத்தினான்!

ஓம் நமோ நாராயணாய என்னும் பெரிய திருமந்திரத்தின் சீர்மை: எல்லா வேதங்களின் சுருக்கமாய் அமைந்துள்ளது;

அறிய வேண்டுவனவாகிய எல்லா அர்த்தங்களையும் (அர்த்த பஞ்சக ஞானத்தையும்) தெரிவிப்பதாக உள்ளது. எல்லா மந்திரங்களிலும் மேலானது. தூய்மையான வற்றுள் மிகத் தூய்மையாக உள்ளது.

சகல வேத சாஸ்திரங்களுக்கும் வித்தான இப்பெரிய திருமந்திரத்தைப் பிரகலாதாழ்வான் திருவாக்கினாலே இந்தஉலகம் அறிந்து உய்யும்படிச் செய்த பரம கருணையே நரசிம்மாவதாரத்தில் புரிந்தருளிய செந்நெறி செலுத்தியதாகும்.

நாரத கல்பத்தில் இறைவனால் அருளப்பட்ட இப்பெரிய திருமந்திரம் சிரஞ்சீவியாகத் திகழ்கின்றது.

இரணிய பிரகலாத நரசிம்ம கல்பத்தினால் உலகில் பரவிய இப்பெரிய திருமந்திரம், கலியுகத்திலும் நாடும் நகரமும் நன்கறிய ஓதப்பட்டு வருகிறது.

இதற்கு ஆச்சரியமான ஒரு உதாரணம்: சுமார் ஆயிரத்து இருநூறு ஆண்டுக்கு முன் காலடியில் இருந்து வதரியாச்சிரமத்திற்கு வருகை தந்த சங்கராசாரியர் நாரத குண்டத்தில் மூழ்கி இருந்த வதரிநாராயணப் பெருமாளின் திவ்ய மங்கள விக்ரகத்தை தப்தகுண்டத்தின் எதிரில் திருக்கோயில் அமைத்து எழுந்தருள்வித்து கேரள நாட்டு நம்பூதிரிப் பிராமணர்களைக் கொண்டு பூஜாகைங் கர்யங்களை நியமித்தருளினார்; இராமாநுஜரின் திருமலைக் கார்யம் போல.

இவைகளுக்கு எல்லாம் சிகரம் வைத்தாற்போல் ஒரு கைங்கர்யத்தை ஆரம்பித்து வைத்தார் ஆச்சரியமாக. சர்வ

சதா காலமும் 'நாராயண மந்திரத்தையே' உச்சரிக்க ஆரம்பித்து, தான் நான்கு திசைகளிலும் ஏற்படுத்திய சங்கர மடங்களின் வழிவழியாக வரும் மடாதிபதிகளையும் நாராயண மந்திரத்தை உச்சரித்து உலகுக்கு வழிகாட்டிடும் படி நியமித்தருளினார். இன்றைக்கும் இந்த நான்கு திக்கு களிலும் நிலவும் சங்கராச்சாரியார்களும் ஆதி சங்கரரே அமைத்த காஞ்சி மடாதிபதியும் நடந்தாலும், அமர்ந்திருந் தாலும், பேசினாலும், பேசிமுடித்தாலும், எழுதினாலும். எழுதிமுடித்தாலும் ''நாராயண, நாராயண'' என்றே பெரிய திருமந்திரத்தைப் பிரகடனப்படுத்திக் கொண்டு இருக்க வேண்டும்.

ஸ்ரீவைணவ ஜீயர் சுவாமிகள் ஸ்ரீமுகம் பிரசாதித்தால் தங்கள் பட்டப் பெயரைப் பொறிப்பார்கள். ஆனால் சங்கராசார்யர்கள் 'நாராயண ஸ்மரணை' என்றே கைச் சாத்திடுவார்கள், அவர்கள் அத்வைதிகளாயினும் சரி, சிவ வேடப் பொலிவுடன் இருப்பினும் சரி.

மெய்நாவன் மெய்யடியரான விஷ்ணு சித்தர், நரசிங்க அவதாரம் தரும் நல் உபதேசத்தை—வாழ்க்கை வழி முறையை நிலவுலகத்தோர் கடைப்பிடிக்க வேண்டிய நீதியை பிரபஞ்சத்தின் மூலம் உலகத்தின் மூலம் வெளிப் படும் உண்மையை ஒரே பாசுரத்தில் பிழிந்து தருகிறார்.

'நாதனை நரசிங்கனை நவின்று ஏத்துவார்கள் பிரபஞ்சத்தை எப்படிக் காண்கின்றனர்? பிரபஞ்சத்தில் என்ன கடமைகளைப் புரிய வேணுமென்று அறிகின்றனர்? அக்கடமைகளை எவ்விதம் இயற்றி வாழ்த்தி உலகுக்கு உதாரணமாக விளங்குகின்றனர்.

''நாதனை நரசிங்கனை நவின்று ஏத்துவார்கள் பூதம் ஐந்தொடு'' பிரபஞ்சத்தை. ஐந்து (பஞ்ச) பூதங்களின் சேர்க்கையாலானது எனக் காண்கின்றனர். நாரங்களுக்கு அயனமாக-ஆதாரமாக உள்ளவன் நாராயணன். நாரங்கள் தம்மை ஆதாரமாக வந்தடையும் நாராயணன் பஞ்ச

பூதங்கள் மூலமாகத் தொழில்படும் விந்தையைப் பாடு கிறார் திருமழிசைப்பிரான்:-

பூநிலாய ஐந்துமாய், புனல் கண் நின்ற நான்குமாய் தீநிலாய மூன்றுமாய் சிறந்த கால் இரண்டுமாய் மீநிலாய ஒன்றுமாய் வேறு வேறு தன்மையாய் நீநிலாய வண்ணம் நின்னை யார் நினைக்க வல்லரே.

பூமி, நீர், தீ, காற்று, ஆகாயம்-மண்ணாய், நீர், எரி, கால் மஞ்சு உலாவும் ஆகாசமுமாய் இப்பிரபஞ்சத்தைப் பரமன் ஏன் படைத்தருளினான்?

வேள்வி ஐந்து: மூலப் பொருள்களான இந்த ஐந்து பூதங்களைக் கொண்டு நாம் ஐம்பெருங் கடமைகளை ஆற்றுதற்கே; இந்த ஐந்து கடமைகளைப் பொய்யா மொழி யரான வள்ளுவர் பெருமான் இரத்தினச் சுருக்கமாக அருளுகிறார்:

1. தென் புலத்தார், 2. தெய்வம், 3. விருந்து, 4. ஒக்கல் 5. தான்—என்ற அங்கு ஐம்புலத்து ஆறு ஓம்பல்தலை.

1. தென்புலத்தார்: பரமபதவாசிகளான நமது முன்னோர்கள்.

2. தெய்வம்: பரமபத நாதன்.

3. விருந்து: நம் உபசரிப்பை நாடி வரும் பக்தர்கள்—ஆத்ம பந்துக்கள்.

4. ஒக்கல்: நமது உறவினர்கள்-தேக பந்துக்கள்.

5. தான்: நாமும் நமது குடும்பமும்.

இந்த ஐந்து பிரிவில் அமைந்துள்ளவர்கட்கு நாம் இயற்றும் ஐந்து கடமைகளை அறநெறிப்படிக் காத்தலே நமது பணிகளில் தலை சிறந்தவை.

இந்த பஞ்ச பூதங்கள் தந்த வளத்தைக் கொண்டு ஐம்பெரும் கடமைகளை ஆற்ற நம்மால் எப்படி முடியும்? அதற்காகத்தான் நரசிம்மன் அருளியுள்ளானே! பொறிகள் ஐந்து! பூதம் ஐந்தொடு வேள்வி ஐந்து இயற்றத் தான் நமக்கு அருளப்பட்டவை.

பொறிகள் ஐந்து பூதம் ஐந்தொடு வேள்வி ஐந்து இயற்றத்தான் நமக்கு அருளப்பட்டவை.

பொறிகள் ஐந்து! வாழ்க்கையின் தத்துவம்! குறிக்கோள், ரகசியம் வெகு நன்கு விளக்கப்பட்டுவிட்டது, இப்படியான உயரிய லட்சியங்களுடன் வாழும் பெருமக்கள் எங்கே உறைகின்றனர்.

## திருக்கோட்டியூர் :

அப்பெருமக்கள் எப்படியானவர்கள்! ஏதம் ஒன்றும் இலாத வண்கையினார்கள்; பரமன் தந்த ஐந்து பூதங்களை யும் தமக்கு அளிக்கப்பட்ட ஐந்து புலன்களையும் பகவத் கைங்கர்யத்துக்கே அர்ப்பணித்தவர்கள், ஏதம் இலாத வண்கையினார்.

மேலும் பாகவத கைங்கரியத்திற்கே அர்ப்பணித்தவர் கள் "ஏதம் ஒன்றும் இலாத வண்கையினார்கள்." இப்பெரு மக்கள் வாழும் திருக்கோட்டியூர்த் திவ்யதேசத்தில் எழுந்தருளியிருப்பது யார்? "நாதனை! நரசிங்கனை" இப்பெருமானைப் போற்றி வாழும் பரமபாகவதர்களால் உலகிற்கு ஏற்பட்ட பலன் என்ன? "நாதனை. நரசிங்கனை நவின்று ஏத்துவர்கள் உழக்கிய பாததூளி படுதலால் இவ்வுலகம் பாக்கியம் செய்ததே!"

பூரண சந்திரோதயமாகப் பிரகாசிக்கும் முழுப் பாசுரம்; இதோ :

**பூதம் ஐந்தொடு வேள்வி ஐந்து புலன்கள் ஐந்து பொறிகளால்**
**ஏதமொன்றுமிலாத வண்கை யினார்கள் வாழ்**
**திருக்கோட்டியூர்**

நாதனை நரசிங்கனை நவின்று ஏத்துவார்கள், உழக்கிய பாததூளிபடுதலால் இவ்வுலகம் பாக்கியம் செய்ததே!

எனவே,

1. கம்ப சிம்ம மென்னும் தலைப்பால் கம்பத்தில் இருந்து தோன்றிய நரசிங்கப் பெருமாள் துஷ்ட நிக்ரகம் செய்யும் வகையால் இரணியனை வதை செய்த வைபவத்தையும், 2. கம்ப சிம்மம் என்னும் தலைப்பால் கம்ப நாட்டாழ் வாரின் வாக்கிலிருந்து வெளிப்பட்ட நரசிங்கப் பெருமான் சிஷ்ட பரிபாலனம் புரியும் வகையால் பிரகலாதாழ் வானுக்குச் சேவை சாதித்துக்காத்தருளிய வைபவத்தையும், கம்பசிம்மம் என்னும் தலைப்பில்கூறி இதுவரை இச்சபையில் நின்ற கம்பமாகிய அடியேனுடைய அழுக்கு உடம்பு எச்சில் வாயால், ஸ்ரீ மந் நாராயணன் பதரிகாசிரமத்திலே வெளி யிட்டருளிய பெரிய திருமந்திரத்தை இந்நில வுலகத்திலே பிரகலாதாழ்வானைக் கொண்டு சகல சாஸ்திரங்களுக்கும் வித்தான 'ஓம் நமோ நாராயணாய'' என்னும் திருவெட் டெழுத்தாலான திருமந்திரத்தை நாடும் நகரமும் நன்கறிந்து உலகோர் உய்வதற்காகவே நரசிம்ம அவதாரம் எடுத்ததன் நோக்கம் என்று விண்ணப்பித்து அமைகிறேன்.

# கொற்றவன் யானே

*கொற்றவன் நான்! கொற்றவன் நானே!* **ஓங்கி** *உலகளந்த உத்தமன்! மூவுலகளந்த சேவடி!*

**''அளப்பரும் அலக்கண் எய்தி அருச்சுனன் பணிந்த காலை**
**களத்தினில் கீதை சொன்ன கண்ணன் என் கரிய மாலை**
**உளத்தினில் கொண்டு யானும் உரைக்கும் இப்புன்**
**சொன் மாலை**
**வளத்தினில் வறியதேனும் வாழ்த்துவது உமக்கு வேலை!''**

*திருவல்லிக்கேணி: திருக்கோவலூர்:*

**பாரேறு பெரும்பாரம் தீரப்பண்டு**
**பாரதத்துத் தூது இயங்கிப் பார்த்தன் செல்வத்**
**தேரேறு சாரதியாய் எதிர்ந்தார் சேனைச் செருக்களத்துத்**
**திறல் அழியச் செற்றான் தன்னைப்**
**போரேறொன்று உடையானும் அளகைக் கோனும்**
**புரந்தரனும் நான்முகனும் பொருந்தும் ஊர்போல்**
**சீரேறு மறையாளர் நிறைந்த செல்வத்**
**திருக்கோவலூர் அதனுள் கண்டேன் யானே!''**

*திரிவிக்கிரமனை அல்ல, பார்த்த சாரதியைச் சேவித்துத் திருவல்லிக் கேணிக் கண்டேனே!*

*''திருக்கண்டேன்''—வலக்கையில் பாஞ்சசன்னியாழ் வான் ஞானத்தமிழ் புரிந்த நாட்டிலே அடியேனுடைய ஈனச்சொல்.*

*கொற்றவன் நான்! கொற்றவன் நானே! ஓங்கி உலகு அளந்த உத்தமன்! மூவுலகளந்த சேவடி!*

*கொற்றம் என்னும் சொல் வெற்றியைக் குறிக்கும்!*

**''கற்றன பேசி வசவுணாதே,**
**காலிகள் உள்ள மழை தடுத்து;**

கொற்றக் குடையாக ஏந்தி நின்ற
கோவர்த்தனத்து என்னை உய்த்திடுமின்:

என்பது நாச்சியார் திருமொழியிலே ஸ்ரீ ஆண்டாள் திருவாக்கு.

கொற்றக் குடையாக ! வெற்றிக் குடையாக!

கொற்றவன் : என்னும் சொல் வெற்றியை உடைய வேந்தன், அல்லது: அரசனை, அல்லது இறைவனைக் குறிக்கும்!

''கொற்றவன் தன் திருமுகத்தைக் கொணர்ந்த தூதா!
குறை உடலுக்கோ மறவர் கொம்பைக் கேட்டாய்!''

திவ்யகவி பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் திருவாக்கு திருவரங்கக் கலம்பகத்தில். கொற்றவன் எப்படி இறைவன் ஆகிறான்?

''முறை செய்து காப்பாற்றும் மன்னவன், மக்கட்கு
இறை என்று வைக்கப்படும்?''

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர், நீந்தார்
இறைவன் அடிசேராதார்!''

இறை-இறைவன்; எனவே கொற்றவன் நான் என்றால் அரசன் நான் என்றும் இறைவன் நான் என்றும் பொருள் படும்.

ஒரு திருத்தம் தேவைப்படுவதை விண்ணப்பிக்கின்றேன்!

கொற்றவன் நான் என்பதை விட, கொற்றவன் நானே என்பது பொருந்தும்.

இவ்விதமாகக் கொற்றவன் நானே என்று வீரமுழக்கம் செய்தது யார்?

எவரிடம்?

எங்கு?

எந்த சந்தர்ப்பத்தில்?

எந்த வெற்றியைக் குறிக்க?

அதைத் தோற்றவனும் கொண்டாடும்படி, எப்படி என்பதை விண்ணப்பிக்க நியமனம்.

இது மகா விஷ்ணுவால், மகாபலிச் சக்கரவர்த்தி முன் ஓங்கி உலகளந்த உத்தமனாகத் திருவாய் மலர்ந்தருளிய தாகும்.

''இறை எம்பெருமான் அருள்! என்று, இமையோர்
முறைநின்று மொய்மலர்கள் தூவ—அறைகழல
சேவடியான் செங்கண் நெடியான் குறள் உருவாய்
மாவடியில் மண் கொண்டான் மால்.''

(2ம் திருவந்தாதி)

நாலுகவிப் பெருமாளான திருமங்கை யாழ்வாரின் மூன்று கவிகளால் துதி இந்த மூவுலகளந்த சேவடிக்கு :

''வெந்திறல் வாணன் வேள்வி யிடமெய்தி அங்கோர்
குறளாகி மெய்ம்மை யுணர்
செந்தொழில் வேத நாவின் முனியாகி வையம்
அடிமுன் நீரந்து பெறினும்;
மந்திர மீதுபோகி மதிநின்றிறைஞ்ச
மலரோன் வணங்க வளர்சேர்
அந்தரமேழினோடு செலவுய்த்த பாதம்
அது நம்மை ஆளும் அரே'' (பெரிய திரு. 11-4-5)

''ஒண்மிதியில் புனலுருவி ஒருகால் நிற்ப
ஒருகாலும் காமருசீர் அவுணன் உள்ளத்து
எண்மதியங்கடந்து அண்டமீது போகி
இருவிசும்பினூடுபோய் எழுந்து மேலைத்
தண்மதியும் கதிரவனும் தவிரஓடித்
தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு
மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை
மலர்புரையுந் திருவடியே வணங்கினேனே''

(திருநெடுந்-5)

ஒரு குறளாய் இருநிலம் மூவடி மண்வேண்டி
உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி, ஒன்றும்
தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர்... (பெரிய திரு 3-4-1)

இந்த மூன்று பாசுரங்களிலும் அமைந்துள்ள வைபவத்தைச் சேவிக்கலாம் ஒரு ராமநாமப் பாடலாலே!

திருமால் சித்தாச்சிரமத்தில் நூறு ஊழிக் காலம் தவம் இயற்றினார்;

மாவலி மானிடர்க்கு மண்ணையும் தேவர்களுக்கு உரித்தான விண்ணையும் தன்னதாகக் கொண்டு, மேல் உலகம் இல் எனினும் ஈதலே நன்று என்று ஈட்டிய செல்வங்களைக் கொண்டு யாகம் செய்தான். தானம் செய்தான் முழுமையாக. திருமாலிடம் தேவர்கள் இதைத் தடுக்க வேண்டுமென முறையிடவும், திருமால் வாமனனாகத் திருவவதரித்து மாவலியிடம் சென்று மூன்றுஅடி யாகம் செய்யத் தா! என இரந்து, உடனே திருவிக்கிரமனாக ஓங்கி இரண்டடியால் இரு உலகையும் அளந்து, மூன்றாவது அடிக்கு மாவலியின் தலையில் திருவடியை வைத்துஅவனைப் பாதாளம் செலுத்தினார்.

எப்படி இருக்கிறது கதை!

மகாபலி என்ன தீங்கு செய்தான்!

கிடைத்த அமோகமான இரு உலகச் செல்வத்தையும்; யாகம் செய்யும் முகத்தால், பாத்திரம் அறிந்து பிட்சை தானம் கொடுத்தான். இதற்கு ஒரு கோளா? கூப்பாடா?

அதுவும் இதைத் தேவர்களா செய்தார்கள்! அதுவும் திருமாலிடமா போய் கோள் மூட்டினார்களாம்!

அவன் கருணைக் கடலாயிற்றே! மாவலி மீது புறப் படலாமா வரிந்து கட்டிக் கொண்டு?

கோள் தான் என்னே?

மாவலியின் யாகதானங்களை நிறுத்தும்படிதான்!

இதற்குத் திருமாலும் உடந்தையானானா?

சாண் உருவம் கொண்டு, மூவடி மண் வேண்டிப் பெற்றதும் ஆகாயத்திற்கு மேலே நீண்டு அளக்கலாமா?

நமுசி ஆட்சேபித்தான் அப்போதே! பலிக்கவில்லை.

ரூ. 3க்குக் காசோலை தருகிறோம்! அதை ரூ 30கோடியாக மாற்றிப் பணம் பெற்றால் அது மோசடி தானே!

உத்தமனா இவன்!

தன்னை உயர்த்தப் பிறரைக் கெடுப்பவன் அதமனல்லவா.

தன்னையும் உயர்த்திப் பிறரையும் உயர்த்துபவன் மத்தியனே.

தன்னைத் தாழ்த்திப் பிறரை உயர்த்துகிறவன்தான் உத்தமன்.

அப்படி என்ன இவன் தன்னைத் தாழ்த்தி மாவலியை உயர்த்தி விட்டது!

இந்த உரையை வெளியே நிகழ்த்தியிருப்பின் இக் கேள்விகளும், மேலும் பல கேள்விகளும் எழும்.

இவைகளை ஆராய்வதே நம் கடமை,

ஆராய்ந்து உள்ளம் ஒப்பும் வகையில், மனசாட்சி மகிழும் வகையில், பதில் தருவது, ஸ்ரீவைணவர்களது கடமை.

ஸ்ரீவைணவாழ்வார்களின் கடமை.

''நமது ஸ்ரீவைணவ சமயத்தின் மேன்மையை ஒரு வைபவத்தால் நிலைநாட்ட முடியுமானால், அது இந்த

வைபவம்தான். பகுத்தறிவின் அடிப்படையில் திருமால் நெறியை விளக்குவதும் இந்த விருத்தாந்தமே.

மனசாட்சி ஒப்புக் கொள்ளும் வகையில் மார்தட்டிச் சொல்லக் கூடியக் கதை இது:

தர்க்க ரீதியான ஆராய்ச்சிக்கும், தக்க பதில் அளிப்பது இக்கணமே. மேதாவிலாசமும் விஞ்ஞானமும் மெச்சிப் புகழும் கதை இது. பக்திப் பயிர் செழித்து முக்திநெறி நாட்டச் செய்யும் வைபவமே வாமன—திருவிக்கிரம வைபவம். திருமால் திருநெறிக்கு விசிஷ்டாத்வைத மதம் எனத்திருநாமம் திகழ்கின்றது.

அத்வைதம் இரண்டல்லாத ஒன்று; விசிஷ்ட—விசேடத்துடன் கூடியது—இரண்டல்லாத ஒன்று எது?

ஈசுவரனே — திருமாலே. அவனுக்கு நிகராகவோ மேம்பட்டோ ஒரு பொருளில்லை.

இத்தகைய நிகரற்ற திருமாலுக்கு என்ன விசேஷம்!

அசித் என்னும் உயிரற்றவைகளையும், சித் என்னும் உயிர் உள்ளவைகளையும் உடலாகக் கொண்டு இயங்குகின்றான். இதையே சரீர சரீரி பாவம் என்று ஆழ்வார்களும் நம் ஆசார்யர்களும் அருளியுள்ளார்கள். அசித் சித் ஈசுவரன் என்று முப்பிரிவாக இருப்பினும் அசித்தை உடலாகக் கொண்டு சித்—ஆத்மா இயங்குகிறது. அசித் சித்தை உடலாகக் கொண்டு பரமாத்மா இயங்குகிறான்.

இதையே நம்மாழ்வாரும்,

''திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவதுமாய் அவை அவை தொறும்
உடன்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே''

இந்த உயரிய உயிரான ரத்தினக் கருத்தைக் கொண்டே எம்பெருமானாரும் வியாசரின் ப்ரஹ்ம சூத்திர வாக்கியங் களை விளக்கினார்.

சரி, இந்த அசித், சித், ஈஸ்வரன் என்னும் தத்துவத் திரய ஞானம் இந்த வாமன திருவிக்கிரம வைபவத்திலே எப்படி வெளிப்படுகிறது என்பதைக் காணலாம்!

அடியேன் ஏதோ கயிறு திரிப்பது அல்ல,

கல்வியிற் பெரியவர் ஒருவர்தான் தமிழ்த் தாய்க்கு!

அவரே கம்பர், இவர் வெறும் ஏட்டுக் கல்வியில் பெரிய வரல்ல. பக்திக் கடலின் ஆழம் கண்டவர் ஸ்ரீவைணவ ஞானத்தின் சிறந்த விளக்கு இவர்!

எனவே இவரை ஸ்ரீவைணவர்கள் கம்ப நாட்டு ஆழ்வார் எனப் போற்றுகின்றோம்.

இதோ இவருடைய திருவாக்கின் மூலம் வாமன திருவிக்கிரம வைபவம்;

கம்பருக்கே உரிய பெருமை ஒன்று உண்டு. இவர் பாடல்களுக்குத்தான் கம்ப சூத்திரம் என்ற புகழ்.

இவருடைய பாடல்களில் மேலெழுந்தவாரியாக ஒரு பொருள் வரும்; ஆழ்ந்து ஆழ்ந்து படித்தால் இப்பாடல் களில், ஆழ்ந்து பதிக்கப் பெற்ற முத்துக்கள், மாணிக்கங் கள் அறிவுக் கருவூலங்கள் வெளியாகும்.

கம்பராமாயணத்தில் இந்த வேள்விப்படலத்தில்தான் கம்ப சூத்திரங்கள் அதிகம்.

வாமன அவதாரமே ஒரு சூத்திரம்தானே.

கம்பருடைய திருவாக்கு :

சித்தாச்சிரமத்தில் திருமால் :

''ஈர் ஐம்பான் ஊழிக் காலம் இருந் தவம் இயற்றிட்டான்''

நூறு ஊழிக்காலம் திருமால் யாரைக் குறித்துத் தவம் செய்ய வேணும்! எதை விரும்பித்தவம் இயற்ற வேணும். இதற்கு யாரால் பதில் அளிக்க முடியும்;

கம்பரின் திருவாக்கு :

அவன் செய் மாயப்பெரும் பிணக்கு ஒருங்கத் தேர்வார் யார்?

அந்த அமல மூர்த்தி கருதியது அறிதல்தேற்றாம்.

அவன் தத்துவத்தின் நோக்கம் என்ன? அருச்சுனன் மூலமாகப் பிறர்க்கு கீதையை உலகுக்கு அளித்த கண்ணனைப் போல் தத்துவத்திரய ஞானத்தை விசிஷ்டாத் வைதத்தின் விழுப் பொருளை மாவலி மூலமாக உலகுக்கு அருள, மாவலியின் அவதாரத்திற்காக எதிர்நோக்கித் தவமியற்றினான் திருமால் நூறு ஊழிக்காலம்.

உலகுக்கு உண்மை ஞானம் அருள இவனுக்கு என்ன வந்தது!

"காருணிகனான சர்வேஸ்வரன் அறிவிலா மனிசர் உணர்வு எனும் சுடர் விளக்கு ஏற்றிப் பிறங்கிருள் நீங்கி, மேலிருந்த நந்தா விளக்கைக் கொண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கினில் கொழுத்தின பிரதிபமான கலைகளை நீர்மையினால் அருள் செய்தான்."

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்த ஆசாரிய இருதயம் விளக்கம்.

இது தானே இவனுக்கு வேலை. மாவலி அவதரித்துச் செய்து காட்டிய அதிசயம் என்ன?

சர்வ உலகினையும் தன் ஒரு பல்லின் முனையில் தாங்கி ரட்சித்த வராக நயினாரைப் போல மாவலியும், மண்ணுலகையும், விண்ணுலகத்தையும், தன் உயர்த்த

சீலம் காரணமாகத் தன் ஆட்சியில் கொள்ளலானான், திருமால் சித்தாசிரமம்

''ஆனவன் இங்கு உறைகின்ற அந் நாள்வாய்,
ஊனமில் ஞாலம் ஒருங்கும் எயிற்று ஆண்
ஏனம் என்னும் திறன் மாவலி என்பான்
வானமும் வையமும் வவ்வுதல் செய்தான்!''

மண்ணுலகம், விண்ணுலகம் முழுவதும் ஆட்சி செய்த மாவலி ''நானே சர்வமும், எல்லாமும்'' என இரணியனைப் போலக் கொக்கரிக்கவில்லை.

தன் சாம்ராஜ்யத்தையே காமத்திற்காகக் கையாள வில்லையே இராவணனைப் போல! ஒரு நாள் தானே மாயும் அற்ப உயிருக்காக, தினமும் செத்துச் செத்துச் சதி செய்யவில்லையே கம்சனைப் போல.!

கிடைத்த எல்லா செல்வங்களையும் யாகம் செய்யும் வியாஜ்ஜியத்தால் தக்கவரை அழைத்து தானம் வழங்க ஆரம்பித்தான்!

ஈத்து உவக்கும் இன்பம் எய்தினான்; செய்தொழில் வேற்றுமையால் சிறந்தான்.

''செய்தவன் வானவரும் செயல் ஆற்றா
கெய்தவழ் வேள்வியை முற்றிடத் தின்றான்
ஐயமில் சிந்தையன் அந்தணர் தம்பால்
வையமும் யாவும் வழங்க வலித்தான்!''
(தீர்மானித்தான்)

பார்த்தனரே தேவர்!

பற்றி எரிந்தது அவர்கள் வயிறு.

இப்படியும் ஒரு ஆத்மா உண்டா? சிந்தை தெளியாத சித் உண்டா? ''ஈஸ்வரன் ஒருவன் உண்டு; அவனுடையதே எல்லா உலகமும்; சித்தும், அசித்தும்: என அறியவில்லையே மாவலி; எல்லாம் தன்னுடையது என்று அறியாமையில்

மூழ்கித் தானம் செய்கிறதாவது! இவனுக்கு அறிவுச் சுடர் கொளுத்தவேணுமென்று துடித்தனர் ''ஆயது அறிந்தவர் வானவர் அந்நாள்!''

இதை யாரிடம் சொல்லித் தீர்க்க;

மாயங்களை இயற்ற வல்ல மாவலியிடம் சென்று பிச்சை கேட்டார்: மாயனை வந்து வணங்கி இரந்தார்! என்ன தான் செய்யவேணுமாம்! யாகத்தீ வளர்க்கும் மாவலியின், எம் மனதுள், மன வேதனையைத் தரும் வெப்பச் செயலை முடித்துத் தீர்க்க வேண்டு மென்றனர். ''தீயவன் வெம் தொழில் தீர்'' என நின்றார்.

இதை யார் ஏற்க முடியும், அசித், சித் தத்துவங் களுக்குக் கடமையாளன் தான் தன் சொத்துக்களை மீட்கும் முறையில் இந்த வேண்டுகோளை நிறைவேற்றி வைக்க விரும்பினான்.

**நாயகனும் அது செய்ய நயந்தான்!**
**ஆயது அறிந்தனர் வானவர்! அந்நாள்**
**மாயனை வந்து வணங்கி இரந்தார்!**
**தீயவன் வெம் தொழில் தீர் என நின்றார்!**
**நாயகனும் அது செய்ய நயந்தான்**
**'அது செய்ய நயந்தான்' — எது?**

மாவலியின் அறியாமையை அகற்றி தத்துவத்திரய ஞானத்தை ஞாலத்திற்கு அளிக்க விரும்பினான் மாவலி திருமாலைக் குறித்து யாகம் செய்தால் அவிர்ப்பாகம் வாங்க பஞ்சாயுதப் பொலிவுடனும் பிராட்டிமாருடனும் மகாவிஷ்ணுவாக எழுந்தருளுவான். மாவலி தான் அமோகமாக எல்லாம் படைத்து விட்டதாகவும், அவை யெல்லாம் தனதே என்றும், இவை தவிர வேறு சக்தி இல்லை என்றுமல்லவா யாகம் புரிகிறான். எனவே யாகம் செய்பவனிடம் யாசகம் பெற, தானும் ஒரு யாகம் இயற்று வதாகவும் அதற்கு வேண்டிய உதவிக்குத் தானே'' ''அடி'' போட வேணும் அதற்காக மாணிட வடிவு எடுக்கிறான்:

முனிவனின் குமாரனாகி முனிவனானான்; இறந்த, நிகழும் எதிர் காலத்தில் நடப்பதையெல்லாம் அறிந்தவன் காசிய முனிவன்!

இவர் மனைவியோ அறிவின் சிகரம்; வாமன— திருவிக்கிரம அவதாரங்களை எதிர் பார்த்துள்ளனர்!

இவர்களுடைய கீர்த்தி வாய்ந்த மகனாகப் பிறக்கிறான் திருமால்; ரொம்பவும் குட்டைதான் உருவில்! எப்படியா?

பிரம்மாண்டமான ஆலமரம் அதன் வித்தில் அடங்கியது போல!

''காலம் கனிந்து உணர்பவனுக்கும்
வால் அதிதிக்கும், ஓர் மாமகவாகி
நீலநிறத்து நெடுந் தகை வந்து ஓர்
ஆல்அமர் வித்தின் அருங்குறள் ஆனான்

ஆல்அமர் வித்து என்றார் கல்வியிற் பெரியவர், நீல நிறத்து நெடுந்தகை என்றார் கம்ப நாட்டு ஆழ்வார்!

போட்ட வெடியோ? போட்டா போட்டி வேஷமே! மார்பிலே பூணூல்: அரையிலே (தர்ப்பை) முஞ்சிப்புல் நாண்! நாவிலே வேதம்; கையிலே யாகச் சட்டி.

பேஷ் பேஷ், அற்புதம் :

இவன் திருக்கோலத்தை யார்தான் அறிய முடியும்? ஞானிகளே அறிய வல்ல ஞானியாகப் பேரறிவுப் பிழம்பாக சேவை சாதித்தான்!

'முப்புரிநூலினன் முஞ்சியன் விஞ்சை
கற்பதோர் நாவன்! அனல்படுகையன்
அற்புதன்! அற்புதரே அறியும் தன்
சிற்பதம் ஒப்பதோர் மெய் கொடு சென்றான்.''

மாவலி ராட்சத வேலையிலில்லையே!

எனவே வில்லாவது, அம்பாவது, சக்ரமாவது, கதை யாவது, அவனை வெல்ல:

சேவித்து விட்டான் இத் திருக்கோலத்தை மாவலி. ஆநந்தப் பரவசமானான்; தானம் செய்ய இவனை விட சத்பாத்திரம் கிடைக்குமா?

தானம் வழங்க என்னைவிட அதிகப்பேறு பெற்றவர் உண்டோ?

துடிக்கிறான் மாவலி தானம் செய்து தன் நினவு தீர.

மாவலி,வாமனனின் உருவுகண்டு எள்ளாத பெருந்தகை

**"அன்று அவன் வந்தது அறிந்து, உலகெல்லாம்**
**வென்றவன் முந்தி விரைந்தெதிர் கொண்டான்;**
**நின்தனில் அந்தணர் இல்லை; நிறைந்தோர்!**
**என்தனில் உயர்ந்தவர் யார்இனி! என்றான்**

துள்ளிக் குதிக்கின்ற மாவலியைத் தூக்கி வைக்கிறான் வாமனன்! 'கேட்பவர்களுக்கு அவர்கள் கேட்கிறதை விட அதிகமாகவே கொடுத்துக் கொடுத்து நீண்டு விட்டதே உன் கை மாவலி! யாசகம் என்று வந்தால் உன்னிடம் வருபவர் களுக்குத் தான் யோகம்! சிறப்பு; வேறு கதவைத்தட்டினால் வெறுங்கை தான், அற்பம்; அற்பம்;

**'ஆண்தகை, அவ்வகை கூற அறிந்தோன்**
**வேண்டினர் வேட்கையின் மேற்படி வீசி**
**நீண்ட கையாய்! என நின்னுழை வந்தோர்**
**மாண்டவர்; அல்லவர் மாண்பிலர் என்றான்;"**

வாமனப் பெருமகனாரே! கேளுங்கள்; கேளுங்கள்! உங்களுக்கு வேண்டியதை எல்லாம்.

குள்ளன்; கள்ளன் ஆகிறான்.

"என்னவோ! மூன்றடியே தேவை எல்லா உலகையும் வென்று வலிமை படைத்தவனே நீ! உன்னிடம் இருந்தால் கொடு;" குத்திவிட்டான் மாவலியின் தற் பெருமையை;

கொடுத்தேன்'' என்றான் மாவலி. அதற்குள், ''தடுத்தேன்'' என்றார் சுக்கிராசாரியான அவன் குரு.

**''சிந்தை உவந்து, எதிர் என் செய'' என்றான்**
**அந்தணன், மூவடி மண் அருள் உண்டேல்**
**வெந்திறலாய் இது வேண்டும்'' எனா முன்**
**தந்தனன் என்றான்; வெள்ளி தடுத்தான்''**

குருவின் கடமை, உண்மையை அறிந்து சீடனைத் தடுப்பது. அட்சர லட்சம் பெறும் இப்பாடலில் மூன்று குரல்களைக் கேட்கிறோம்.

1. ஈஸ்வரனான வாமனனின் குரல்!

2. பக்குவம் அடையவிருக்கும் சித்தான மாவலியின் குரல்:

3. அசித்தான உலகைப்பற்றிக் கொண்டு தடுக்கும், சுக்ராசாரியாரின் குரல்.

இது ஒரு முக்கூடல் பாடல். தத்துவத்திரய ஞானம் பீரிடும் முப்பாத்திரங்களைக் காட்டும் மின்னல் வேகத்தில், நிகழ்ச்சியைக் காட்டும் ஆச்சரியமான கம்பசூத்திரப்பாடல் கல்வியிற் பெரிய சிறந்த கம்ப நாடரும் பக்தி ஞானம் நிரம்பிய கம்பநாட்டாழ்வாரும் கலந்து பேசும் ஒலிச் சித்திரம்.

ஈஸ்வரனான வாமனன்; எல்லாவற்றிற்கும் தான் நாயகனாகையாலே அதிகாரத்துடன் கேட்கிறான். ''இது வேண்டும்'' மாவலி! உன்னிடம் நான் கேட்பது எல்லாம் (இல்லை) என்று தொனிக்க மூவடிமண் அருள் உண்டேல்' என்று கோடிட்டு நகைக்கிறான்.

சித்தாகிய மாவலி பேச்சு :

கேட்பதை எல்லாம் தர முடியும் என்ற அஞ்ஞானனான சித் சொல்வது: எதிர் என்செய? என்றான்! யாசகம் கேட்டவன் வாயை மூடும்முன்: (எனா முன்), தந்தனன் என்றான்.

வாமனன் பேசிய பாஷையின் பொருள் வேறு. தத்துவத்திரய ஞானம் பெறாத சுக்கிராசாரியாரின் சீடனுக்கு அந்த உள் அர்த்தம் விளங்கவில்லை. 'ஏதோ குள்ளன் மூன்று அடி நிலம் கேட்கிறான்' என்று எண்ணி விட்டான்.

பொருளும், பூமியும், புதல்வரும் பூங்குழலாரும் பெரிதென எண்ணிய அசுரகுரு, மாவலி மண்ணையும் இழப்பதுடன் தன் எதிரியான பிரகஸ்பதியின் ஆட்சி நிலவும் விண்ணின் மீது ஆதிக்கத்தையும் இழப்பானே என்று தடுத் தான். வெள்ளி தடுத்தான்!

எதைத் தடுத்தான் வெள்ளி? மாவலி வாமனனின் ஆசியையும் தத்துவத்திரய ஞானம் பெறுவதையும் தான் தடுத்தான்

ஏன் அப்படித் தடுத்தான்? அவன் ஞானசூன்யன், எனவே, தடுத்தான்!

மாவலிக்கும் தன்னைச் சாட ஒரு வாய்ப்புக் கொடுத்தான்!

ஏன் தடுத்தார் சுக்ராச்சாரியார்?

அவர் தன்னுடைய ஞானக்கண் கொண்டு வாமனனைக் கண்டு விட்டார்.

வந்துள்ள வாமனன் சாதாரணக் குள்ளன் அல்லவே; திருமாலே; அவன் மூவுலகங்களையும் உண்டு உமிழ்ந்த வனாயிற்றே; உண்ட போதும் மூவுலகங்களும் அவன் தொண்டைத் துவாரம் மூலம்சாண் வயிற்றைச் சென்றடைந் தனவே!

உமிழ்ந்த போதும் அப்படியே!

வயிற்றுக்குள்ளும், தொண்டை வழியாகவும் மூவுலகங் களையும் அடக்கியவன், இப்போது அவற்றை அளந்து

கொள்ள வந்துள்ளான். இது வெகு சுலபமாயிற்றே அவனுக்கு. ஆகையால் நாம் காணுவது வஞ்சனை தான்; எனவே வஞ்சகன் வலையில் விழாதே.

'கண்ட திறத்து இது கைதவம், ஐய!
கொண்டல் நிறக் குறள் என்பது கொள்ளேல்!
அண்டமும் முற்றும், அகண்டமும் மேனாள்
உண்டவன், நீயிது உணர்ந்து கொள் என்றான்'

வாமனனுடைய திருக்கண் கடாட்சம் பெற்ற மாவலி ஞானோதயம் பெறுகிறான். மாவலி, சுக்கிரனுக்குத் தரும் சூடு! "வாமனனைத் திருமால் என்றே கொள்வோம். அப்போது நான் அடையும் பேற்றை பாக்கியத்தைச் சிறிது கூட எண்ணவில்லையே நீ; திருமாலுடைய கொடுக்கும் கை, அந்த இயல்பை விட்டு அது எனது கைக்குக் கீழே தாழ்ந்து, கொள்ளும் கை ஆகி விட்டதே; இந்த அசாதாரணப் பெருமையை நான் இழந்து விடவா."

"நினைக்கிலை" என்கை நிமிர்ந்திட வந்து
தனக்கு இயலா வகை தாழ்வது, தாழ்வில்
கனக்கரியானது கைத்தலம் என்னில்
எனக்கு இதன் மேல் நலம் யாது கொல் என்றான்."

மாவலி ஆத்திரம் தாங்காமல் தொடர்ந்து உயர்கிறான் வாதத்தில்! இறந்தவர்களில் எல்லோரையும் இறந்தவராகக் கருதக் கூடாது! கையேந்திப் பிச்சைக்கேட்டுக் கொண்டே இறந்தவர்களே செத்தவர்கள்.

ஆனால் ஏற்கும் கையை ஏற்றுத் தெரிந்து தந்தே இறந்து விட்டாலும் சரி, வாழ்ந்தவர்கள் தான் மக்கள் மனதில் உயர்ந்தவர்களாக மதிக்கப்பட்டு வாழ்கின்றார்கள்.

"மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள் மாயாது
ஏந்திய கை கொடு இரந்தவர் எந்தாய்

**வீந்தவர் என்பவர் வீந்தவரேனும்;**
**ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே!''**

பிரம்மசாரி யாசகம் கேட்டார். சக்ரவர்த்தி, ''நான் சம்மதித்து விட்டேன்''.என்றார்.

இதை விலக்குகின்றாயே, நீயும் குருவா? நற்குண மில்லாதவனே நீ மாத்திரமல்ல உன் சுற்றமும் சேர்ந்து கெடும்.

எப்படி? உடுக்க உடையும் உண்ண உணவும் கூடக் கிட்டாமல் ஒழிவார்கள்.

இது சீடன் குருவுக்கு அருளும் ஆசி!

வள்ளுவர் ஆமோதித்த சாபம் இது.

''கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம், உடுப்பதூஉம்,
உண்பதூஉம், இன்றிக் கெடும்''

**''எடுத்து ஒருவர்க்கு ஒருவர் ஈவதனின் முன்னம்**
**தடுப்பது நினக் கழகிதோ! தகவில் வெள்ளி!**
**கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்**
**உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றி விடுகின்றாய்!,'**

சுடும் சொல்லால் கண்டித்தான் மாவலி; கடும் செயலால் தண்டிக்கிறார் வாமனன். சுக்கிரன் தன் ஞானக் கண்ணால்,

**''கொண்டல் நிறக் குறள் என்பது கொள்ளேல்**
**அண்டமும் முற்றும் அகண்டமும் மேனாள்**
**உண்ட வனாம்''**

என்று கண்டும் தன் ஊனக்கண்ணைக் கவரும் உலகத்தின் மீதுபாசம் கொண்டு தடுத்தான். அவன் ஊனக் கண்களில் ஒன்றைக் குத்தி அழித்துக் காட்டினார் வாமனர்; காகாசுரனின் ஒருகண்ணைப் பறித்தது போல.

இது மயர்வற மதிநலம் அருளப்பெற்ற மெய்ந்நாவன் பெரியாழ்வார் திருவாக்கு:

**"மிக்க பெரும் புகழ் மாவலி வேள்வியில்
தக்கது இது அன்று என்று தானம் விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய
சக்கரக் கையனே அச்சோ! அச்சோ!
சங்கம் இடத்தானே அச்சோ! அச்சோ!**

(பெரி-ஆழ் 1-8-7)

மாவலியும் மதிக்கவில்லை வெள்ளியை!

'நீ அளந்து கொள் அடி ஒரு மூன்றையும்' எனவும், நெடியனாகப் போகிற வாமனனும் தன் சிறிய கையை நீட்டினான்.

அதாவது சுக்கிரனின் சீடனான மாவலி தன்னுடைய புத்தியால் வாமனன் கேட்பது (அவனுடைய) காலால் மூன்று அடி அளந்து கொள்வான் என எண்ணிச் சம்மதித்தான்.

**"முடிய இம் மொழியெலாம் மொழிந்து, மந்திரி
கொடியன் என்று உரைத்த சொல் ஒன்றும் கொண்டிலன்
அடியொரு மூன்றும் நீ அளந்து கொள்கென
நெடியவன்; குறியகை நீரில் நீட்டினான்!"**

மாவலி கொடுப்பதை உறுதிப் படுத்துவதற்காகக் கமண்டல நீரை வாமனன் கையில் விட்டதே தாமதம், "கொடுத்தானே மாவலி!" என்ற மகிழ்ச்சியில் வாமனனும் ஆகாயமளவும் உயர்ந்து ஓங்கினான். பாத்திரமறிந்து இட்ட பிச்சை இதுவே.

"உதவி வரைத்தன்று உதவி, உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து" (குறள்)

பொய்யாமொழியாரின் சான்றிதழ்.

"கயம் தரு நறும்புனல் கையில் தீண்டலும்
பயந்தவர்களும் இகழ் குறளன், பார்த்து எதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கி
உயர்ந்தவர்க்கு உதவிய உதவி ஒப்பவே"

இது வரை நடந்த கதை வாமனக் கதையே.

இனி நிகழவிருப்பதே ஆச்சரியமான திருவிக்கிரமக் கதை; கதையல்ல கருத்து விரிவு; கருத்துவிரிவு மட்டு மல்ல விசிஷ்டாத்வைத விளக்கம்; தத்துவத்திரய ஞானம் அருளும் நாயகனின் வைபவம்!

அசித், சித், ஈஸ்வரன் என்ற மூன்றும் சேர்ந்ததே உலகம். அசித் என்னும் அசைதல் இலாத பஞ்ச பூதங்களும், இதன் சேர்க்கையாலானவைகளுமே அசித்.

சித் உயிருள்ள ஜீவராசிகள். ஈஸ்வரன் இவைகளை ரட்சிக்கிறான். வாமனன் கேட்டது, "மூன்று அடி மண்" என நினைத்தான் மாவலி; ஆனால் தன் திருவடியால் அளந்து கொள்ளக் கூடிய தன் திருவடிகளின் ஆட்சிக்குட் பட்ட மூன்று வேண்டுமென்பதுவே வாமனனின் உள் அர்த்தம் இந்த அசித், சித், ஈஸ்வரனே தான் வாமனன்வேணு மென்று கேட்டதும் மாவலியின் கண்களுக்கு—ஞானக் கண் களுக்கு மதிப்பில் திரிவிக்கிரமன் ஆனான். ராஜ கோபுரம் தூரத்திலிருந்தபோது ஒரு குச்சியாகக் காணப்பட்டது. அடி வாரம் சேர்ந்தால் அண்ணாந்து பார்த்தாலும் தலையைச் சுற்றுகிறது.

சேக்கிழாரை அநபாயச் சோழனின் அமைச்சராக்கிய பெருமை மூன்று பெரிய குறள்களுக்கு உண்டு. மூன்று தான் ஒன்றை விட ஒன்று பெரியது என்கிறார் வள்ளுவர். அதாவது ஒன்றைவிட ஒன்று மதிப்பில் பெரியதென்று பொருள். பரிணாமத்தில். உருவில் அல்ல.

நன் மனத்தால் தான், ஞானத்தால் தான்;
"காலத்தினாற் செய்த உதவி சிறிதெனினும்,
ஞாலத்தின் மாணப் பெரிது"

''பயன்தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்
நன்மை கடலிற் பெரிது''

''நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.'' (குறள்)

தன் அஞ்ஞானத்தை உணர்ந்துவிட்டான் மாவலி. வாமனன் மனத்தால் என்ன நினைத்திருந்தான் என்பதை உணர்ந்து கொண்டான் மாவலி. ஒப்புக் கொண்டதை மீறாமல் தன்னிடமிருந்த அசித் பொருள்களை எல்லா பூமியையும் அதன் மீது நிலவும் பஞ்ச பூதப்பொருள்களையும் சமர்ப்பித்து மகிழ்ந்தான். எல்லாம் எனதல்ல, உனதே என்றான்.

ஒரு திருவடியில் அடங்கிற்று அசித். நின்ற கால் மண்ணெலாம் நிரம்பி சிறிது பார் எனா, அப்புறம் சென்று பாவிற்றிலை; பூமியே தன் திருவடிக்குச் சிறிது என்று காட்டும் படி அளந்தான், ஆட்சிக்குக் கொண்டு வந்தான். அசித்தை எல்லாம் சமர்ப்பித்த பின் அண்ட சராசரங்களில் உள்ள சித் அல்லது ஜீவராசிகளை யெல்லாம் ஆத்மவர்க்கங்களை எல்லாம் துறந்து திருமாலின் திருவடியில் சமர்ப்பித்தான். சித், ஜீவாத்மாக்கள் உலகில் வாழ்பவை. இவர்களில் உயர்ந்த சித் அமரர்கள். ஆகவே சித் என்பது சிறப்பாக விண்ணுலகைக் குறிக்கின்றது. தன் ஆட்சியில் இருந்த அத்தகைய விண்ணையும் அளித்தான் மாவலி, ஒரு சேர வேகமாகப் பெருகி.

''ஒன்றி வானகம் எலாம் ஒடுக்கி, உம்பரை
வென்ற கால் மீண்டது வெளிப் பெருமையால்

அசித்தையும், சித்தையும் துறந்து விட்டான் மாவலி. "மூன்றாவதான ஈஸ்வரன் எங்கே?" என்றார்? விக்கிரமர். மாவலியின் துயரம், ஐயோ! இது வரை அசித், சித்துக்கள் தான் உலகம் என்று இருந்தேன். அதையும் எனது என்று எண்ணி விட்டேன். அவைகளை ஒளிக்காமல் தரவும் திரிவிக்கிரமன் தன் தாளால் அளந்து கொண்டான்.

உலகெலாம் உள்ளடி அடிக்கிற்று! "ஒன்றும் தருக! என "விடாக் கண்டனாகத் திரிவிக்கிரமன் வற்புறுத்திய போது, ஈஸ்வரனான மூன்றாம் தத்துவத்தை இன்று வரை நான் உணரவில்லையே என எண்ணினான்.

எதிரில் இருக்கும் ஈஸ்வரனை சேவித்து மகிழ்ந்த மாவலி ஈஸ்வரனுக்குத் தலை தாழ்ந்தான்; திருவடிப் பேறு கிடைத்தது மாவலிக்கு; இதுவே முதல் சரணாகதி!

"என்னிது மாயம் என் அப்பன் அறிந்திலன்
முன்னைய வண்ணமே கொண்டு அளவாய் என
மன்னு நமுசியை வானிற் சுழற்றிய
மின்னு முடியனே அச்சோ! அச்சோ! வேங்கட வாணனே!
அச்சோ! அச்சோ!"

(பெரி-ஆழ் 1-8-8)

இப்படி, அளந்ததை ஆட்சேபித்த மாவலியின் மைந்தன் நமுசியை, தன் பெருமையை உணர வானுலகம் அனுப்பினான். தன் பிதுரார்ஜிதம் உலகில், மாவலி மைந்தனாகையாலே வானுலகம் அனுப்பினான்.

கம்பர் தராத காட்சி இது, மெய்ந் நாவலர் மெய்யடியார் பேச்சு: ஓர் அடி அலகிலா ஏனையது அன்பன் மேயதால்! அன்பில் அன்றி ஆழியானை யாவர் காண வல்லரே! தம் வியப்பில் ஹாஸ்யம் சேர்க்கிறார் கவிச் சக்கரவர்த்தி; திருவிக்கிரமன் துளப மாலை அணிந்த நெடியமால் பக்தர்களை ரட்சிக்க எவ்வளவு எளிமையான வாமனனாக எழுந்தருளுகின்றான். எவ்வளவு சௌலப்யம் எளிமை; சௌசீல்யம்:- உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு கலத்தல்; வாத்சல்யம்-பரிவு; சுவாமித்துவத்தை மறைத்து. பிறகு சுவாமித்துவத்தை நிலை நாட்டினான்.

நிகரில் புகழாய்-வாத்சல்யம்; உலகம் மூன்றுடையாய் சுவாமித்துவம்; என்னை ஆள்வானே! சௌசீல்யம்; திருவேங்கடத்தானே சௌலப்பியம். "இவை

குலாம் துழாய் முடி ஏக நாயகன்— (கொற்றவன் நானே) சிலைகுலாம் தோளினாய் சிறியேன் சாலவே' நமுசியின் வாதத்தை மண்ணைத் துறந்த துறவி ஒப்ப தில்லை வைணவ சார்பற்ற சமண சந்தியாசி இளங்கோ. ஒப்பவில்லை; திருமாலின் செயல் நியாயமே என்கிறார் "மூவுலகும் ஈரடியால் முறை திறம்பா வகை முடியத் தாவிய சேவடி சேப்ப" எனலால்.

நமது மனதில் இது வரை வாமன அளவில் இருந்த இந்த வைபவம் இப்போது திரிவிக்கிரமனாகத் திகழ்கின்றது.

*இது சரியா?*

*ஆழ்வார்களின் அடிப்படையில் அமைந்துள்ளதா? ஏற்கலாமா?*

*அசித், சித், ஈஸ்வர பாகுபாடுகளை ஆழ்வார்களின் அருளிச்செயல்களில் காணலாமா?*

ஓங்கி உலகளந்த உத்தமன் எழுந்தருளியுள்ள திருக் கோவலூரில் கூடிய பொய்கையார், பூதத்தார், பேயாழ் வார் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தைத் துவக்கியதால் தத்துவத்திரய ஞானத்தை அருளிச் செய்து கொண்டுள் ளார். அசித்தை விளக்கும் பொய்கையார், அசித்-பஞ்ச பூதமும் அவைகளால் ஆன எல்லாப் பொருள்களும்.

**''வையம் தகளியா வார்கடலே நெய்யாக'<br>வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய,<br>சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை;<br>இடர் ஆழி நீங்குகவே என்று''**

அசித் : இடராழி தருவது; சுடராழியான் அடி அதை நீக்குவது; பொய்கையார் படுத்துக் கிடந்தார். அசித் படுத்துக் கிடக்கும்;

சித் சொரூபத்தை விளக்குகின்றார் பூதத்தாழ்வார்! சித்துக்கு மனம் உண்டு; இன்புருகு சிந்தை. மனதில் அன்பு

உண்டு; ஆர்வம் உண்டு; ஞானம் உண்டு. ஞானத் தமிழும் பாடும்.

''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா நன்புருகி
ஞானச்சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு,
ஞானத் தமிழ் புரிந்தநான்!''

ஞானம் வந்துவிட்டது மாவலிக்கு; நாரணற்கு அடிப்பணிந்தான்;

பூதத்தார் உட்கார்ந்தார், பொய்கையுடன் சித் எழுந்து உட்காரும். ஈஸ்வர இலக்கணத்தை அருளுகிறார் பே ாழ் வார்; மால்-திருமால்; வெறும் மால் அல்ல, அவனுடை அணி நிறத்தை;

நிறம் செய்யும், துஷ்டநிக்ரகம்; பொன்னாழிக்கை; சிஷ்டபரிபாலனம் புரிசங்கம் கை காப்பாற்றிக் காப் பாற்றியே அவன் வண்ணத்தைக் கடல் பெறுகிறது:

''திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன் செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்!
என் ஆழி வண்ணன்பால் இன்று''

பேயார் நிற்கிறார். நிற்கின்றதெல்லாம் நெடுமால்; ஈஸ்வர விழிப்பும் எழுச்சியும்;

ஸ்ரீவைணவ சமயத்தின் முதலான கொள்கையான தத்துவத்திரய ஞானத்தை அருளியவர்களே முதலாழ் வார்கள், முதன்மையான ஆழ்வார்கள்; காலத்தினால் மட்டு மல்ல, கருத்தினாலும் கூடத்தான்.

முதலாழ்வார்கள் முன்மொழிந்த தத்துவத்திரயத்தை ஏனையவர் வழி மொழிந்தார்களா? இந்த வாமன-திரு விக்கிரம வைபவ அடிப்படையில்?

வேதம் அனைத்துக்கும் வித்தானது கோதை தமிழ் தான். திருப்பாவையின் முதல் மூன்று பாசுரங்களிலும் அசித், சித் ஈஸ்வரத் தத்துவமே விளக்கப்பட்டுள்ளது.

மார்கழித் திங்கள் காலம், மதி, எதிரான சூரியன்—தீ, நீர், தண்ணீர், காற்றும், ஆகாசமும் நிலவும் ஆய்ப்பாடி இவை எல்லாம் அசித்துக்கள்.

பூநிலாய ஐந்து; புனல் கண் நின்ற நான்கு; தீ நிலாய மூன்று; சிறந்த கால் இரண்டு; மீநிலாயது ஒன்று ஆகி வேறு வேறு தன்மையாய் உள்ளதுதான் சீர்மல்கும் ஆய்ப்பாடி!

முதலாம் பாசுரம் மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால் நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர். சீர்மல்கும் ஆய்ப்பாடி; அசித். அன்ன வயல் புதுவை ஆண்டாள், இரண்டாம் பாசுரம், எடுப்பிலேயே சித், ஆத்ம லட்சணம் காட்டுகிறார்.

வையத்து வாழ்வீர்காள்!

சித் இலக்கணம் செய்யும் கிரிசைகள். நெய் உண்ணோம்; பால் உண்ணோம்; நாட்காலே நீராடி மையிட்டு எழுதோம்; மலர் இட்டு நாம் முடியோம்; செய்யாதன செய்யோம்; தீக் குறளையைச் சென்று ஓதோம்; ஐயமும், பிச்சையும் ஆம்தனையும் கைகாட்டி உய்யுமாறு எண்ணி உகந்தேலோர் எம்பாவாய்!

மூன்றாம் பாசுரம் மூவடிகளாலே அசித், சித், ஈஸ்வர விளக்கம் காட்டிய வைபவம் மகுடமாக அமைகிறது!

"ஓங்கி உலகளந்த உத்தமன்"

இவன் பேர் பாடினால் :

தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரிப் பெய்யும்; ஓங்கும் பெருஞ்செந்நெல், பூங்குவளைப் போதில் பொறி வண்டு கண் படுக்கும்; தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலை பற்றி வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள் நீங்காத செல்வம் நிறையும்.

பாதகங்கள் தீர்த்துப் பரமனடி காட்டும். திருப்பாவை மூன்று பத்துக்களால் அமைந்தது. ஒவ்வொரு பத்திலும் இந்த வாமன திரிவிக்கிரம வைபவத்தை மறைபொருளாக அமைத்து அசித், சித் ஈஸ்வர தத்துவத்தை விளக்கியருள் கிறாள். ஆழ்வார்கள் தம் செயலை விஞ்சி நிற்கும் தன்மையளான இப்பிஞ்சாய்ப் பழுத்தவள்.

முதல் பத்திலே மூன்றாம் பாசுரத்தில் ஓங்கி உலகளந்த உத்தமன் என்ற அடியிலே உலகு என்ற சொல்லே உயிரான சொல். இந்த சொல்லை நீக்கிச் சேவித்தால் தெரியும்; உலகு ! அசித்;

11லிருந்து 20 வரை உள்ள இரண்டாம் பத்திலே 17-வது பாசுரத்தில், அம்பரம் ஊடு அறுத்து ஓங்கி உலகு அளந்த உம்பர் கோமானே! என மங்களாசாசனம் புரிகிறாள்!

இந்த பாசுரத்தில் குறிக்கும் உலகு உம்பர் உலகு;உம்பர் வானவர். வானவர் சிறந்த ஆத்மாக்கள்; உயர்ந்த சித் புருஷர்கள். எனவே, அம்பரம் ஊடு அறுத்து உம்பர் உலகு அளந்த 'கோமான்-கொற்றவன்; என்றும் சித் உலகத்தைத் தன் திருவடியின் ஆட்சியில் கொணர்ந்ததைக் காட்டும்.

மூன்றாவது பத்து 21லிருந்து 30 வரை. அதில் 24-வது பாசுரத்திலே ஈஸ்வரனுக்கு மங்களாசாசனம் புரிகிறாள்.

திருவடி தொழுகிறாள் ஏன்? ''அன்று இவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி'' மூவுலகளந்த திருவடிகளை வணங்கி சரணாகதி தத்துவத்தை ஆரம்பித்து வைத்தான் மாவலி. மாவலி மிகவும் நீர்ப் பண்டமாகித் தன் மிகமிகத் தாழ்வை உணர்ந்தான்; இதையே அவனைத் திருமால் தன் திருவடியால் பாதாளத்திற்குச் செலுத்தினான் என்று தத்துவம்: திருமாலின் திருவடிப் பேறு கிடைத்த மாவலி, அமரனானான்; சிரஞ்சீவியானான்.

இந்த முப்பொருள் உண்மையைப் பொய்யா மொழியா ரான திருவள்ளுவரும் தமது தமிழ் மறையில், முப்பாலில்

ஒவ்வொரு பாலிலும் ஒரு தத்துவத்தை வைத்து மறைத்துள்ளார். அறத்துப்பால் உலகம் தத்துவத்திரயமே, அதற்கு முதன்மையானவன் கடவுளே; அந்தக் கடவுள் யார் என்பதை முப்பாலில் காட்டுகிறார்.

"அகர முதல எழுத்தெல்லாம்;" எப்படி? எப்படி? "ஆதிபகவன் முதற்றே உலகு" இங்கு அழுத்தம் பெறுகிற சொல் உலகு—அசித்.

இரண்டாவது பொருட்பால் ;

இங்கே சித்தைக் குறிப்பது மன்னவன்; இந்த மன்னனை மாவலி என்றே கொள்ளலாம். எப்படி இருப்பினும், அடி அளந்தான் தாயது எல்லாம் என்றால், வாமனதிரிவிக்கிரம வைபவமே, சோம்பல் இல்லாமல், அசித் வசப்படாமல் யாகம் இயற்றிய மாவலியும் திருமால் அடியில் அடங்கிய வற்றை எய்தினான்.

**"மடியிலா மன்னவன் எய்தும் அடி அளந்தான்**
**தாயது எல்லாம் ஒருங்கு"**

மூன்றாவதான இன்பத்துப்பாலிலே பேரின்பத்தையும் காட்டி, அந்தப் பேரின்பம் எது என்பதைத் தெளிவாக மறுக்க முடியாமல் காட்டுகிறார் தெய்வப் புலவர் தமது பொது மறையிலே.

அசித்தை அறத்துப்பாலிலும், சித்தை பொருட்பாலிலும், ஈஸ்வரனை இன்பத்துப்பாலிலும் முறை தவறாமல் காட்டுகிறார் வள்ளுவர்.

அசித் உள்ளது சாதாரண இயற்கையால் அமைந்த உலகு. சித் உள்ளது வானுலகு—வானவர்கள்; ஈஸ்வரன் தாமரைக்கண்ணான் உலகு!

**"தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிது கொல்**
**தாமரைக் கண்ணான் உலகு"**

இவனே தாமரைக் கண்ணன்; சந்தேகமே இல்லாத அடைமொழி; உருவ அழகு; குண அழகு.

தேவர்கள் உயர்ந்த ஞானம் படைத்தவர்கள். இவர்களுக்குத் தெரிந்துவிட்டது, மாவலிக்கு ஒரு விஷயம் தெரியவில்லை என்று; அதாவது ஈஸ்வர தத்துவமும் உளது என்று. அதனால் அசித் சித் வகைகள் எல்லாம் ஈஸ்வரனது என்று எண்ணாமல் தன்னுடையது என்று தானம் செய்தான்.

இவனைச் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்ள வேணும் என்று திருமாலிடம் சென்று முறையிட்டனர்.

உயர்வற உயர் நலம் உடையவனே சர்வாதிகாரியும் சர்வ ரட்சகனும் என்று, மயர் வறும் மதி நலத்தை மாவலிக்கு அருளவே அயர்வறும் அமரர்கள் அதிபதியும் தன் துயரறு சுடர் அடிகளால் நடந்து கண்டவர் தம் மனம் மகிழ மாவலி தன் வேள்விக் கனலில் அவன் தன் மனத்தால் தொழுது எழுவதற்காக மிகு சிறு குறளாய் எழுந்தருளிய ரகசியம்.

வஞ்சமுக் குறும்பில் ஒரு குறும்பு செல்வச் செருக்கு; இப்படியான மாவலியின் குறும்பிற்கு குறட் பிரம்மசாரியானான்.

வசிஷ்ட-சண்டாள வித்தியாசம் இல்லாமல் மாவலியை வியாஜமாக்கி 'வாமனன் மண் இது' என்பதை நிலைநாட்டினான்.

வாமன—திரிவிக்கிரம வைபவத்திற்கு, பொய்கையார் மங்களாசாசனம்—8 பாசுரம், பூதத்தார் மங்களாசாசனம் —4 பாசுரம், பேயார் மங்களாசாசனம்—10/22 பொய்கை முநியின் திட சித்தம்.

**"வாய் அவனை அல்லது வாழ்த்தாது கை உலகம்**
**தாயவனை அல்லது தாம் தொழா"**

அவன் உண்மை வைபவத்தைக் காண்பது சுலபமே. அதற்கு வழி.

**"அரியபுலன் ஐந்து அடக்கி, ஆய்மலர் கொண்டு ஆர்வம்**
**புரியப் பரிசினால் புல்லி—பெரியனாய்**

மாற்றாது வீற்றிருந்த மாவலிபால் வண்கைநீர்
ஏற்றானைக் காண்பது எளிது''

சித் சொரூபம் பாடிய பூதவேந்தரின் திகைப்பு, மன நடுக்கம்.

''அடி மூன்றில் இவ்வுலகம் அன்று அளந்தாய் போலும்
அடி மூன்று இரந்து அவனி கொண்டாய்—படி நின்ற,
நீரோத மேனி நெடுமாலே! நின் அடியை
ஆர் ஓதவல்லார் அறிந்து''

சித்தின் மன நடுக்கத்திற்கு, தெய்வக் குரலாக விடையளிக்கின்றார் பேயாழ்வார். பேயாழ்வார் வேண்டுவது,

''வாய் மொழிந்து வாமனனாய் மாவலிபால் மூவடிமண்
நீ அளந்து கொண்ட நெடுமாலே—தாவியநின்
எஞ்சா இணை அடிக்கே ஏழ் பிறப்பும் ஆளாகி
அஞ்சாது இருக்க அருள்''

பரகால பராங்குசர் திருவாக்கு; கொங்கு மலி குழலியர் வேள் மங்கை வேந்தன் மானவேல் பரகாலன், நாயகி அவஸ்தை அடைந்த பாடல்,

''முன்னம் குறள் உருவாய்! மூஅடி மண் கொண்டளந்த
மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன் பயந்தேன்''

பராங்குசரின் திருவிக்கிரமவாமனத் திருவடிகளுக்கு வணக்கமும் வந்தனமும்.

''திரிவிக்கிரமன் செந்தாமரைக்
கண் எம்மான் என் செங்கலிவாய்
உருவில் பொலிந்த வெள்ளைப்
பளிங்கு நிறத்தனன் என்று என்று உள்ளிப்
பரவிப் பணிந்து பல் ஊழி
நின்பாத பங்கயமே
மருவித் தொழும் மனமே தந்தாய்
வல்லை காண் என் வாமனனே''

உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கியவன் கதையில் உள்ள இரண்டு சிறப்புக்கள் சேவிப்போம். ஸ்ரீமந்நாராயண னுடைய பன்னிரு சிறப்புத் திருநாமங்களில் எல்லா அவதா ரங்களும் இடம் பெறவில்லை.

ஆனால் முற்பகுதி வாமன, பிற்பகுதி திரிவிக்கிரம அவதாரங்கள் இரண்டுமே பன்னிருத் திருநாமங்களில் இடம் பெற்று விட்டனவே!

ஸ்ரீமந்நாராயணன், கருணையின் அடியாகப் பிறக் கிறான், அவதரிக்கிறான். இக்கருணை அறக்கருணை என்றும் மறக்கருணை என்றும் இருவகைப்படும். மறக்கருணை எதிர்ப்பவனை ஒழித்துக் கட்டி, அறத்தை நிலை நிறுத்துவதாகும். முன்பு எடுத்த அவதாரங்களில் மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம அவதாரங்களில் எதிரிகளை (கடைசியாகக் குடலையும் கிழித்து) வதம் செய்து அறத்தை நிலை நாட்டினார்.

பின்னடுத்த பரசுராம அவதாரத்தில் செய்த கோடாலிக் கொலைகள் கணக்கில் அடங்கா.

இராம அவதாரத்தில் அம்பு கொண்டு இராவணவதம்; கண்ணன், கம்சன் கர்ணன் கௌரவர்கள் பூண்டழித்தான்.

கல்கி பிரபஞ்சமே நாசம்!

**அறத்திற்கே அன்பு சார்பு என்ப, அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை**

வாமன திருவிக்கிரம அவதாரத்தில் மட்டும் அறக் கருணைதான்; தவவேடம், பிரம்மசாரித் தோற்றம், கையில் அனல்; நாவில் மறை, பூணூல், அரைஞாண், தலைக்கு மேல் குடை. சம்காரம் செய்யவா இவைகள், மாவலியின் மனசை மாற்றி அசித், சித் ஈஸ்வர தத்துவத் திரய ஞானம் அளித்தான். இது ஸ்ரீவைணவத்தின்

நாராயண நடுநாயகமான கொள்கை. வாமன திரிவிக்கிரம அவதாரமும் 4+1+4ல் 5வது, 9ல் 5தே நடு நாயகம். கட்டைவிரல் அவதாரம் தத்துவத்திரய ஞானம் போதித்து நம்மை எல்லாம் திருமாலின் திருவடியில் அடக்கும் வாமன திரிவிக்கிரம அவதாரம் விளக்கும். ஸ்ரீவைணவ சமயத்தைச் சேர்ந்த பெருமையில் நாம் வாழ்வோமாக.

இன்னும் ஒரு நூற்றாண்டு.

# கீதைப் பேருரைகள்

மாயன்! வடமதுரை மைந்தன்! தூயபெருநீர் யமுனைத் துறைவன்! ஆயர்குலத்தினில் தோன்றும் அணிவிளக்கு! தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரன்! பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர்முன் நின்ற கண்ணபிரான்.

எக்காலத்திற்கும் பயன்பட வேண்டுமென்ற திருஉள்ளத்துடன் அக்காலத்தில் கீதையை அருளியதெங்கே?

ஆணவக் கலாசாரம், அழிக்கும் செல்வம், தனித்துத் தானே ஓங்க வேண்டுமென்ற ஏகாதிபத்தியத்தின் உருவமான—சின்னமான கம்சனின் சிறைக் கோட்டத்திலே அவதரித்தார்.

ஆச்சாரிய விநோபாபாவின் அற்புதக் கீதைப் பேருரைகள், அன்னியக் கலாசாரமும், அழிக்கும் செல்வ வெறியும் கலந்த ஆங்கில ஏகாதிபத்தியத்தின் சிறைக் கோட்டத்திலே அவதரித்தது.

கண்ணன், குருக்ஷேத்திர யுத்தகளத்திலே கையும், உழவுகோலும் (சாட்டை), பிடித்த சிறுவாய்க் கயிறும் (லகான்), சேனாதூளி தூசரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கின்ற சாரத்ய வேடத்தை 'மாம்' (என்னை) என்று காட்டிக் கீதையையருளிய போது அவன் திருவடிக் கீழே இருந்து கேட்ட பாக்கியம் அர்ச்சுனனுடையது!

''வினோபா கீதைக்கு உரையாற்றும் போது ''நான் அவர்காலடியில் இருக்கின்றேன்'' என உவந்து போற்றியவர் யார்?

கடவுள் உருவமே உண்மை என்பதைப் புரட்சிகரமாக மாற்றி உண்மையின் உருவமே கடவுள் என்று அறுதியிட்ட காந்தியடிகளே.

சேவாக்கிராம ஆசிரமத்திற்கு அனைவரும் வந்து ஆசி பெறுகின்றனர். ஆனால் ஆச்சாரிய வினோபாபாவே ஆசிரமத்தை ஆசீர்வதிக்க வருகின்றார்' என்று நன்றி கலந்த-வந்தனம் கலந்த-வணக்கம் கலந்த பெருமிதத்துடன் வெளியிட்டார் மகாத்மா காந்தி!

ஆச்சாரிய வினோபாபாவேயை மகாத்மாவின் சீடர் என்று கூறுவது பொருத்தமாகாது. மகாத்மாவின் வழிகாட்டி என்றே கூறலாம்.

ஆச்சாரியபாவேயின் கீதைப் பேருரைகளைச் சீடனாகவே இருந்து அவர்தம் காலடியில் இருந்து கேட்பதாகக் காந்தியடிகள் கூறியதின் காரணத்தை ஆராய்வோம்.

கருத்துச் சிறப்புத் தந்த முக்யமான கீதைவியாக்யானங்களைக் கவனிப்போம்.

மாயப் போர்த் தேர்ப் பாகனாம் கண்ணனின் கீதைக்கு முதலில் வியாக்கியானம் அல்லது விளக்கம், பேருரை அருளியவர் பகவத் பாதர் எனப் போற்றப்படும் ஆதி சங்கரர். உலகில் இறைவனே உண்மை; மற்றெல்லாம் மாயைதான் என்ற அத்துவைதக் கொள்கையை நிலை நாட்டியவர் சங்கர . எனவே, அவர் திருவாக்கிலிருந்து கீதை அத்துவைத நூலாக அவதரித்தது.

உலகம் பரமாத்மா ஜீவாத்மா என்ற இரண்டு தத்துவங்களாலானது என்ற துவைதக் கொள்கையைப் பரப்பிய மாத்துவருடைய திருவாக்கிலிருந்து துவைத நூலாகக் கீதை அவதரித்தது.

ஆயிரம் வருடங்களுக்கு முன்னால் பெரும்பூதூரில் அவதரித்த இராமாநுசர், 1. ஈஸ்வரன் உண்டு, 2. அவனை வணங்கும் சித் அல்லது ஆத்மா உண்டு, 3. சித் உருவத்துடனும், அவ்உருவம் வாழ பஞ்ச பூதங்களால் உருவாக்கியுள்ள உலகமாகிய உயிரற்ற அசித்தும் உண்டு; எனவே சித், அசித், ஈஸ்வரன் என்ற முப்பொருளும் உண்மை என்ற விசிஷ்டாத்துவைத மதத்தை நிலைநாட்டினார். எனவே இராமானுசர் திருவாக்கிலே கீதை, விசிஷ்டாத்துவைத நூலாக அவதரித்தது.

அத்துவைதத்தையும், துவைதத்தையும் தழுவியே, அடிப்படையாகக்கொண்டே விசிஷ்டாத்துவைதம் உள்ளது.

வராக ஜயந்தி, வாமன ஜயந்தி, நரசிம்ம ஜயந்தி என இந்த ஜயந்திகளைத் திருப்பெயர்களுடன் சேர்த்துத்தான் குறிப்பிடவேண்டும்.

ஆனால் ஸ்ரீ ஜயந்தி என்றாலே கிருஷ்ண ஜயந்தியைத்தான் குறிக்கும். கிருஷ்ண ஜயந்தி என்று திருப்பெயருடன் குறிப்பிட வேண்டியதில்லை. கிருஷ்ண ஜயந்தியைத்தான் உயர்வாகக் கொள்வது வழக்கம்!

காரணம்,மாந்தர்க்கு வேண்டிய 'நெறி எல்லாம் எடுத்து உரைத்த நிறை ஞானத்து ஒரு மூர்த்தியான' கீதாசாரியனுடைய ஜயந்தி அல்லவா?

கீதைக்கு ஏற்பட்டுள்ள பாஷ்யங்கள்-வியாக்கியானங்களுள் இராமாநுசர் இயற்றிய பாஷ்யத்தை "ஸ்ரீ பாஷ்யம்" என்ற உகப்பு சாரதா பீடத்திலிருந்து கிடைத்தது. அதாவது அப்படி சரஸ்வதி பாராட்டினாள்.

வியாக்கியானம் அதாவது பாஷ்யம் அருளிய ஸ்ரீ இராமானுசருக்கு ஸ்ரீ பாஷ்யகாரர் என்ற சிறப்பு விருது ஏற்பட்டது!

**ஆரெனக்கு நிகர் சொல்லில் மாயவன் அன்று ஐவர்**
**தெய்வத்**
**தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் தெரியப்**

**பாரினிற் சொன்ன இராமானுசரைப் பணியும் நல்லோர்**
**சீரினிற் சென்று பணிந்தது, என் ஆவியும் சிந்தையுமே”**

எனக் குதூகலிக்கிறார் திருவரங்கத்தமுதனார்.

கண்ணன் விஸ்வரூபம் எடுத்தது போல் கீதையும் அத்துவைத, துவைத, விசிஷ்டாத்துவைத பரமாக விஸ்வரூபம் எடுத்து எல்லோரையும் தழுவி நின்றது!

காலப் போக்கில் பல்வேறு காரணங்களினால், வேதம், ...நிடதம், ஸ்மிருதி, இதிகாசங்களைப்போல் கீதையும், ...ள் மனதிலிருந்து மறைய ஆரம்பித்தது.

... அதாவது மக்கள் வாழ்க்கையில் பின்னிக்கிடக்கவில்லை. ... ...யாட வில்லை கீதையா! வேதாந்தம் பேசுகிற நூல்: '...ட்டு வேதாந்தம், முரட்டு கவைக்கு உதவாத கருத்து: '...திக் களஞ்சியம்; என்றெல்லாம் அபிப்ராயங்கள் ஏற்பட்டு மக்கள் ஒதுங்கிக் கொண்டனர்! இதன் பிடியி லிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டும் என்னும் எண்ணம் ஏற்பட்டது. வடமொழியின் தேய்வோடு சுருக்கத்தோடு கீதையின் சுருக்கமும் இணைந்து விட்டது.

இந்த 20ஆம் நூற்றாண்டிலே கீதைக்கு ஒரு அதிர்ஷ்டம் அடித்தது. இந்த,

**“வையத்து நாட்டில் எல்லாம்**
**தாழ்வுற்று வறுமை மிஞ்சி**
**விடுதலை தவறிக் கெட்டுப்**
**பாழ்பட்டு நின்றதாம் ஓர்**
**பாரத தேசந் தன்னை**
**வாழ்விக்க வந்த காந்தி”**

மகாத்மாவுக்கு, விடுதலைப் போர் தொடுத்த போது, அலையலையாகக் கிளர்ந்து எழுந்த பிரச்னைகட்கு, கேள்வி கட்கு ஞானச் சுடர் காட்டும், நீட்டும் ஓர் சக்தி தேவைப் பட்டது.

"அடிமை வாழ்வு அகன்று இந்நாட்டார்
விடுதலை ஆர்ந்து செல்வம்
குடிமையில் உயர்வு, கல்வி,
ஞானமும் கூடி ஓங்கிப்
படிமிசைத் தலைமை எய்தும்
படிக்கொரு சூழ்ச்சி செய்ய"

தன்னை நடத்திச் செல்ல ஒரு ஞானத் துருவ நட்சத்திரம் தேவைப்பட்டது!

கீதை கிடைத்தது மகாத்மாவிற்கு அந்த சக்தி, ஞான துருவ நட்சத்திரம்! அடியைத் தொடர்ந்து எழும் ஐவர்கட்காய், அன்று பாரதப் போர் முடியப் பரிநெடுந் தேர் விடுங் கோன் அருளிய கீதைப் பெருநூல், இன்று பாரத விடுதலைப் போர் வெற்றியுடன் முடியவும் அருள் வழி காட்டியது காந்தி அடிகளுக்கு!

மகாகவி பாரதியும் இதை மறைமுகமாகக் குறிப்பிடுகிறார்:

"பெருங்கொலை வழியாம்
போர்வழி இகழ்ந்தாய்,
அதனினும் திறன் பெரிது உடைத்தாம்
அருங்கலைவாணர் மெய்த்தொண்டர் தங்கள்
அறவழி என்று நீ அறிந்தாய்"

அருங்கலைவாணர் மெய்த்தொண்டர் தங்கள் அறவழி கீதை வழி.

மகாத்மாவின் நித்திய கூட்டு வழிபாட்டிலே கீதைக்கு நிரந்தர இடம் உண்டு.

ஒரு சமயம் அடிகள் கண்களை மூடிக் கண்ணீர் மல்கத் தலைசாய்த்து இருக்கிறார் பிரார்த்தனையின் போது:

கீதையில் அர்ச்சுனன் பேசுகையில் "அர்ச்சுன உவாச" (வாக்கியம்) என்று வரும். அன்று கீதையைப் பாராயணம்

செய்த அன்பர் 'அர்ச்சுன உவாச" என்றபிறகு 'கிருஷ்ண உவாச' என்று சொல்லிவிட்டார். வழிபாடு சமாதி நிலையை விட்டுக் கண்ணை விழித்து உடனே காந்தியடிகள், 'பகவான் உவாச' பகவானுடைய பேச்சு என்று திருத்தினார்.

பகவானே அருளியதால் கீதைக்கே பகவத் கீதை என்றும் ஸ்ரீமத் பகவத் கீதை என்றும் சிறப்புப் பட்டங்கள் உண்டு!

மற்றவர்களும் கீதைக்கு உரையருளினார்கள். அவை ஞான வெளியிலே மிதந்தன; மண்ணைத் தொடவில்லை; மனிதனைப் பற்றிக் கூறவில்லை.

காந்தியடிகள் கீதையைப் பாரத நாட்டின் விடுதலைப் போருக்கு-அடிமைத்தளையை அகற்றுவதற்காக, பாரத சுதந்திரத்திற்கு விடுதலை வேள்விக்கு மந்திரமாக, வேத மாகக் கொண்டார்.

இந்த அடிப்படையில் ஆச்சாரிய வினோபாபாவே, உலகில் நிலவும் சகல அடிமை நிலைகளையும், மறவழியில் நிகழும் ஆதிக்கங்களையும் அதர்மச் சூழ்நிலைகளையும், அநீதி அமைப்புகளையும், மனச் சான்று மதியாத மடமை களையும் அகற்ற கீதை வழியில், கீதை வாக்கியங்களாலே வியாக்கியானம், விளக்கம், விளக்கப் பேருரை அருளினார். சாந்த வழிபாடாக்கினார்; மகாத்மா எழுப்பிய வந்தே மாதரக் கோஷத்தை ஜய் ஜகத் கோஷமாக்கினார் வினோபாபாவே.

1. ஆதி சங்கரர் திருவாக்கில் அத்துவைத நூலாக அவதரித்த கீதை; 2. மாத்வர் திருவாக்கில் துவைத நூலாக அவதரித்த கீதை; 3. இராமானுசர் திருவாக்கில் விசிஷ் டாத்துவைத நூலாக அவதரிக்கிறது; 4. காந்தியடிகள் திருவாக்கில் கர்ம யோக ஆசையற்றுக் கடமையாற்றும் சாத்திரமாக அவதரித்த கீதை; 5. ஆச்சாரிய வினோபா

பாவின் திருவாக்கிலே சர்வோதய சாத்திரமாக சர்வ ஞானமும் அருளும் உதயமாகும் சாத்திரமாக சர்வ ஆத்மாக்களுக்கும் உய்வு அளிக்கும் உயர் அமிர்தமாகத் திருவவதரித்துள்ளது.

எனவே காந்தியடிகள், ஆச்சாரிய வினோபா கீதைப் பேருரைகளை அருளும் போது அவர் காலடியில் இருந்து செவி ஏற்க விரும்புகின்றார்!

இது உண்மை பேசும் காந்தியின் உத்தம வாக்கியம்.

இவ்விதமாக சர்வோதய அறநெறிக்கு விளைவுருபம் பேருருவம் எடுத்துள்ள ஆச்சாரிய விநோபாபாவேயின் கீதைப் பேருரைகள் பொன்னைப் போல் போற்றத்தக்கவை.

ஸ்ரீமத் பகவத் கீதை அவதரித்து சுமார் 5,000 ஆண்டுகள் ஆகின்றன.

ஸ்ரீ சங்கரர், மாத்துவர், இராமானுசரின் பாஷ்யங்கள் அவதரித்து 1000 ஆண்டுகளுக்கு மேலாகின்றது.

அப்போதெல்லாம் நாம் அவைகளை உணர்ந்து உஜ்ஜீவித்தோமா என்பதை அறுதியிட முடியாது.

ஆச்சாரிய பாவேயின் கீதைப் பேருரைகள் அவதரித்து 50 ஆண்டுகளாகின்றன. நம்மில் சிலர் அப்போது உயிர் வாழ்ந்திருக்கலாம்.

ஆச்சாரிய பாவேயின் கீதைப் பேருரைகளுக்குப் பொன் விழா கொண்டாடப்படும் இப்புனித ஆண்டில் வாழும் புண்ணியமும் பாக்கியமும் பெற்றுள்ளோம்.

திருமால் பள்ளி கொள்வது பாற்கடலாயிருக்கலாம்! ஆனால் ஆச்சாரிய வினோபாபாவேயின் கீதைப் பேருரைகள் என்னும் அவர்தம் திருவாக்குக் கடல், தேன் கடல் தான்! தெள்ளிய தேன் கடல்தான், திகட்டாத தேன் கடல் தான், யாருக்கும் கசக்காத, யாரையும் தூக்கிலைக்காத சர்வோதயத் தேன் கடலே!

இத்தேன்கடலிலிருந்து விரல்விட்டு எண்ணக் கூடிய சில தேன் துளிகளையே இப்போது ரசிக்க முடியும். அடியேனும் விண்ணப்பிக்க சக்தி உடையேன்!

## கீதையும் சர்வோதயமும்

1. சுதர்மம்—இச்சொல் ஆதி முதல் அந்தம் வரை கீதைப் பேருரையில் பளிச்சிடுகிறது; கீதை தோன்றியது சுதர்மத்திற்குத் தடையாகவுள்ள மோகத்தை அகற்றவே.

2. சுதர்ம வியாக்கியானத்திலிருந்து சுதேசி தர்மத்தை எளிதில் புரியலாம். சுதேசி—தேசிய தர்மம்;

3. கர்மயோகம், காரியத்தைச் செய்; ஆனால் பயனிடத்தில் உனக்கு உரிமை இருப்பதாய்க் கொள்ளாதே.

4. கர்மத்துடன் விகர்மம். அதாவது மனம் இணைந்து நிற்றல். கர்மம்+விகர்மம் இணைந்தால் பயன் கருதாமை உண்டாகும்.

5. கர்மம், பக்தி, ஞானம். இவை இணைந்தே இருக்கும், துண்டிக்க முடியாது. இவை இணைந்த நேரத்தில் பிரபஞ்சம் ஆண்டவன் புகழுக்குரிய சாதனமாகும்;

6. தானம்—சமூகத்திற்கு அர்ப்பணிப்பது தானம். (எ-கா) பூமிதானம், சம்பத்துதானம், உழைப்புதானம்.

7. தவம்—உடல்,மன அமைப்பில் தோன்றும் விசாரங்களைக் களைதலே தவம்.

8. யக்ஞமும், தர்மகர்த்தவ்யமும் எல்லாம் அவனின் உடைமை. அவற்றை அனைவரும் பயன்பட உபயோகப் படுத்தவேணும்.

இவை வினோபாபாவின் கீதைப் பேருரையின் சாரம் மட்டுமல்ல; குருக்ஷேத்திரத்தில் கீதாசார்யன் அர்ச்சுனனுக்குச் சொல்வது போல் நமக்குச் சொன்னவை.

இச்சிறு சிறு விஷயங்களை எண்ணத்தில் கொண்டால் அவனடி பெறலாம்!

# வள்ளுவர் வணங்கும் வைணவம்!

திருவள்ளுவர் அருளிய திருக்குறளைப் ''பொதுமறை'' என்றே போற்றுகின்றோம்! உலகில் எல்லா தேசங்களிலும், எங்கும் வாழும் எல்லா மக்களுக்கும் தேவைப்படும் அறிவுரைகளை ஒழுக்க நெறிகளை-வாழ்க்கைக்கு வழி காட்டியாக ஏற்றுக்கொள்ள வேண்டிய குறிக்கோள்களைத் திருக்குறள் அருள்வதால், இதனைப் ''பொதுமறை'' என்று புகழ்கின்றோம்!

உலகில் வாழும் அனைவருக்கும் ஏற்புடையதான அறநெறியை அருளவேண்டியிருந்ததால் யாவரும் ஒப்புக் கொள்ளக் கூடிய முறையில், 'கடவுள் வாழ்த்து' என்னும் முதல் அதிகாரத்தை அமைத்தருளுகிறார் தெய்வப்புலவர்!

''கடவுள் வாழ்த்தி'' லிருந்து இப்பொய்யாமொழியை ஆரம்பித்துள்ளமையால் இப்பொய்யில் புலவர், கடவுளைத் தொழுது வந்தவர் என்பதில் சந்தேகமில்லை: ஆனால் தம் வாழ்க்கையில், உலகில் நிலவிய பலமதங்களில் விவரிக்கப் பட்ட எல்லாக் கடவுள்களையும் வணங்கி வாழ்ந்தாரா என்பது கேள்வி?

மகாத்மா காந்தியடிகள், ''நான் எல்லா மதங்களையும் மதிக்கிறேன்; எனினும் ஒரு உண்மையான இந்துவாகவே வாழ்வேன்'' என்றார். திருவள்ளுவ நாயனாரும், எல்லா மதங்களையும் மதித்தாலும், அவர் நடைமுறையில் பின் பற்றி வாழ்ந்த மதம் எது என்பதே கேள்வி! இக்கேள்விக்குக் குறளே விடை கூறுகின்றது!

ஒரு மனிதனுக்கு நன்கு அமையவேண்டிய நான்கு லட்சியங்கள் 1. அறம், 2. பொருள், 3. இன்பம் 4. வீடு என்றாலும்; திருவள்ளுவர் தமது பொதுமறையில் அறம் 1. பொருள் 2. இன்பம் 3என்ற முப்பிரிவுகளை மட்டும் விவரித்து வீடு 4 என்பதை விட்டது, எல்லா மதத்தினரும் ஒப்புக் கொள்ளக்கூடிய வீட்டைப்பற்றி தனித்தனியாகத் திருக்குறளில் விளக்க வேண்டுமா என்ற காரணத்தினா லாகும்.

வைகுண்டம் சேரும் ஒரு சேதனனுடைய வைபவத்தை திருக்குறளில் வழங்கினால், அது வைணவ நூலாகிவிடும்! ஒவ்வொரு மதத்தின் நம்பிக்கைப்படி அமைந்துள்ள 'வீடு' அல்லது முக்தி என்னும் தத்துவத்தை எல்லாம் ஒரே நூலில் விளக்கவும் இயலாது! இவைகளுள் எந்த மதத்தின் நம்பிக்கைப்படி உள்ள 'வீட்டை' விளக்கினாலும் அந்த ஒரு தனிப்பட்ட மதத்தின் நூலாகி விடுமே! எனவே, ஒருவன் 1. அறம், 2. பொருள், 3 இன்பம் என்று, தான் வகுத்துள்ள கோட்பாடுகளைக் கடைப் பிடித்தால்: அவரவர்களின் மதத்தின்படி அமைந்துள்ள 'வீடு' பெறுவார்கள் என்பது, திருவள்ளுவரின் திரு உள்ளம். வெற்றிலை 1. பாக்கு 2. சுண்ணாம்பு 3 எனும் மூன்றைச் சேர்த்து உண்டால் நான்காவதான சிவப்பு நிறம் தானாகவே வருவது போல, வீட்டின்பமும் கிட்டும்! கிட்டும்!!

திருவள்ளுவ நாயனார், திருக்குறளை இயற்றியருளிய காலத்திலேயே, எழுந்தருளியிருந்த ஐம்பத்து மூன்று புலவர் பெருமக்கள் திருக்குறளை நன்கு ஓதி உணர்ந்த உவகையில் சாற்றிய கவிகளைத் திருவள்ளுவமாலையிலே காணலாம்! திருவள்ளுவருடைய சமகாலத்தவர்களான இப்புலவர் பெருமக்கள், திருக்குறளின் மேன்மையை உணர்த்தும் முறையில்; உபமானங்கள் கூறும் முறையில்; திருவள்ளுவர் திரு உள்ளம் உகக்கும் வகையில் அவர் அனுட்டித்த மதத்தையே குறிப்பிட்டுப் பாடுகின்றார்கள்!

இப்புலவர் பெருமக்களில் எவரும் மருந்துக்குக்கூட இரண்டாவதான வேறு வேறு சமயத்தை எடுத்து, விளக்கம் கூறவில்லையே!

1. திருவள்ளுவமாலை 6வது பாடலிலே பரணரின் எக்களிப்பு! நாம் வாழாத அந்தக் காலத்திலே, திருமாலும் சிறிய வாமனனாகவே வந்து தன் சிறந்த இரு திருவடிகளாலும் வையமெல்லாம் அளந்தான்! அப்படித்தான் நாம் வாழும் இக்காலத்தில் நம் கண்முன்பாகவே திருவள்ளுவரும் சிறப்பாகவே இரண்டு பாவடியால் வையத்துள் உயர்வாக வைத்து எண்ணக் கூடியவைகளை எல்லாம் அளந்துகாட்டி விட்டாரே! என்ன அதிசயம்! என்ன அதிசயம்!''

"மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்,
ஞாலம் முழுதும் நயந்தளந்தான்—வாலறிவன்
வள்ளுவரும் தங்குறள் வெண்பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தார் ஓர்ந்து!''

என்கிறார்.

2. இதிகாச சிரேட்டங்களில் ஒன்றான மகாபாரதத்தைத் தமிழில் பாடிய பெருந்தேவனார் அவர் பாடிய பாரதம் இராமாயணத்துக்கும் மனுவின் (மனுதர்ம) வேதத்திற்கும் மட்டில் சமமான தென்று எண்ணி இறுமாந்திருந்தார். திருவள்ளுவரின் திருக்குறளான உத்தரவேதத்தை ஓதினது தான் தாமதம்! திருக்குறளையும் பாரதம், இராமாயணம், மனுச்சுமிருதி வேதத்துடன் தான் சமமாக வைத்து வணங்கவேண்டுமெனப்பாடி மகிழ்ந்தார். ஏனைய மத நூல்களைக் கூறவில்லையே சமமாக!

''எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாம் செப்பவரும்—முப்பாற்குப்
பாரதஞ் சீராம கதை மனுப்பண்டை மறை
நேர்வன! மற்றில்லை நேர்!

முக்தியளிக்கும் பக்தி நூல்களுள் முப்பாலும் கலந்து விட்டதே! பாரதமும் இராம காதையும் மனுவின் பழமறை

யும் அருளும் அதே முக்தியை, இம்முப்பாலும் அளிக்கும்! என்கிறார்.

பாரதம் பாடியபெருந்தேவனார் காலத்தில் இன்னொரு பெருந்தேவனாரும் வாழ்ந்திருந்தார். அவரைக்கவிசாகரப் பெருந்தேவனார் ''கல்விக்கடல்'' என்றே பாராட்டிக் களித்தார்கள்.

இக் கவிசாகரப் பெருந்தேவனாரும் ஒரு களிப்புக் கடலில் மிதந்து கொண்டிருந்தார்.

1. பூக்களுள் சிறந்தது எது? தாமரைதான்!
2. பொன்னில் சிறந்தது எது? சம்புநதம்!
3. பசுக்களில் சிறந்தது எது? காம தேனுதான்!
4. யானைகளுள் சிறந்தது எது? ஐராவதந்தான்!
5. தேவில் சிறந்தது யார்? திருமால்தான்!

இப்படியெல்லாம் களிப்புக் கடலில் மிதந்திருந்த இக் கவிசாகரப் பெருந்தேவனார், பொய்யா மொழியாம், குறளையும் ஓதினார்! தம்முடைய தீர்மானத்திற்கு ஒரு திருத்தப் பிரேரணையையும் சேர்த்தார்! இவைபோன்றே திருக்குறள்தான் பாக்களுள் சிறந்தது என்று உச்சிமேற் கொண்டார்!

**பூவிற்குத் தாமரையே! பொன்னுக்குச் சம்புநதம்!**
**ஆவிற்கு அருமுனியா; ஆனைக்கு அமர் உம்பல்!**
**தேவில் திருமால் எனச் சிறந்தது! என்பவே**
**பாவிற்கு வள்ளுவர் வெண்பா!**

இங்கு கவனிக்க வேண்டியது, வள்ளுவர் பெருமான் திருமாலைத் தேவில் சிறந்தவராகக் கொண்டு வழிபடா திருப்பின், கவிசாகரப் பெருந்தேவனார், இப்படி ஒரு உவமையைச் சிறப்பித்திருப்பின் வள்ளுவர் பெருமானின் உள்ளம் கன்றியிருக்குமே! அவர் வழிபடாத ஒரு தேவரை,

தேவில் சிறந்தவர் என்று கூறியிருப்பின் அது எவ்வளவு அருவெறுப்பை உண்டாக்கியிருக்கும்! "தேவரீர் வழிபடும் திருமாலைப் போலவே, பாக்களில் தேவரீருடைய திருக்குறள் தான் சிறந்தது" என்று கவிராசர் எவ்வளவு ரகசியத்துடன் காப்பாற்றியருளினார் இச்சாற்றுக் கவியிலே. ஏனைய ஐம்பத்து இரண்டு புலவர் பெருமக்களுக்கும் இதனை எதிர்க்கவோ மறுக்கவோ நாஎழவில்லையே!

"தேவில் சிறந்த திருமால்!" என எக்கினார் கவிசாகரப் பெருந் தேவனார்! "தேவில் சிறந்தவர் திருவள்ளுவரே!" என்று மேலும் எக்குகின்றார் உறையூர் முது கூத்தரெனும் புலவர். திருமாலைப் பாடி அவருடைய பிராட்டியான திருமகளைப் பாடாவிடில் திருவள்ளுவரின் திரு உள்ளம் உகக்காதே என எண்ணிய உறையூர் முதுகூத்தனாரின் கூற்று:-

எனது நாயகரான தேவிற் சிறந்த திருமாலின் பக்தரான கவித் தேவரில் சிறந்தவரான திருவள்ளுவரின் பாவிற் சிறந்த திருக்குறளாம் வெண்பாவை ஓதாதவர்களுக்கும் எனக்கும் எந்தெந்த ஜென்மத்திலும் உறவே கிடையாது! எனச் சபதம் செய்கிறாளாம் திருவாகிய இலட்சுமிப் பிராட்டியார்!

தேவிற் சிறந்த திருவள்ளுவர் குறள் வெண்
பாவிற் சிறந்திடுமூப் பால்பகரார்—நாவிற்கு
உயவில்லை, சொற்சுவை ஓர்வில்லை! மற்றும்
செயலில்லை என்னும் திரு

கவித்தேவில் சிறந்த வள்ளுவரால் வணங்கப்படுபவரான தேவில் சிறந்தவர் வெறும் மால் அல்ல! திருவுடன் கூடிய திருமால் பரம பதத்தில் திருமகளாம் பிராட்டியுடன் எழுந்தருளியிருப்பது போன்றே அவதாரங்கள் செய்தாலும் திருமணம்செய்து கொள்வான். அப்படியான அவதாரங்களில் ஒன்றான கிருஷ்ணாவதாரத்திலே, நப்பின்னைப் பிராட்டியை ஆச்சரியமாக மணந்தான். எதிர் வந்து

பொருத ஏழு எருதுகளையும் வென்று அதிசயம் நிகழ்த்தினான்: ஏறடர்த்த அதிசயம் அன்று வடமதுரையிலே! இன்று தமிழ்நாட்டின் தென் மதுரையிலே பொற்றாமரைக் குளத்தில் எல்லா நூல்களையும் வெறுத்து ஏற்றுக்கொள்ளாமல் துள்ளிக் கொண்டு தைரியமாக மிதந்து கொண்டிருந்த அந்தச் சங்கப் பலகை, இதோ! தெய்வப்புலவரின் தெய்வ நூலை ஏற்றுக் கொண்டு எக்களிப்புடன் சுழன்று சுழன்று வருகிறதே! வடமதுரையில் நிகழ்ந்த அதிசயம்? கண்ணன் ஏழு எருதுகளையும் அடக்கி நப்பின்னையை மணந்தது. தென்மதுரையிலே நடந்த அதிசயம்? திருவள்ளுவர் சங்கப் பலகையைத் தம்முடைய திருக்குறளை ஏற்கச் செய்தது.

**உப்புக்கம் கோக்கி, உபகேசி தோள் மணந்தான்,**
**உத்தர மாமதுரைக்கு அச்சு என்ப—இப்பக்கம்**
**மாதானுவங்கி மறுவிப் புலச்செந்நாப்**
**போதார் புனற்கூடற்கு அச்சு!**

அச்சு—ஆதாரமானவர், மால் திருமால் என்றும், அத்திருமால் அவதாரங்கள் எடுக்கின்றார் என்றும், கிருஷ்ணாவதாரத்தில் நப்பின்னைப் பிராட்டியை மணந்தது, மல்லார் திண்தோள் மணிவண்ணன் என்றும் பாராட்டாத திருவள்ளுவர் முன், இப்படி ஒரு கவியைச் சாற்றி வார்த்திருக்க முடியுமோ நல்கூர் வேள்வியரால்! தமக்கு ஏற்காத கொள்கைகளைத் திணிக்க இத்தகைய சாற்றுக் கவிகளை அளித்திருப்பின் பொய்யில் புலவர் ஏற்றுக் கொண்டிருப்பாரோ?

திருவள்ளுவரையும், அவர் அருளிய திருக்குறளையும் புகழ்ந்து பாராட்டிய புலவர் பெருமக்களின் கண்கொண்டு வள்ளுவர் பெருமானின் இதய ''மலர்மிசை ஏகினான்'' திருமாலே எனக் கண்டோம்.

இனி இதைத் திருக்குறளுக்கு உரை அருளிச் செய்த அறிஞர்கள் துணை கொண்டும் ஆராயலாம்—

திருக்குறளுக்கு உரையிட்டவர்கள் பலர் எனினும்; பரிமேலழகர் உரையை மிக மிகச் சிறந்ததென்று அனைவரும் ஒப்புக் கொள்வர். இதற்குக் காரணம் யாது? பாம்பின்கால் பாம்பறியும்! திருமால் பக்தரான திருவள்ளுவரின் திருக்குறளுக்கு மிகச் சிறந்த உரை அருளிய பரிமேலழகரும் மிகச் சிறந்த திருமால் பக்தரேயாவர். இவர் காஞ்சி மாநகரில் எழுந்தருளியுள்ள உலகளந்த பெருமாள் சந்நிதியின் அர்ச்சகராவார் என்பதில் சிறிதளவும் ஐயப்பாடு இல்லை.

பரிமேலழகர் மிகச் செல்வந்தராகையாலே குதிரையை வாகனமாகக் கொண்டிருந்தார். காஞ்சியை அடுத்த கூரம் என்னும் பகுதியில் வாழ்ந்த மிகச் சிறந்த வைணவரான கூரத்தாழ்வான் போன்று இவரும் செல்வத்தில் தலை சிறந்தவர்.

''ஆனைபரி, தேரின் மேல் அழகர் வந்தார்'' என்று அத்திகிரி அருளாளன் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளார். இதனையே, 1. ஆனைமேல் அழகர், 2. பரிமேல் அழகர், 3. தேரின்மேல் அழகர் எனப் பிரித்து அனுபவிக்கலாம். எனவே திருவள்ளுவரின் நூலுக்கு உரையாற்றிய பரிமேலழகரும் திருமால் பக்தர் என்பது உறுதியாகின்றது.

உலகளந்த வாமன — திருவிக்கிரமப் பெருமாளின் திருவடிவாரத்தில் குற்றேவல் புரிந்தவர் பரிமேலழகர். திருமாலின் வாமன அவதாரத்தையும் பரவும் வகையில் வள்ளுவரும் பாராட்டுகின்றார்.

**மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்**
**தாஅயது எல்லாம் ஒருங்கு!**

திருமாலடியாரான திருவள்ளுவரின் திரு உள்ளப் பாங்கை திருமாலடியாரான பரிமேலழகரே உணர்ந்து நுண்ணிய இடங்களில் தெளிவாக உரை செய்தார் என்பதற்குச் சான்றான பாடல்,

**திருத்தகு சீர் தெய்வத் திருவள்ளுவர் தம்**
**கருத்தமைதி தானே கருதி விரித்துரைத்தான்**

பன்னுதமிழ் சேர் பரிமேலழகனெனும்
மன்னு முயர்காமன் வந்து!

இதனால் வந்த ஏற்றம்!

பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ? பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர் செய் நூலாமோ? நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமேலழகன்
தெரித்தவுரை யாமோ தெளி!

திருவள்ளுவர் அருளிய திருக்குறளை 1. அறம், 2. பொருள், 3. இன்பம் என்னும் முப்பாலால் அமைத்துள்ளார்.

அவரது மனத்தின்கண் மல்கியிருந்த சமயம் ஸ்ரீ வைணவமே என்பதைத் திருக்குறளுக்குச் சிறப்புப்பாயிரம் அளித்த புலவர் பெருமக்களின் பாட்டிலிருந்து முதலாவதாகக் கண்டு; பிறகு இரண்டாவதாகத் திருக்குறளுக்கு உரையாற்றியவர்கள் பதின்மரினும் சிறந்தவரான பரிமேலழகரைப் போன்றே திருமால் பக்தியில் திருவள்ளுவரும் திளைத்தவர் என்பதைக் கண்டோம்.

மூன்றாவதாக, திருவள்ளுவர் திருமால் அடியவரே என்பதை அவர் அருளிய திருக்குறளிலிருந்தே காண்போம்:

எல்லா சமயங்களுக்கும் பொதுவான அறநூலை அருள முற்பட்ட வள்ளுவர் பெருமான், தன் கருத்துக்களை விளக்க உபமானங்களைக் கையாண்ட போதும், அவசியமான உண்மைகளை விவரிக்க நேர்ந்த போதும், ஸ்ரீவைணவ சமயத்தையும், அதன் மேன்மையையும் சுட்டிக் காட்டத் தவறவில்லை. காரணம்; அவர் அருளிய நெறிமுறையேயாகும்:

தன்னெஞ்சு அறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்!

எனவே தன்னெஞ்சு அறிந்த உண்மைகளை ஒளிக்காமல் உரைத்தருள்கின்றார்.

திருவள்ளுவர் அருளிய திருக்குறளில் 1. அறம், 2. பொருள், 3. இன்பம் என்னும் முப்பாலில், ஒவ்வொரு பாலிலும் திருமாலின் உயர்வை மிகத் திறமையாக அருளியுள்ளார்.

கற்கண்டை எப்பாகத்திலிருந்தும் ரசிக்கலாம்; கற்கண்டினும் இனிக்கும் திருக்குறளில், திருமாலின் மேன்மையை அதன் கடைசி மூன்றாவது பாலான இன்பப் பாலிலிருந்தே ஆரம்பித்து அறிந்து மகிழலாம்.

**''புதுமண மறவின் தேறல்கக உண்டிருந்தான் தலைவன்''**

அவன் துய்த்த இன்பம் எப்படியிருந்தது என்று தோழன் கேட்டுவிட்டான்!

தலைவன் ஸ்ரீவைணவன்! பரமபத இன்பம்தான், பரம போக்கியம் என அறிந்தவன்! ''தலைவியிடம் தான் அனுபவித்த இன்பம் எப்படி இருந்தது?''என்று தோழனுக்கு விளக்கம், உபமானம் தரவிரும்பினான் தலைவன்— ''பரமபத இன்பம்தான் பெரிது என்று முன்பு எண்ணியிருந்தேன். நான் விரும்பிய தலைவியிடம் கிடைத்த இன்பத்தை விடவா பரமபத இன்பம் இனிதாக இருக்கும்'' என வியந்தான்; தலைவன் பரமபதத்தை இங்கே ''தாமரைக் கண்ணான் உலகு!'' என்று குறிப்பிடுகிறான்.

திருமண—இல்லற இன்பக் கலவியின் உயர்வை மிகுதிப் படுத்திக் காட்ட வேண்டியதால், தாமரைக் கண்ணன் உலகின்பத்தையும் சமத்காரமாகக் குறைத்துக் காட்டுகிறார்! அவ்வளவே திருவள்ளுவரின் நோக்கம்; உயர்வு நவிற்சி அணி இது.

'தாமரைக் கண்ணன்' என்பதால் அழகிய தாமரை போன்ற கண்ணையுடைய திருமாலையும், 'உலகு' என்பதால் அவன் என்றும் உறையும் பரமபதத்தையும் சுட்டிக் காட்டுகிறார் வள்ளுவர் பெருமான்! தாமரைக் கண்களை உடையவன் என வேறு தெய்வங்களையோ தேவர்களையோ

குறிப்பிடுவது கிடையாது! அரங்கத்தம்மானின் திருக் கண்களை—

**"கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரிய வாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே"**

என்று உள்ளம் கரைகின்றார், திருப்பாணாழ்வார்!

**"தான் கடந்த ஏழுலகே தாமரைக் கண் மாலொருநாள் வான் கடந்தான் செய்த வழக்கு!"**

எனப் பூதத்தாழ்வார் குறிப்பிடுகின்றார் தாம் அருளிய இரண்டாம் திருவந்தாதியிலே!

திருமாலின் சிவந்த திருக்கண்களுக்கு நம்மாழ்வாரின்-மற்ற ஆழ்வார்களின் மங்களாசாசனம்

1. "செந்தாமரைக்கண் திருக்குறளன் (திருவாய் மொழி 8.10.3)
2. "திரிவிக்கிரமன் செந்தாமரைக்கண் எம்மான்!" (ஷ 2. 7.7.)
3. தாமரைக் கண்ணனை, விண்ணோர் பரவும் தலை மகனை! (2. 6.3)
4. கரிய மேனியன், செய்ய தாமரைக்கண்ணன், கண்ணன் விண்ணோர் இறை (3.5.3)
5. காணவந்தென் கண்முகப்பே தாமரைக்கண் பிறழ(4.7.4)
6. அனைத்துலகுமுடைய அரவிந்த லோசனனை! (6.7.10)
7. "என்பைந் தாமரைக் கண்ணனே" (2.6.2)
8. செந்தாமரைக் கண் செங்கனிவாய் (6.10.9)
9. தாமரைக் கண்ணன், என் நெஞ்சினூடே புள்ளைக் கடாகின்ற வாற்றைக்காணீர்! (7.3.1)

ஆ. "பங்கயக் கண்ணனைப் பாடேலோர் எம்பாவாய்!"
(திருப்பாவை-14)

இ. பங்கய மாமலர்க்கண் பரனை எம் பரஞ்சுடரை
(பெரிய திருமொழி 9.9.4)

ஏனைய ஆழ்வார்களும் 'செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலை' மங்களாசாசனம் புரிந்துள்ளதை எல்லாம் வரைந்தால்—விரித்தால் அவை ஏட்டிலடங் காவாம்!

"தாமரைக் கண்ணனே உலகைத் தாவியளந்த திருமால்!" என்பதற்கு மற்ற நூல்கள் கூறும் சான்று:

"பொலம்பூண் ஆடையிற் பொலிந்து
தோன்றிய செங்கண் நெடியோன்!

(இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், மதுரை காடுகாண் 50.5)

"செங்கட்காரி! கருங்கண் வெள்ளை!" பரிபாடல் 3.81)
"செயிர்தீர் செங்கட் செல்வ!" (பரிபாடல் 4. 10)

இங்ஙனமாகத் திருமாலைத் தாமரைக்கண்ணன் என வள்ளுவர் ஐயம் திரிபு அறக் கூறியிருந்தும்; திருமாலிடம் அழுக்காறு கொண்டே சிலர் "தாமரைக் கண்ணன்" என்பது இந்திரனைக் குறிக்கலாமே! என்றனர். இந்திர னுடைய ஆயிரம் கண்களும் ஆபாசக் கண்களன்றோ!

'தாமரைக் கண்ணன்' என்பதை வேறுசிலர், 'தாமரைக் கண்" என்று வெட்டி, தாமரையின் இடத்து வீற்றிருந்த ஒரு தெய்வம் என்றனர்! இதுவும் 'பிள்ளையார் பிடிக்க வேறொன்றான கதையேயாம்! இவை, மெய்ப்பொருள் காக்கத்தவறியவர்களின் காமாலைக் கண் பார்வையே.

திருமாலின் அவதாரங்கள் பத்து என்றாலும், கடைசி பத்தாவதான கல்கி அவதாரம் இன்னும் நிகழவில்லை.

எனவே நிகழ்ந்துள்ள அவதாரங்கள் ஒன்பது தான். அவைகளும் தேவுடைய 1. மீனமாய் 2. ஆமையாய் 3. ஏனமாய் 4. அரியாய் என்னும் மச்ச, கூர்ம, வராக நரசிங்க அவதாரங்களை ஒரு புறம் அமைத்து (6, 7, 8.) மூவுருவில் இராமனாய்க் (9)கண்ணனாய் என(பரசுராமன், ராமன், பலராமன் கண்ணன் என்ற 6, 7, 8, 9 அவதாரங் களை மறுபுறமும் அமைத்தால் 5வது அவதாரமான வாமன திருவிக்கிரம அவதாரமே நடு நாயகமாகத் திகழும்.

1 முதல் 9வரை எண்ணினால் 5ம் எண்தான் நடுநாயகம் 1,2,3,4,(5)6,7,8,9.

இந்த நடுநாயகமான வாமன-திருவிக்கிரம அவதாரத் தையே, திருவள்ளுவர் பெருமானும் தமது நடுநாயகமான- மூன்றில் இரண்டாவதான பொருட்பாலில் அமைத்து மங்களாசாசனம் செய்தருள்கின்றார்! இது அசம்பாவித மாக நேர்ந்ததல்ல! அதிசயமாகவே அமைந்துள்ளதைக் காணலாம்!

''முயற்சி தன் மெய்வருத்தக் கூலி தரும்'' என்று உணர்ந்து உலைவு இன்றித் தாழாது உஞற்றுபவன், எல்லா வற்றையும் எளிதில் அடைவான்!'' என்று ஊக்கமுயன்ற வள்ளுவர் பெருமான்; 'எல்லாப் பொருள்களையும்' என்பதை மிகச் சிறந்த உதாரணமுகத்தால் விளக்கு கின்றார்.

''திருமால் திருவிக்கிரம அவதாரம் எடுத்து, ஓங்கி உலகளந்த உத்தமனாகத் தாவிய சேவடியுடன் சேவை சாதித்தருளிய போது, அவன் தன் திருவடிகளால் ஒன்றை யும் விடாமல் அளந்தானே, அப்படியாக எல்லாப் பொருள் களையும், சோம்பல் (மடி) இல்லாத மன்னவன் அடைவான் என்றார்.

''மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு''

இதனால் பொய்யில் புலவரான, தெய்வத் திருவள்ளுவர் பொய்யா மொழியாம் திருக்குறளில் பரக்கப் பகர்ந் தருள்வது :

1. திருமால்—கடவுள்.

2. கடவுளான திருமால் தாமரைக் கண்ணான் உலகான பரமபதத்திலிருந்து உலகை உய்விக்க அவதாரங் கள் எடுக்கின்றான்.

3. அவைகளுள் ஒன்று வாமன—திருவிக்கிரமம்.

4. திருவிக்கிரமம் என்பதால், முன்

1. மச்ச, 2. கூர்ம, 3. வராக, 4. நரசிம்மமான நான்கு அவதாரங்களில், வாமனத்தை அடுத்த

6. பரசுராமன், 7. பலராமன், 8 ராமன், 9 கண்ணன், 10. கல்கி அவதாரங்களும் உண்மையே என்றும் அருள் கின்றார்.

''விஷ்ணு சகஸ்ரநாமத்தைச் சிவபரமாக உரையிட முயன்ற, அப்பைய தீட்சிதர், நாராயண பதத்தையும் சிவபரமாக்க முயன்று அது கைகூடாமல் 'ணத்வம்' பாதிக் கின்றதே! என மனம் உடைந்தாராம்!

அது போலவே, தாமரைக்கண்ணான் உலகு! என்பதனை திரித்துக் கூறத் துணிந்தவர்களும், அடியளந்தான் தாயது எல்லாம் ஒருங்கு!'' என்ற பதத்தை திருமாலுக்கில்லாமல் வேறு கடவுளுக்கு மாற்ற முடியாதவர்களானார்கள்.

திரிவிக்கிரம அவதாரம் இவ்வுலகில் நிகழ்ந்தது; திருமால் ஒரு திருவடியால் இவ்வுலகை அளந்து, இரண்டாம் திருவடியால் வானவர் உலகத்தை அளந்தார்; இவை இரண்டு உலகங்கள் தவிர தாமரைக்கண்ணான் உலகு என்று மூன்றாவதான ஒன்றும் உளது.

''மூவுலகும் ஈரடியால் முறைதிரம்பா
வகைமுடியாத் தாவிய சேவடி''

என்று இளங்கோவடிகளும், உலகம் மூன்று என்றும், அவை களுள் இவ்வுலகையும் வானோர் உலகையுமான இரண்டு உலகையும் திருமால் அளந்ததைக் குறிப்பிடுகின்றார். இம் மூவுலகையும் வள்ளுவர் பெருமான் திருக்குறளிலே விவர மாகவே குறிப்பிடுவதையும் காணலாம்.

இனிக் கடைசியாக, முதலாவதான, தலையாய அறத்துப்பால் பகுதியைக் காணலாம்.

இந்த அறத்துப்பாலில் உள்ள கடவுள் வாழ்த்தை வைத்தே, திருவள்ளுவர் எல்லா மதங்களையும் கடைப் பிடித்தவர், அந்த மதங்களில் கூறப்பட்ட எல்லாக் கடவுள் களையும் வணங்கியவர் என்று பிரசாரம் நடைபெறுகிறது. இது எப்படி முடியும்? ஸ்ரீவைணவரான திருவள்ளுவர், தன் நெஞ்சு அறிவதை எப்படிப் பொய்ப்பித்து ஒழுகுவார். அறநூலாகவே திருக்குறளை அமைத்தமையால்; பிற மதங் களைப் புண்படுத்தாமலும், வெளிப்படையாக ஸ்ரீவைணவ மதத்தையும், அதன் தலைவனான திருமாலையும் உயர்த்திக் கூற வேண்டிய அவசியமில்லாமல் மிக நாகரீக மாகப் பண்புடன், ஒருபக்கம் சாய்வதாகக் காட்டாமல் கழைக்கூத்து ஆடி வெற்றியும் பெற்றுள்ளார் வள்ளுவர் பெருமான். வள்ளுவருக்குப் பின்தோன்றிய கிருத்துவ, முகமதிய மதங்களும் கடவுள் வாழ்த்தில் தங்கள் கடவுள் களைக் கண்டு மகிழ்கின்றார்கள்.

பரமபதத்தில் தாமரைக்கண்ணனான திருமாலைச் சேவித்த வள்ளுவர், விபவத்தில் அவனைத் திருவிக்கிரம னாக அடியளந்தானாகச் சேவித்த வள்ளுவர், திருமாலின் ஏனைய சில அவதாரங்களையும் தமது திருக்குறளில் பொறித்துள்ளதைக் காணலாம்.

அகலிகை என்றால் இராமாவதாரம் தானே! தழைத்து வண்டு இமிறும் தண்தார் தசரத ராமன் என்பான் கழல் துகள் கதுவ, கல்லுருத் தவிர்ந்தவள் அகலிகை—

அகலிகை வைபவம் :

"ஐந்து அவித்தான் ஆற்றல் அகல் விசும்புளோர் கோமான்,

இந்திரனே சாலும் கரி."

திருமால் கூர்ம அவதாரம் (ஆமை அவதாரம்) எடுத்துத் திருப்பாற் கடலைக் கடைந்து உதவியதால் முதலில் மூத்தவளான மூதேவியும் பிறகு இளையவளான இலக்குமிப் பிராட்டியும் தோன்றினர். இவ்விரு உடன் பிறப்புகளையும் குறளால் குறிப்பிட்டு, கூர்ம அவதாரத்தையும் மங்களா சாசனம் செய்கிறார் வள்ளுவர்.

"அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்"

"மடி உளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாள் உளாள் தாமரையினாள்."

இலட்சுமிப் பிராட்டியை மட்டும் குறிப்பிடும் குறள்களைக் காண்போம்.

"அகன் அமர்ந்து செய்யாள் உறையும் முகன் அமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்"

"அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந்து ஆங்கே திரு"

"இருமனப் பெண்டிரும், கள்ளும், கவறும்
திரு நீக்கப்பட்டார் தொடர்பு."

இவ்விதமாக இலட்சுமி என்னும் பிராட்டியைக் குறிப்பிடும் வள்ளுவப் பெருந்தகை இவளைத் திருமாலினின்றும் வேறுபடுத்திக் கூறியதாக எவரேனும் கூற இயலுமா?

மால் வெறும் மால் அல்ல. திருமாலே திருவான இலட்சுமியுடன் கூடியவனே எனவும் தான் ஏற்றுக் கொள்ளுகின்றார்;

மாலைத் திருமால் என்றும், பரமபதத்தில் தாமரைக் கண்ணனாக உள்ளான் என்றும், நிச்சயமாகக் கூர்மாவ தாரத்திலிருந்து இராமாவதாரம் வரைச் சேவித்த வள்ளுவர் வேறு கடவுளைப்பற்றிக் கூறியுள்ளாரா என்றும், திருமாலை விட ஆதியான வேறு ஒரு கடவுளைக் குறித்துள்ளாரா என்றும் நடுநிலையுடன் ஆராய்ந்தால், திருமாலையே ஆதி பகவன் என்று போற்றுகிறார் வள்ளுவப் பெருந்தகை எனப் பெறபடும்,

திருக்குறளில் 'ஓம்' என்பது போல உள்ள, முதற் குறளைச் சேவிப்போம்:

**''அகர முதல எழுத்தெல்லாம், ஆதி
பகவன் முதற்றே உலகு.''**

பல பூஜ்ஜியங்களை எழுதுகின்றோம். ஒரு பயனும் இல்லை. அந்தப் பூஜ்ஜியங்களுக்கு முதலில் "1" என்ற எண்ணை எழுதியவுடன் அதனை அடுத்துள்ள பூஜ்ஜியங்கள் உயிர் பெறுகின்றன.

அது போலவே எல்லா எழுத்துக்களும் அகரத்தின் உதவியால் உயிர் பெறுகின்றன.

அவ்விதமாகவே உலகில் உள்ள எல்லா உயிர், உயிரற்ற வைகளும் ஆதியில் இறைவனிலிருந்து தோன்றி, இவனால் இயங்குகின்றன. இந்தக் கடவுளையே ஆதிபகவன் என்று போற்றுகின்றார் திருவள்ளுவர்.

எழுத்துக்களிலே 'அ' என்ற எழுத்தாக உள்ளேன் என்று கண்ணன் கீதையில் அருளியுள்ளான். (கீதை 10.33)

அகார வாச்யன் நாராயணன்தான் என்பது எல்லா வேத சாத்திரங்களும் ஒப்புக் கொண்ட உண்மை. எனவே தான் 'அ' கரத்திற்கு ஆதிபகவனை ஒப்பிட்டுப் பேசுகிறார் வள்ளுவர் பெருமான். இதில் எதிர்வாதம் இருக்க முடியாது. ஏனைய தெய்வங்களை எந்த எழுத்தாலும் குறிப்பிடு வதில்லையே. 'அ' காரம் திருமால் என்றும் 'உ' கார

பிராட்டி என்றும் 'ம' காரம் பக்தன் என்றும் பேசுவது ஸ்ரீ வைணவமேயாகும்.

'ஆதிபகவன்' என்னும் சொற்றொடரில் உள்ள 'ஆதி' யாரைக் குறிக்கும்?

''நான்முகனை நாராயணன் படைத்தான், நான் முகனும் தான். முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான்'' என்று பேசுகிறார் சிவவாக்கியராக இருந்து திருமழிசை யாழ்வாராக மிளிர்ந்தவர்.

'ஆதிமூலமே' என அழைத்து, அதற்கு உரியன் திருமாலே என கசேந்திர ஆழ்வானும் நிரூபித்துள்ளான்.

கிறித்துவுக்கு முன் கிறித்துவம் இல்லை. அல்லாவுக்கு முன் இஸ்லாம் இல்லை. புத்தனுக்கு முன் பௌத்தம் இல்லை. மகாவீரருக்கு முன் ஜைனம், சமணம் இல்லை. எனவே எல்லா மதங்களுக்கும் ஆதியானது ஸ்ரீவைணவமே. ஆதியானவன் திருமாலே.

பக்தர்கள் திரளாகக் கூடியுள்ள ஒரு பெருங்கூட்டத் திற்குச் செல்வோம் அவர்களில் எல்லோரையும் 'பாகவதர் கள்' என்று அழைப்பதில்லை. திருமால் அடியார்களே 'பாகவதர்கள்' என்று அழைக்கப்படுவார்கள். எனவே பாகவதர்களால் வணங்கப்படுபவன் பகவானான திருமால் தான்.

திருமால் கண்ணபிரானாக அவதரித்து அருளியதற்கு 'பகவத்கீதை' எனப் பெயர்; அத்திருமாலைப் பற்றி எழுந்த நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கும் 'பகவத்விஷயம் என்று திருநாமமாயிற்று.

பாலகர்கள் எழுத்தைக் கற்பதும் அரிச்சுவடியில்தான்?

ஆதி என்னும் சொல்லையும் பகவன் என்னும் சொல்லையும் இணைத்து நம்மாழ்வார் அருள்வது

ஆதியம் பகவன் (திருவாய்மொழி 1.3.5)

"ஆதி" என்னும் சொல் மட்டும் ஆளப்படுவது ஆதியம் சோதி (திருவாய்மொழி 3.4.4.)

கடவுள் வாழ்த்தில் உள்ள பத்துக்குறள்களில் 6 குறள்களில் ஆதியம் பகவானுடைய திருவடியை-தாளை வணங்க வேண்டும் எனப் பணிக்கின்றார் வள்ளுவர்.

இது ஸ்ரீவைணவ சமயத்தின் தலையான கொள்கையான சரணாகதி மார்க்கத்தையே குறிப்பிடுகிறது:

**"கற்றதனால் ஆய பயன் என் கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்"**

இதில் உள்ள வாலறிவன் ஞானப் பிரானாகிய வராக மூர்த்தியையும், அவன் அருளிய வராக சரம சுலோகத்தையுமே குறிக்கும். வராகப் பிரான்தான் எவனாவது, எப்போதாவது என்னைச் சரணடைந்தால் அதை மறவாமல் மனத்தில் வைத்து அவனை மோட்சத்துக்கு அழைத்துச்செல்வேன் என்றார். இதனையே மேலும் சரணாகதி தர்மத்தைத் தள்ளிப் போடாமல் உடனே அநுஷ்டிக்க வேண்டுமென அறிவுறுத்துகிறார் வள்ளுவரும். அப்போதைக்கிப் போதே சொல்லி வைத்தேன் அரங்கத்தரவணைப் பள்ளியானே என்பது போல:

**அன்று அறிவாம் என்னாது அறம் செய்க மற்று அது**
**பொன்றுங் கால் பொன்றாத் துணை!**

கண்ணன் கீதையில் "அர்ச்சுனா! எல்லா கடமைகளையும் விட்டு என்னைச் சரணாகதி செய்யும் கடமையையே மேற்கொள்க!" என்றதை வள்ளுவர் அருள்வது.

**பற்றுக! பற்றற்றான் பற்றினை, அப்பற்றைப்**
**பற்றுக, பற்று விடற்கு!**

ஸ்ரீ இராமாநுசரின் உள்ளத்தில் எழுந்த பெரும் விஷயங்களை, அவர் மூலமாக அல்லாமல் திருக்கச்சி நம்பிகள் மூலமே குறிப்பால் அறிந்து காஞ்சி அருளாளப் பெருமாள் அருளிய ஆறு வார்த்தைகளைக் குறிப்பிடும்; குறள்

"ஐயப்படா அது, அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்"

இவ்விதமாகத் தொட்ட தொட்ட இடமெல்லாம் 1. திருமாலைப் பற்றியும், 2. திருமகளைப் பற்றியும், 3. வைகுண்டத்தைப் பற்றியும், 4. அவதாரங்களைப் பற்றியும் 5. அர்ச்சை நிலையைப் பற்றியும் 6. இவ்வ வதாராதி அர்ச்சைகளில் பரப்பப்பட்ட ஞானத்தைப்பற்றி யும், இலைமறை கனியாகத் திருக்குறளில் அருளியுள்ள வள்ளுவரின் பண்பையும், திறமையையும் தெய்வீகப் பொலிவையும் போற்றி மகிழ்வோமாக!

வாழ்க! வள்ளுவம்!

வாழ்க வைணவம்!

# பாரதிக் கண்ணன்

தமிழ்க் கவிகள் பழங்காலத்தில் பாடியதெல்லாம், பெரும்பாலும் பக்தியைப் பற்றியும் பகவானைப் பற்றியும் தான். சிறந்த அறிவாளிகளே கவிகளாக முடியும், சிறந்த கருத்துக்களே கவிகளின் விஷயமாக அமையும். தெய்வமும் பக்தியுமே மனிதனின் சிறந்த கருத்துக்கள். ஆயிரக் கணக்கான வருடங்களாக ஆராய்ச்சியில் தோய்ந்தவை இவை. அவ்வாராய்ச்சியினால் இன்னும் எட்டப்படாதவை. எனவே, அறிவிற் சிறந்த பழங்காலத் தமிழர்கள், பக்தியை யும் பகவானையும் பொருளாகக் கொண்டு கவிகள் செய் தார்கள். இது ஒரு கொள்கை.

மேற்கூறியதற்கு எதிர்ப்பான ஒரு கொள்கை யும் இருக்கின்றது. விஞ்ஞான ஆராய்ச்சியும், பகுத்தறிவும் விரிவு பெறாத பழங் காலத்தில் கவிகளுக்கு வேறு விஷயம் அகப்படவில்லை. எனவே, 'செக்கு மாடு' களைப் போல், "பக்தி", "பகவான்", என்று திருப்பித் திருப்பிப் பாடி வைத்தார்கள். இது ஒத்துக்கொள்ளத்தக்கதா? இதை ஆராய்வோம்.

தற்காலத் தமிழ்க் கவிஞர்களைப் பார்க்கலாம். இவர் களில் மூவர் சிறந்தவர்களாக மதிக்கப்படுகின்றனர். சமீபத்தில் காலஞ்சென்ற தேசிக விநாயகம்பிள்ளை அவர் களைக் கவிமணி' என்று தான் சொல்ல வேண்டும், இது யாருக்கும் சந்தேகமில்லாத விஷயம்,

''பாட்டுக்கு யார்'' என்று கவிமணியைக் கேட்கலாம். அவர்,'' பாட்டுக்கா? பாட்டுக்கு ஒரே ஒரு புலவனைத் தானே சொல்லலாம். அது யாரா?

''பாட்டுக்கொரு புலவன் பாரதியடா!'' என்று தீர்ப் பளிக்கிறார்.

பெருங்கிழவர் கூறுவதை மற்றவர்கள் ஆதரிக்கின்றார் களா? அரசாங்கத்தை நடத்துபவர்களுக்கு ஆளத்தெரிய லாம், பாடத் தெரிய வேண்டியதில்லை. ஆனால் பாடத் தெரிந்தவர்களைப் பாராட்டத் தெரிய வேண்டும். நமது அரசினரால் 'அரசு கவி' எனப் போற்றப்பட்டவர் நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை அவர்கள்.

நாமக்கல் கவிஞரைப் புகழ்ந்தால், அவர் அந்தப் புகழை ஏற்க மறுக்கிறார். தமக்கு வரும் புகழுக்குக் காரணம் சொல்கிறார்.

''நாரத கீத மென்ன
 கலக்கிடும் பாடலாலே
பாரத நாட்டை யென்றும்
 பணித்திடும் சுப்ரமண்ய
பாரதி பாட்டைக் கண்ட
 பழமை யித் தமிழ் நாட்டில்
யாரது?'' என்று கேட்க
 யானுமிக் கவிகள் சொன்னேன்?''

பாரதியார் தான் காரணமாம் ஆஸ்தான கவிஞர் உயர்தர மான பாடல்களைப் பாடுவதற்கு.

பகுத்தறிவின் வழியிலேயே நடக்க வேண்டும் என்ற கொள்கைகளைப் பிரச்சாரம் செய்து வருபவர்களால் புரட்சிக் கவி எனப் போற்றப்படுபவர் பாவேந்தர் புதுவை கனக சுப்புரத்தினம் அவர்கள். பாரதியின் மீது ஏற்பட்ட ஈடுபாட்டினால் பாரதிதாசனாகக் காட்சியளிக்கின்றார் இவர்.

இம்முத்தமிழ் வாணரும் ஏத்தும் பாரதியார் தேசியக் கவி என்றும், விடுதலைக் கவி என்றும் போற்றப்படுகிறார். இது கால சந்தர்ப்பத்தினால் ஏற்பட்ட ஒரு அம்சம் தான்; சுதந்திரப்போரின் நடுப்பகுதியில் வாழ்ந்த காரணத்தினால் பாரதியார் தேசிய விடுதலைப் பாடல்களைப் பாட நேர்ந்தது. ஆனால் தற்போதைய சுதந்திர சகாப்தத்தில் வாழ்ந்திருந்தால், முழுக்க முழுக்க பக்தியைப் பற்றியும் பகவானைப் பற்றியும் தான் பாடியிருப்பார். துளி கூட சந்தேகம் வேண்டியதில்லை.

சுதந்திர தாகம் தணிய வேண்டுமென்றும், அடிமையில் மோகம் மடிய வேண்டு மென்றும் யாரிடம் வேண்டுகிறார்?

அன்றொரு பாரதம் ஆக்க வந்தோனே! என்று கண்ணனிடம்தான்!

துரியோதன சபையில் திரௌபதிக்கும் தேர்த்தட்டில் அர்ச்சுனனுக்கும் ''அஞ்சாதே'' என்று அபயம் தந்த கண்ணனின் அருட்செயல்கள் மனதில் தோன்றவும்,

**அஞ்சலென் றருள் செய்யும் கடமை யில்லாயோ!**
**ஆரிய நீயும் நின் அறம் மறந்தாயோ!**

என்றும் முறையிடுகிறார்!

ஆவணி மாதம் கண்ணனின் மாதம், பாரதியாரின் மாதமும்கூட; பாரதியார் கண்ணனைப் பாடிய விதமே ஒரு தனி அழகு. பழமைமைக் கருத்தை மனதில் வைத்துப் புதுமைப் பாணியிலே பாடியுள்ளார்.

இராமாயணத்தின் சிறப்பு ''சிறையிருந்தவள் ஏற்றம்'' என்று கூறுவார்கள் பெரியோர்கள். உலக மாதாவான லட்சுமி, தேவர்களின், ரிஷிகளின் துயரம் தீர்ப்பதற்காக இராவணனுடைய அசோக வனச் சிறையில் இருந்தது தான் இராமாயணத்தில் உள்ள சிறந்த அம்சம் என்பது பொருள். அதுபோலவே தூது சென்ற எளிமை என்று மகாபாரதத்தின் பெருமையைப் பற்றிச் சொல்லுவார்கள்; சர்வலோக

நாயகனான திருமால் கண்ணனாக அவதாரம் செய்து பாண்டவர்களுக்காகக் கழுத்திலே ஓலை கட்டிக் கொண்டு தூதுவனாக நடந்தானாம்! லட்சம் சுலோகங்களையுடைய மகாபாரதக் காவியத்தில் சுவையான பாகம் இதுவே.

சிலப்பதிகாரம் பாடிய சமண முனிவரான இளங்கோ வடிகளும் இறைவனது இந்தப் பரம எளிமைக்கு உருகிக் குரவையர் வாயிலாக.

**மடம் தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்**
**கடந்தானை; நூற்றுவர்பால் நால் திசையும் போற்ற**
**படர்ந்து ஆரணம் முழங்கப் பஞ்சவர்க்குத் தூது**
**நடந்தானை; ஏத்தாத நா என்ன நாவே!**
**நாராயணா!' என்னாத நா என்ன நாவே?**

என்று எதிர்மறையில் வினவுகிறார்.

நரனான அர்ச்சுனனுக்காகத் தேர்த் தட்டிலே நின்று சாரத்யம் செய்ததை ஒரு பெருமையாகக் கொண்டு பார்த்த சாரதியாக சேவை சாதிக்கின்றான் கண்ணன் திருவல்லிக் கேணியிலே!

ஆண்டவன் பக்தனுக்காகத் தன் மிக உயர்வையும் மதியாமல் அடிமைப் படுவதை இன்னும் பல கதைகள் நமக்கு விளக்குகின்றன. இறைவனின் இப் பெருங் குணத்தில் ஈடுபடுகிறார் பாரதியாரும். தமக்கே உரிய புதிய பாணி யிலே இதை வெளியிடுகிறார் "கண்ணன்—என் சேவகன்" என்று மகுடமிட்டு.

கண்ணனை அநுபவிக்கும் முன்பு, சேவகனைப் பற்றி நாம் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று விரும்பு கிறார் பாரதியார். சேவகன் என்றால், ஏதோ பழங் காலத்துச் சேவகன், சொன்னபடி நடப்பவன், அடக்கமே, உருவம் என்றெல்லாம் நாம் நினைத்து விடுவோம். அதற்காகப் பாரதியார் தற்கால சேவகனைப் பற்றிச் சரியாக விவரிக்கிறார்.

நமக்கும் சேவகனுக்கும் தொடர்பு ஏற்படுத்துவது கூலி தான்! நியாயமான கூலி நாமும் கொடுக்க வேணும் சேவகரும் வாங்க வேணும், ஆனால் பாரதியார் கண்ட தற்காலச் சேவகர்:

"கூலி மிகக் கேட்பார்" அதன்படியே அள்ளித் தருகிறோம். ஆனால் அவர்கள்,

"கொடுத்ததெல்லாம் தாம் மறப்பார்"

வீட்டில் தலை போகிற காரியம்; என்ன செய்வார்கள்;

"வேலை மிக வைத்திருந்தால் வீட்டிலே தங்கிடுவார்' வராததற்குக் காரணம் கேட்டால்; விந்தையாக இருக்கும் பதில் :

"பானையிலே தேளிருந்து பல்லால் கடித்ததென்பார்' வீட்டிலே பெண்டாட்டிமேல் பூதம் வந்ததென்பார்; பாட்டியார் செத்துவிட்ட பன்னிரண்டாம் நாளென்பார்; பேச்சு இப்படி; நடத்தையோ, வயிற்றெறிச்சல்தான்"

"ஓயாமல் பொய்யுரைப்பார் ஒன்றுரைக்க வேறு செய்வார்" நமக்கு ஆகாதவர்களுடன் எப்படி நடந்து கொள்ளுவார்கள்?

"தாயாதியோடு தனியிடத்தே பேசிடுவார்;" ரகசியமான சேதியா? சரி! சரி.

"உள் வீட்டுச் சேதியெல்லாம் ஊரம்பலத்துரைப்பார், எள் வீட்டில் இல்லையென்றால்"

கழுத்தில் டாாரத்தையே மாட்டிக் கொண்டு எங்கும் முரசறைவார்.

பாரதியார் சேவகரால் பட்ட சிரமம் மிகவுண்டு. என்றாலும், அவருக்கு சேவகரில்லா விடிலோ செய்கை நடக்கவில்லை. ஒரு தகுந்த வேலையாளைத் தேடிக் கொண்டிருந்தார்.

இப்படி இடர் மிகுந்து வாடுகையில் பாரதியாருடைய அதிர்ஷ்டத்தைப் பாருங்கள்! அவனாகவே எங்கிருந்தோ வந்தான். வேலையும் கேட்டான்.

வேலைக்காரனுக்கு என்னவெல்லாம் தெரியுமென்றா கேட்கிறீர்கள்? அவனே சொல்வதைக் கேட்கலாமே!

''மாடு கன்று மேய்த்திடுவேன், மக்களை நான் காத்திடுவேன்;'' அதாவது பகுத்தறிவுடையது, இல்லாதது என்ற வித்யாசமில்லை. அஃறிணை, உயர்திணை எல்லாவற்றையும் காக்க முடியுமாம்.

சின்னஞ்சிறு வேலைகளா?

''வீடு பெருக்கி விளக்கேற்றி வைத்திடுவேன்''

அவன் கால் பட்டால் போதும்; வீடு தூய்மையாகி விடும்; ஒளி வீசும். இதில் சந்தேகப்படுகிறீர்களா?

''சொன்னபடி கேட்பேன்.''

என்ன வேலையானாலும் கொடுங்கள்!

''துணி மணிகள் காத்திடுவேன்''

ஊனையிட்டு உயிரை வாங்கும் பாப்பா இருக்கிறதா!

''சின்னக் குழந்தைக்குச் சிங்காரப் பாட்டிசைத்தே ஆட்டங்கள் காட்டி, அழாதபடி பார்த்திடுவேன்;''

எவர் அழுகையும், துக்கமும் போய்விடுமாம் அவனை கண்டால்.

வீட்டில்தானா அவன் காப்பான்?

''காட்டுவழியானாலும், கள்ளர் பயமானாலும்,''

வேலை நேரமும் கட்டுப்பாடும் கிடையாதாம்!

''இரவில் பகலிலே எந்நேரமானாலும் சிரமத்தைப் பார்ப்பதில்லை, தேவரீர் தம்முடனே சுற்றுவேன் தங்களுக் கோர் துன்பமுறாமல் காப்பேன்;''

மிக்க வுரைபல சொல்லி, விருதுபல சாற்றுகின்ற இந்த ஆள் ஆரம்பிக்கிறதே இப்படி இருக்கிறது! கூலிக்காகத்தான் அடிபோடுகிறானோ?

அந்த சந்தேகத்திற்கும் பதில் கிடைக்கிறது! ஐயனே!

''தாலிகட்டும் பெண்டாட்டி சந்ததிகளேதுமில்லை, நானோர் தனியாள்;''

கடைசியில் பார்த்தால் அவன்தான் மிச்சம். ஒண்டிக் கட்டை தான்! எனவே, செலவுகள் கிடையாது.

இவன் வயதையும் பார்ப்போம் :
'நரைதிரை தோன்றாவிடினும் ஆனவயதிற்களவில்லை'

சரி, வேலை செய்கிறவனுக்கு ஏதாவது கொடுக்கத் தானே வேணும், அப்படி ஒன்றுமில்லை; ஆனால், ' தேவரீர் ஆதரித்தாற்போதும் அடியேனை;''

கூலி என்று கொடுக்கத் தேவையில்லையாம். பட்சமாக வைத்துக் கொண்டால் போதுமாம்! ஏன் இப்படிச் சொல்லு கிறான்?

''நெஞ்சிலுள்ள காதல் பெரிதெனக்கு, காசு பெரிதில்லை'' என்றான்.

அவனிடம் அன்பு செலுத்திவிட்டால் போதும், ஐந்து, ஐம்பது என்று கொடுக்க வேண்டியதில்லையாம்.

தற்கால சேவகர்களின் லட்சணத்தை மேலே பார்த்தோம். இந்தக் காலத்தில் இப்படியும் ஒரு வேலைக் காரனா? இவன் பண்டைக் காலத்துப் பயித்தியத்தில் ஒன்றெனவே கண்ட பாரதியாரும், களிப்புடனே ஆளாகக் கொண்டு விட்டார்!

அதற்குப் பிறகு அவன் எப்படி நடந்து கொண்டான்? பாரதியாரைத் தானே கேட்கவேணும்?

அன்று முதற்கொண்டு நாளாக நாளாக, நம்மிடத்தே கண்ணனுக்குப் பற்று மிகுந்து வரப் பார்க்கின்றேன்.

கண்ணனுடைய பற்று மிகுந்ததால் என்னவெல்லாம் நன்மை கிடைத்தது கவிதா சாமர்த்தியத்துடன் பாரதியார் ஒப்புக் கொள்ளுகிறார். கண்ணனால்

"பெற்று வரும் நன்மையெல்லாம் பேசி முடியாது."

சரி எப்படித்தான் கண்ணன் வேலை செய்கிறான்?

"கண்ணை இமையிரண்டு காப்பது போல் என் குடும்பம் வண்ணமுறக் காக்கின்றான்."

இமையிருக்கிறதால் விழிக்கு அபாயமில்லை; இவனிருக்கிறதால் கவிக்கும் அபாயமில்லையாம்!

அரசாங்கப் பணி புரிவோர்கள் பார்க்கப் படவேணும் கேட்கப்படக் கூடாது. அதாவது, அவர்கள், பொது மக்கள் காணப் பணி புரிய வேணும்; பொது மேடைகளிலே நின்று பேசக் கூடாது. மனமுவந்து வேலை செய்கிறவன் தான் வாயை மூடிக் கொண்டு காரியத்தைக் கவனிப்பான். எனவே பாரதியார் சொல்கிறார்:

"வாய் முணுத்தல் கண்டறியேன்"

கேட்டறியேன் என்றல்லவா கூறவேணும்? சில சமயம் வேலைக்காரர்கள் பேசுவார்கள்! கேட்க முடியாது. கண்ணால் பார்த்தால்தான் அவர்களுடைய உதடு அசைவது தெரியும். கண்ணனது வாய் முணுப்பைக் கண்ணால் கூடக் காணவில்லையாம்! வாய் முணுத்தால் தானே!

சரி; கண்ணனைப் பற்றிக் கண்ணால் காணுவது தான் என்ன? அவன் வந்தபோது சொன்னபடி,

"வீதி பெருக்குகிறான்; வீடு சுத்தமாக்குகிறான்"

தப்பு கண்டு பிடித்தால், தமுக்கா போடுகிறான்?

"தாதியர் செய் குற்றமெல்லாம் தட்டியடக்குகிறான்"

குழந்தைகளிடம் எப்படி?

பெரியவர்களுக்கு எல்லா வேலைகளையும் செய்யாமற் போனாலும் பாதகமில்லை. அவர்கள் பார்த்துக்

கொள்ளுவார்கள். ஆனால் குழந்தைகள் விஷயம் அப்படி யல்ல, அதனால் தான் கண்ணன்,

"மக்களுக்கு வாத்தி, வளர்ப்புத் தாய், வைத்தியனாய் ஒக்க நயங் காட்டுகிறான்"

பொருள்கள் என்றால் மிக அலட்சியம் வேலைக்காரர் களுக்கு, விலைவாசிகளின் கஷ்டம் ஒன்றும் தெரியாது அவர்களுக்கு; கண்ணனோ,

**"ஒன்றும் குறைவின்றிப் பண்டமெல்லாம் சேர்த்து**
**வைத்து, பால் வாங்கி மோர் வாங்கி"**
வைப்பான்.

இது மட்டுமல்ல. இந்த பொறுப்பைச் செய்ய வேண்டி யவர்கள் வீட்டுப் பெண் மணிகள். சோம்பலும், அறியாமை யும் போனால் தானே அவர்கள் இவைகளைக் கவனிப்பார் கள். அப்படியிருந்தும் கண்ணன், பெண்டுகளைத் தாய் போல் பிரியமுற ஆதரித்து, வீட்டில் எல்லோருக்கும் கண்ணன் நண்பனாய், மந்திரியாய், நல்லாசிரியனுமாய் விளங்குவான்.

பாரதியார் சந்தேகப்பட ஆரம்பித்தார். இவை சாதாரண மனித குணமல்ல. தெய்வத் தன்மைதான்! ஆனாலும் அவன் பார்க்கிற பார்வையைப் பார்த்தால் வேலைக்காரனாகவே தோன்றுகிறான்,

"பண்பிலே தெய்வமாய் பார்வையிலே சேவகனாய்"

எங்கிருந்தோ வந்த இவன், சந்தேகத்திற்கும் இடம் வைக்காமல், இடைச்சாதி என்று சொல்லிக் கொண்டான்

இத்தகைய கண்ணனை அடைந்த பாரதியாருக்கு ஏற்படும்பெருமையைப் பாருங்கள்!

இங்கிவனை யான்பெறவே என்ன தவஞ் செய்து விட்டேன்,

உண்ணுஞ் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம். கண்ணன், எம்பெருமானென்றே கண்கள் மல்கி உருகினார் நம்மாழ்வார்.

''சேம நல் வீடும் பொருளும் தருமமும், சீரியநற்காமமு மென்றிவை நான் கென்பர், நான்கினும் கண்ணனுக்கே ஆமதுகாமம் அறம் பொருள் வீடிதற்கென்றுரைத் தான் வாமனன் சீலன், இராமாநுசன் இந்தமண்மிசையே'' என்று சகல புருஷார்த்தங்களையும் கண்ணனுக்கே அர்ப்பணிக்க வேண்டுமென ஸ்ரீ ராமாநுஜர் உபதேசித்ததைத் திருவரங்கத்து அமுதனார் எடுத்துக் காட்டுகிறார்.

''நாம் பகவானிடம் அன்பு செலுத்த வேண்டும்; அவன் நம் வேலைகளையெல்லாம் முடித்து வைப்பான் உடனிருந்தும் முன்னிருந்தும்.'' என்று மகான்கள் உபதேசித்த பெரும் உண்மையைப் பாரதியார் புதுமை மெருகு கொடுத்து இப்படியெல்லாம் காட்டி வந்தார்.

மேலும் எண்ணம் விசாரம் எதுவுமவன் பொறுப்பாய் செல்வம், இளமாண்பு, சீர் சிறப்பு, நற் கீர்த்தி கல்வி, அறிவு, கவிதை முதலான ஒளிசேர் நலமனைத்தும் ஓங்கி வருமாம்.

''அருச்சுனா! சகல பற்றுக்களையும் விடுவாயாக! என்னையே சரணாகப் பற்றுவாயாக! நான்ரட்சிக்கிறேன்!'' என்று கண்ணன் கீதையில் அருளியதைக் கடைப்பிடித்து

**கண்ணனை நான் ஆட்கொண்டேன்**
**கண்கொண்டேன்! கண்கொண்டேன்!**
**கண்ணனை யாட்கொள்ளக் காரணமும் உள்ளனவே!**

எனத்தம் களிப்பை வெளியிடுகிறார்.

வேலைகளை எல்லாம் கண்ணனிடம் ஒப்படைத்தால், அவைகளை அவனே நடத்தி வைப்பான் என்ற மயர்வறும் மதி நலத்தைப் பெறுவோமாக!

# பாஞ்சாலி சபதம்

உலகில் பிறந்துள்ள நாம் இறைவனை அடைந்து உய்வதற்கு ஏற்பட்டுள்ள மார்க்கங்கள் நான்கு ஞான மார்க்கம்-நிஷ்டைகள்-கடினம். கர்ம-மார்க்கம் வழுவிலா அடிமை-இதுவும் கடினமே (எ-கா) இளைய பெருமாள். பக்திமார்க்கம்-மனக்கட்டுப்பாடு தேவை. இதுவும் கடினமேபிரபத்தி- சரணாகதி மார்க்கம்: மிகவும் எளியது அடைக்கலம்.

''சரணாகதி: 'அடியைத் தொடர்ந்து எழும் ஐவர் கட்காய் அன்று பாரதப் போர் முடியப் பரி நெடுந்தேர் விடுங்கோனான கண்ணன்'' ''அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவர் அறிய நெறி எல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்து ஒரு மூர்த்தியன்'' கண்ணபிரான்.

பரத்துவமும், சௌலப்யம் எளிமையும் கலந்த சேயன் அணியன் சிறியன் மிகப் பெரியன் ஆயன் துவரைக் கோனாய் நின்ற மாயன் அன்று- ஓதிய வாக்கும் அதுவே; அதனைக் கல்லார், உலகத்தில் மெய்ஞ்ஞானமே இல்;

இந்த மெய்ஞ்ஞானத்தையே பார்த்தசாரதித் திருக்கோலத்தில் காட்டியருளினான்; கீதாசாரியனாக!

''கையும், உழவு கோலும்! பிடித்த சிறுவாய்க் கயிறும், ஸேநாதூளி தூஸரிதமான திருக்குழலும்! தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய்! நிற்கிற சாரத்திய வேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்.

அவன் அளித்த அரும் சொற் பதங்கள் "ஸர்வ தர்மாந், பரித்யஜ்ய மாம், ஏகம் சரணம் வ்ரஜ." ஞானம் கர்மம், பக்தி-இவற்றை தர்மம் என்கிறது பிரமித் அர்ச்சுனன் கருத்தாலே!

ஸ்ரீபார்த்த சாரதித் திருக்கோலத்தைத்திருவல்லிக்கேணி திவ்ய தேசத்தில் சேவிக்கலாம். திருவல்லிக்கேணி திவ்ய தேசமே சரணாகதி உபதேச திவ்ய தேசம்! அர்ச்சுன சரணாகதி—திரெளபதி சரணாகதி : ஆயர் சரணாகதி!

"அந்தகன் சிறுவன் அரசர்—தம் அரசற்கு
இளையவன் அணி இழையைச் சென்று
'எந்தமக்கு உரிமை செய்! என, தரியாது
'எம்பெருமான் அருள்', என்ன,
சந்தம்மல் குழலாள், அலக்கண் நூற்றுவர் தம்
பெண்டிரும் எய்தி, நூல் இழப்ப,
இந்திரன் சிறுவன் தேர் முன் நின்றானைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே!"

(பெரிய. திரு. 2.3.6)

தேவர்களும் ரிஷிகளும் சரணாகதி செய்ய ஏற்பட்ட வியூக நிலையே வித்து.

வேதத்தை, வேதத்தின் சுவைப் பயனை விழுமிய
முனிவரர் விழுங்கும்
கோதில் இன் கனியை நந்தனார் களிற்றைக்
குவலயத்தோர் தொழுது ஏத்தும்
ஆதியை அமுதை, என்னை ஆள் உடை அப்பனை,
ஒப்பவர் இல்லா
மாதர்கள் வாழும் மாடமாமயிலைத் திருவல்லிக்கேணிக்
கண்டேனே!

(பெ. திரு. 2.3.2)

விசுவாமித்திர வாக்கு.

என் அனைய முனிவரரும் இமையவரும்
இடையூறு ஒன்று உடையரானால்
பன்னகமும் நகு வெள்ளிப் பனிவரையும்
பாற்கடலும், பதுமபீடத்து
அந்நகரும், கற்பக நாட்டு அணிநகரும்
மணிமாட அயோத்தி;என்னும்
பொன்நகரும் அல்லாது புகல் உண்டோ?
இகல் கடந்த புலவு வேலோய்!

அதனால் இராமாவதாரமும் ஏற்பட்டது. இராமாயணம் சரணாகதி சாத்திரமே. வீபீடண சரணாகதி—தலைசிறந்த பாகம்: விபீடணனுக்குச் சரணாகதி—அபயம் அளிக்கவில்லையானால் இராமாயணம் எரிக்கப்பட வேண்டியதே.'

''பரதனும், தம்பி சத்துருக்கனனும்; இலக்குமனோடு
மைதிலியும்
இரவு நன் பகலும் துதி செய்ய நின்ற இராவணாந்தகனை,
எம்மானைக்
குரவமே கமழும் குளிர் பொழிலூடு குயிலொடு
மயில்கள் நின்றால
இரவியின் கதிர்கள் நுழைதல் செய்தறியாத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே!''
(பெ. திரு. 2.3.7)

## பிரகலாத சரணாகதி

''பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன் வாயில் ஓர்
ஆயிரம் நாமம்;
ஒள்ளியவாகிப் போத ஆங்கு அதனுக்கு ஒன்றுமோர்
பொறுப்பிலன் ஆகிப்
பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண்புடைப்ப பிறை
எயிற்று அனல் விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவைத் திருவல்லிக்கேணி
கண்டேனே!'' (பெ. திரு. 2.3.8

## கஜேந்திர சரணாகதி

''மீன் அமர் பொய்கை நாள் மலர் கொய்வான்
வேட்கையினோடு சென்று இழிந்த
கான் அமர் வேழம் கை எடுத்து அலற கரா அதன்
காலினைக் கதுவ
ஆனையின் துயரம் தீரப்புள் ஊர்ந்து சென்று நின்று ஆழி
தொட்டானைத்
தேன் அமர் சோலை மாடமா மயிலைத் திருவல்லிக்கேணி
கண்டேனே''
(பெ. திரு: 2.3.9)

வேதாந்த ஆசிரியர் சரணாகதி மேன்மையை விளக்கி யருள்வது.

''பக்தி முதலாம் அவற்றுள் பதி எனக்குக் கிட்டாமல்
முக்தி தரும் நகர் ஏழில் முக்கியமாம் கச்சி தன்னில்
எத்திசையும் திரிந்தோடி இளைத்து விழும் காகம் போல்
அத்திகிரி அருளாளர்க்கு அடைக்கலம் நான்புகுந்தேனே'

சரணாகதி செய்ய யோக்கியதை நமக்கு உண்டா எனப் பயமும் ஐயமும் ஏற்படலாம். அதிகாரி நியமம் இல்லை என அச்சம் தவிர்க்கிறது ஸ்ரீவசன பூஷனம். இதற்கு வழி காட்டியாக விளங்கும் சரணாகதிகள் :

தரும புத்திரராதிகளும், திரௌபதியும், காகமும், காளியனும், ஸ்ரீ கஜேந்திராழ்வானும், ஸ்ரீ விபீஷணாழ் வானும், பெருமாளும், இளைய பெருமாளும் தொடக்க மானவர்கள் சரணம் புகுகையாலே அதிகாரி நியமம் இல்லை; இவர்கள் எல்லோருக்கும் தக்க படிப்பலன் கிடைத் தது; சரணாகதி பலித்தது.

தரும புத்திரராதிகளுக்குப் பலன் - இராச்சியம், திரௌபதிக்குப் பலன் - வஸ்திரம்; காகத்துக்கும், காளி யனுக்கும் பலன் - பிராணன்; கஜேந்திராழ்வானுக்குப் பலன் - கைங்கரியம்; ஸ்ரீ விபீஷ்ணாழ்வானுக்குப் பலன் -

இராமப் பிராப்தி; (அடைதல்;)பெருமாளுக்குப் பலன் - சமுத்திர தரணம் (தாண்டுதல்); இளைய பெருமாளுக்கு - இராமாநுவிருத்தி-பின் தொடர்ந்து அடிமை செய்தல்.

பெருமாளுக்குச் சரணாகதி செய்ய வேண்டுமானால் சுத்தி, அசுத்திகள் பார்க்க வேண்டாமா என யோசனை வேண்டா; அழுக்கு உடம்பைக் குட்டையில் கழுவி கங்கைக்குப் போட வேண்டாம்.

திரௌபதி ஸ்நாதையாயன்றே (நீராடியவளாக அல்ல) பிரபத்தி பண்ணிற்று. அர்ச்சுனன் நீசர் நடுவேயிறே இவ்வர்த்தம் கேட்டது! ஆகையால் சுத்தி அசுத்திகள் தேட வேண்டாம்! இருந்தபடியே அதிகாரியாம் இத்தனை. சரணாகதி செய்கையில் தன் பலத்தில் நம்பிக்கையும், தன் பலவீனத்தில் அதைரியமும் கூடாது. சரணாகதியாம் உபாயத்துக்குப் பிராட்டியையும், திரௌபதியையும், திருக்கண்ணமங்கையாண்டானையும் போல இருக்க வேணும். பிராட்டிக்கும் திரௌபதிக்கும் வாசி சக்தியும் அசக்தியும் பிராட்டி ஸ்வசக்தியை விட்டாள்; திரௌபதி லஜ்ஜையை விட்டாள்; திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வ வியாபாரத்தை விட்டான், "இருகையும் விட்டேனோ திரௌபதியைப் போலே!"

சரணாகதிக்கு வேண்டியது நம்பிக்கையே! நாம் சரணாகதி செய்வதை அவன் அறிவானா என அவநம்பிக்கை கூடாது. ஏரியை வெட்டுதலே நம் வேலை;

**"தனக்கடிமைப் பட்டது தான் அறியானேலும்**
**மனத்திடையே வைப்பதாம் மாலை—வனத்திடரை**
**ஏரியாம் வண்ணம் இயற்றும் இது அல்லால்**
**மாரியார் பெய்கிற் பார் மற்று:"**

ஸ்ரீ வைணவ மகாத்மியமான திரௌபதி சரணாகதி வரகவி சுப்ரமணிய பாரதியாரை வசீகரிக்கின்றது! அந்த அரிய கதையை அள்ளிக் கொட்டினார் சுமார் மூவாயிரம்

அடிகளிலே! பேதைக்கும் பெண்ணுக்கும் அறியலாம்படி: அங்கும் இங்குமாகத் தேர்ந்தெடுத்து ஒரு சில பாகங்களை அநுபவிப்போம்! சுவையுடன் கதைகள் சொல்வதில் பாட்டி களுக்கு நிகர்பாட்டிகளே! "ஒரு ஊரில் ஒரு ராசா," என்று தொடங்குவார்கள்! பாரதியும் இதையே பின்பற்றிக் கதையை ஆரம்பிக்கின்றார்!

"ஒரு ஊரிலே ஒரு ராசாவாம்!" "எந்த ஊர்?"

"அத்தினபுரம் உண்டாம் இவ் அவனியிலே அதற்கு இணையில்லையாம்."

அத்தினபுரத்துக்குச் சமானமாக வேறு ஒரு ஊரை சொல்ல முடியாது தான்! அப்படி இணையில்லாத ஊர்.

ஏன்! இணையில்லாத அநீதியும் நடைபெற்றது!

கலி; கலிபுருடன்; சனி கண்ணால் காணும்படி "சிந்தை யில் அறம் உண்டாம்! எனில் சேர்ந்திடும் கலி செய்யும் மறமும் உண்டாம்!"

"மெய்த் தவர் பலர் உண்டாம் வெறும் வேடங்கள் பூண்டவர் பலரும் உண்டாம்!"

ஊரைப் பார்த்தோம்! அந்த ஊர் ராசாவைப் பார்ப் போம். (துரியோதனப் பெயரான்!) (இது ஆங்கிலத்தில் ஒருவருடைய உயர்வைப் பற்றிப் பேசும் முறை.)

துரியோதனனுடைய மனமோ அசல் கல்தான்! தலையும் முடியுமோ! வணங்கா முடி மன்னன்தான்!

"துரியோதனப் பெயரான்—நெஞ்சத் துணிவுடையான் முடியணிவறியான்!"

துரியோதனனுடைய சபை : "மந்திரம் உணர் பெரியோர்: பலர் வாய்ந்து இருந்தார் அவன் சபை தனிலே!"

அந்தப் பால் பண்ணையிலே விஷத்துளிகளும் தான் இருந்தன.

"பொய்ந் நெறித் தம்பியரும்-அந்தப் புலை நடைச் சகுனியும் புறமிருந்தார்"

துரியோதனன் வாழ்வு இந்திர போகம் தான்!

ஆனால் ஒன்று மட்டும் இல்லை. "போதும்" என்ற மனதுதான் இல்லை

பொருள் வளம் பாண்டவரிடம் இருக்கலாமா? எனவே தன் பொய்த்த நெஞ்சுடன் எண்ணுவதைக் கேளுங்கள்.

"பாண்டவர் முடியுயர்த்தே-இந்தப்
பார்மிசையுலவிடு நாள் வரை நான்
ஆண்டதோர் அரசாமோ?—எனது
ஆண்மையும் புகழுமோர் பொருளாமோ?"

அத்தைப் பாட்டிக் கதையை ரசித்துக் கொண்டு அடக்கம் என்ற திரையிலே பதுங்கிக் கொண்டு வாழும் கேவலத் தருமனா ராசசூய யாகம் செய்து அரசர்கட்குள்ளே தலைமைப் பட்டம் கட்டிக் கொள்வது?

கிழவியார் தபசியர் போல்-பழங்கிளிக் கதை படிப்பவன்,
பொறுமை என்றும்
பழவினை முடிவென்றும்-சொலிப் பதுங்கி நிற்போன்,
மறத் தன்மை இல்லான்,
வழ வழத் தருமனுக்கோ இந்த மாநில மன்னர் தலைமை
தந்தார்

முழவினைக் கொடி கொண்டான்-புவி முழுவதையும் தனியே குடி கொண்டான். பொறாமைத் தீ கொழுந்து விட்டு ஓங்கி எரிகிறது. பாண்டவர்களை நாசம் செய்தாக வேணும். இது என்னால் முடியாதே! எனில் யாரால் முடியும்! இதற்குத் துணை நம் மாமன் தான்!

''யாது நேரினும் எவ்வகையானும்
யாது போயினும் பாண்டவர் வாழ்வைத்
தீது செய்து மடித்திட எண்ணிச்
செய்கையொன்றறியான் திகைப்பெய்திச்
சூதும் பொய்யும் உருவெனக் கொண்ட
துட்டமாமனைத் தான் சரணெய்தி
'ஏது செய்வம்' எனச் சொல்லி நைந்தான்
எண்ணத்துள்ளன யாவும் உரைத்தே!''

துரியோதனச் சரணாகதியில் ஆரம்பமாகிறது கதை. சகுனியிடம் துரியோதன விண்ணப்பம்!

உலகு தொடங்கிய நாள் முதலாக நஞ் சாதியில் புகழ்
ஓங்கி நின்றார் இத் தருமனைப் போலெவர்? மாமனே!
இலகு புகழ் மனு ஆதி முதுவர்க்கும், மாமனே!-பொருள்
ஏற்றமும் மாட்சியும் இப்படி உண்டு கொல்! மாமனே!''

எதையும் மறப்பேன்—எனில் அவர் இயற்றிய ராசசூயயாகத்தையும் மறக்க முடியுமா?''

''எதனை உலகில் மறப்பினும், யான் இனி
மாமனே! இவர்
யாகத்தை என்றும் மறந்திடல் என்பது ஒன்று
ஏது காண்''

அண்ணன் திரிதராட்டினன்; அவர் மகன் நான்; எனக்கல்லவா பாண்டவர்கள் அடங்கிக் கிடக்க வேணும் அது கிடக்கட்டும்; யாக மரியாதை செய்தால்,அதையாவது முதலில் எனக்கல்லவா செய்ய வேணும். அதைக்கண்ணனுக் கல்லவா செய்தனர்.

அண்ணன் மைந்தன் அவனிக்கு உரியவன் யான்
அன்றோ! — அவர்
அடியவராகி எமைப் பற்றி நிற்றல் விதி அன்றோ!

பண்ணும் வேள்வியில் யார்க்கு முதன்மை அவர்
தந்தார்?—அந்தப்
பாண்டவர் நமைப் புல் என எண்ணுதல் பார்த்தையோ?
கண்ணனுக்கு முதல் உபசாரங்கள் காட்டினார்!—சென்று
கண்ணிலாத் தந்தைக்கு இச் செயலின் பொருள்
காட்டுவாய்:
மண்ணில் வேந்தருள் கண்ணன் எவ்வாறு முதற்
பட்டான்?—என்தன்
மாமனே! அவன் நம்மில் உயர்ந்த வகை சொல்வாய்,"

போதாத குறைக்கு அந்தப் பொன்னால் அலங்கரித்துப் பொலிந்த திரௌபதியும் அல்லவா என்னைப் பார்த்துச் சிரித்து ஏளனம் செய்தாள். வேறு பேச்சு வேண்டாம். உன் உபாயமே வேண்டும்!"

ஏந்திழையாளும் எனைச் சிரித்
தாளிதை எண்ணுவாய்;
பேச்சை வளர்த்துப் பயனொன்று
மில்லை; என் மாமனே!—அவர்
பேற்றை அழிக்க உபாயஞ் சொல்வாய்
என்றன் மாமனே!"

சகுனி திருவடிகள் சரணம் அபயம் அளிக்கின்றார் சகுனியார்! அட இதுவா பிரமாதம்' பாண்டவர்கள் ஒரு ஜன்மத்தில் அடைந்ததை ஒரு 'நாழிகையில் கைப்பற்ற முடியாதா? இருக்கிறதே உபாயம்—சூது!

என்று சுயோதனன் கூறியே—நெஞ்சம்
ஈர்த்திடக் கண்ட சகுனிதான்—அட
இன்று தருகுவன் வெற்றியே!— இதற்கு
இத்தனை வீண் சொல் வளர்ப்பதேன்?
மண்டபம் காண வருவிர் என்று அந்த
மன்னவர் தம்மை வரவழைத்—தங்கு
கொண்ட கருத்தை முடிப்பவே—மெல்லக்
கூட்டிவன் சூது போரச் செய்வோம்—அந்த

வண்டரை நாழிகை ஒன்றிலே—தங்கள்
வான் பொருள் யாவையும் தோற்றனைப் பணி
தொண்டர் எனச் செய்திடுவன் யான்—என்றன்
சூதின் வலிமை அறிவை நீ!

யுத்தம் செய்யலாம், ஆனால் வெற்றி நமக்கு நிச்சயமா? பாண்டவர்களோ சாமானியரா? அந்தப் பார்த்தனே போதுமே!

வெஞ்சமர் செய்திடுவோ மெனில்—அதில்
வெற்றியும் தோல்வியும் யார் கண்டார்?—அந்தப்
பஞ்சவர் வீரம் பெரிது காண்!—ஒரு
பார்த்தன் கை வில்லுக்கு எதிர் உண்டோ?

இனி துரியோதனனுடைய வழக்குரைஞர் சகுனியார் திரிதராட்டிரனரிடம் திரிக்கின்றார்.

''உன் மகன்...தேய்ந்து கட்டெறும் பாகின்றானே!'' தந்தை மகன் பாசத்தைத் தட்டி எழுப்புகிறான் தந்திரம் உணர் சகுனி!

''ஆண்தகையின் மகன் செய்திகேள்!—உடல்
வற்றித்துரும் பொத்து இருக்கின்றான்-உயிர்
வாழ்வை முழுதும் வெறுக்கின்றான்''

ஐயய்யோ! இது மட்டுமா?

''உண்ப சுவையின்றி உண்கின்றான்-பின்
உடுப்பதிகழ உடுக்கின்றான்;-பழ
நண்பர்களோ டுற வெய்திடான்;-இள
நாரியரைச் சிந்தை செய்திடான்;-பிள்ளை
கண் பசலை கொண்டு போயினான்;-இதன்
காரணம் யாதென்று கேட்பையால்;-உயர்
திண்பருமத் தடந்தோளினாய்'' என்று
தீய சகுனியும் செப்பினான்.

இதற்கு என்ன காரணமா?

''வேள்வியில் அன்றந்தப் பாண்டவர்-நமை
வேண்டுமட்டுங்குறை செய்தனர்,-ஒரு
கேள்வியிலாதுன் மகன்தனைப்-பலர்
கேலி செய்தே நகைத்தார் கண்டாய்''

*உன் மகனை மதிக்காமல் அந்த ஊதாங்குழல் கண்ணனையல்லவா உயர்த்தினார்கள். மூங்கிலிலிருந்து ஊதும் ஓர் கண்ணனை அந்த வேள்வியில் சால உயர்த்தினார் (இதனால் தான் துரியோதனன்)*

''பாண்டவர் செல்வம் விழைகின்றான்;-புவிப்
பாரத்தை வேண்டிக் குழைகின்றான்-மிக
நீண்ட மகிதலம் முற்றிலும்-உங்கள்
நேமி செலும் புகழ் கேட்கின்றான்,-குலம்
பூண்ட பெருமை கெடாதவா-றெண்ணிப்
பொங்குகின்றான், நலம் வேட்கின்றான்;-மைந்தன்
ஆண்தகைக்கு இஃது தகும் அன்றே? இல்லை
ஆம் எனில் வையம் நகும் அன்றே?

*ஊர் சிரிக்கும் ஐயா, ஊர் சிரிக்கும்.*

*திரிதராட்டிரன் சகுனியைச் சாடுகின்றான்'*
கள்ளச் சகுனியும் இவ்வனே-பல
கற்பனை சொல்லித் தன் உள்ளத்தின் பொருள்
கொள்ளப் பகட்டுதல் கேட்டபின்-பொருள்
கோபத்தொடே திரிதராட்டிரன்-அட!
ஒரு பேயென நீ வந்து தோன்றினாய்;-பெரு
வெள்ளத்தைப் புல் ஒன்று எதிர்க்குமோ-இள
வேந்தரை நாம் வெல்லல் ஆகுமோ?''
எண்ணித் துணிக கருமம்!
''ஒப்பில் வலிமை யுடையதாம்-துணை
யோடு பகைத்தல் உறுதியோ? நம்மைத்
தப்பிழைத்தாரந்த வேள்வியில்-என்று
சாலம் எவரிடம் செய்கிறாய்?-மயல்
அப்பி விழி தடுமாறியே-இவன்
அங்குமிங்கும் விழுந்தாடல் கண்டு-அந்தத்

துப்பிதழ் மைத்துனிதான் சிரித்-திடில்
தோஷமிதில் மிக வந்ததோ?''

கண்ணனுக்கு முதல் அர்க்கியம் காட்டியதா தவறு, பங்காளிகளுக்குக்குள்ளே தான் பரிமாறக் கொள்ள வேண்டியதா மரியாதை!

''கண்ணனுக்கே முதல் அர்க்கியம்-அவர்
காட்டினர் என்று பழித்தனை!-எனில்,
கண்ணும் விருந்தினர்க்கன்றியே-நம்முன்
காமுபசாரங்கள் செய்வதோ?-உறவு
அண்ணனும் தம்பியும் ஆதலால்-அவர்
அன்னியமா நமைக் கொண்டிலர்,-முகில்
வண்ணன் அதிதியர் தம்முளே-முதல்
மாண்புடையானெனக் கொண்டனர்.''

கங்கை மகன் அல்லவா சொன்னது கண்ணனுக்கு முதல் மரியாதை செய்ய!

''கண்ணனுக்கே அது சாலும் என்று-உயர்
கங்கை மகன் சொலச் செய்தனர்-இதைப்
பண்ணரும் பாவமென்றெண்ணினால், அதன்
பாரமவர் தமைச் சாருமோ? பின்னும்

கண்ணன் தான் என்ன சாமானியனா? அவன் கால் தூசுக்கு ஒப்பு உண்டா ஒருவர்;

''கண்ணனை ஏதெனக் கொண்டனை-அவன்
காலில் சிறு துகள் ஒப்பவர்-இலத்து
எண்ணரும் மன்னவர் தம்முளே-பிறர்
யாருமில்லையெனக் காணுவாய்''

கண்ணனுடைய அவதார ரகசியமாவது தெரியுமா? பாற்கடலுள் மையத்துயின்ற பரமன் தானே இவன்;

'ஆதிப் பரம் பொருள் நாரணன்-தெளி
வாகிய பாற்கடல் மீதிலே-நல்ல

சோதிப்பணாமுடி யாயிரம்-கொண்ட
தொல்லறிவென்று மோர் பாம்பின் மேல்-ஒரு
போதத்துயில் கொளும் நாயகன்-கலை
போந்து புவிமிசைத் தோன்றினான் இந்தச்
சீதக் குவளை விழியினான்"-என்று
செப்புவர் உண்மை தெளிந்தவர்

கண்ணன் பெருமையைப் பற்றி உன்னிடம் பேசுவதைவிட பேயிடம் பேசலாமே! பேயினை வேதம் உணர்த்தல் போல் கண்ணன் பெற்றி உனக்கு எவற் பேசுவார்?''

துரியோதனனுக்குப் பாம்புக் கொடி அந்தப் பாம்பைப் போலவே சீறுகிறான் தந்தையிடம்.

''பாம்பைக் கொடியென்றுயர்த்தவன்—அந்தப்
பாம்பெனச் சீறி மொழிகுவான்—''அட!
தாம் பெற்ற மைந்தர்க்குத் தீது செய்—திடும்
தந்தையர் பார்மிசை உண்டு சொல்?''

என்னையும் பாண்டவர்களையும் என் அப்பன் மதிக்கிற லட்சணம் இது;

வேம்பு நிகரிவனுக்கு நான்;—சுவை
மிக்க சருக்கரை பாண்டவர்;—அவர்
தீம்பு செய்தாலும் புகழ்கின்றான்,—திருத்
தேடினும் என்னை இகழ்கின்றான்"

உன்னோடு வேண்டாம் வாது! பாண்டவருடன் வேண்டும் இது! இதனால் நமக்கு வராது தீது.

''சொல்லின் நயங்கள் அறிந்திலேன்,—உனைச்
சொல்லினில் வெல்ல விரும்பிலேன்;—கருங்
கல்லிடை நாருரிப்பாருண்டோ!—நினைக்
காரணம் காட்டுதல் ஆகுமோ?—என்னைக்
கொல்லினும் வேறெது செய்யினும்—நெஞ்சிற்
கொண்ட கருத்தை விடுகிலேன்—அந்தப்

புல்லிய பாண்டவர் மேம்படக்—கண்டு
போற்றி உயிர்கொண்டு வாழ்கிலேன்;"

உன்னோடு வேண்டாம் வாது! பாண்டவருடன் வேண்டும் சூது! இதனால் நமக்கு வராது தீது!

"வாது நின்னொடு தொடுக்கிலேன்;—ஒரு
வார்த்தை மட்டுஞ் சொலக் கேட்பையால் ஒரு
தீது நமக்கு வராமலே—வெற்றி
சேர்வதற்கோர் வழியுண்டு, காண்!—களிச்
சூதுக்கு அவரை அழைத்தெல்லாம்—அதில்
தோற்றிடுமாறு புரியலாம்;—இதற்
கேதுந் தடைகள் சொல்லாமலே—எனது
எண்ணத்தை நீ கொளல் வேண்டுமால்"

கைகேயி மனத்தைக் கரைத்தாள் கூனி. திரிதராட்டிரன் மனதைக் கரைத்தான் சகுனி. விதிக்கு எதிராக ஒரு சதியால் கெட்டது திரிதராட்டிரன் மதியும் இணங்கி இதயம் ஒடிந்து சொல்கிறார்.

"விதி! விதி! விதி! மகனே!—இனி
வேறெது சொல்லுவன் அட மகனே!
கதியுறுங் காலனன்றோ—இந்தக்
கயமகனெனை நினைச்சார்ந்து விட்டான்?
கொதியுறும் உளம்வேண்டா;—நின்றன்
கொள்கையின்படி அவர்தமை அழைப்பேன்;
வதியுறுமனை செல்வாய்; என்று
வழியுங் கண்ணீரொடு விடைகொடுத்தான்"

திருதராட்டிரன் கணித்தபடி பாண்டவர்களிடம் தூது வந்த விதுரர் தீங்கு வருவதையும் தெரிவித்து விட்டார்.

"வந்து விருந்து களித்திட நும்மை
வாழ்த்தி அழைத்தனன் என்அருமக்காள்!
சந்து கண்டே அச் சகுனி சொற் கேட்டுத்
தன்மை இழந்த சுயோதன மூடன்

விந்தை பொருந்திய மண்டபத் தும்மை
வெய்ய புன் சூது களித்திடச் செய்யும்
மந்திரம் ஒன்றும் மனத்திடைக் கொண்டான்;
வன்மம் இதுவும் நுமக்கு அறிவித்தேன்''.

*கள்ளம் தெரிந்தும் கடமையைச் சொல்கிறார் தருமர்!*

''தந்தையும் வரப் பணித்தான்!—சிறு
தந்தையும் தூதுவந்து அதை உரைத்தான்;
சிந்தை ஒன்றினி இல்லை—எது
சேரினும் நலம் எனத் தெளிந்து விட்டேன்;
முந்தையச் சிலைராமன்—செய்த
முடிவினை நம்மவர் மறப்பதுவோ?
நொந்தது செயமாட்டோம்—பழ
நூலினுக்கு இணங்கிய நெறி செல்வோம்''

*விசயத்தை அறிந்து கொண்ட வீமன் விளாசுகிறான்:*

''போரிடச் செல்வ மடா! மகன்
புலைமையும் தந்தையின் புலமைகளும்
யாரிடம் அவிழ்க்கின்றார்—இதை
எத்தனை நாள் வரை பொறுத்திருப்போம்?''

*தம்பியர் வழி மொழிந்தனர்*

''வீமன் உரைத்தது போலவே—உளம்
வெம்பி நெடுவில் விசயனும்—அங்கு
காமனும் சாமனும் ஒப்பவே—நின்ற
காளை இளைஞர் இருவரும்—செய்ய
தாமரைக் கண்ணன் யுதிட்டிரன்—சொல்லை
தட்டிப் பணிவொடு பேசினார்,—தவ
கேமந் தவறலும் உண்டுகாண்,—நரர்
நெஞ்சம் கொதித்திடு போழ்திலே''

*அரச தேவ நீதி கூறுகிறார் தருமர்! கடமையைக் காத்திட வேண்டாமா?*

"யாவருக்கும் பொது வாயினும்—சிறப்
பென்பர் அரசர் குலத்திற்கே—உயர்
தேவரை யொப்ப முன்னோர் தமைத்—தங்கள்
சிந்தையிற் கொண்டு பணிகுதல்;—தந்தை
ஏவலை மைந்தர் புரிதற்கே—வில்
இராமன் கதையையும் காட்டினேன்;—புவிக்
காவலர் தம்மில் சிறந்த நீர்—இன்று
கர்மம் பிழைத்திடுவீர் கொலோ?"

*தட்டிச் சொன்ன தம்பியர்கள் தலைவணங்கித் தருமர் சொல்லுக்குப் பணிகின்றனர். 'நீயல்லவா விளக்கு! உன் ஒளியல்லவா எங்களுக்குத் துணை!'*

"என்று இனைய நீதி பல தருமராசன்
எடுத்து உரைப்ப இளைஞர்களுக்கும் தம்கை கூப்பிக்
குன்றினிலே ஏற்றி வைத்த விளக்கைப் போலக்
குவலயத்திற்கு அறம் காட்டத் தோன்றினாய் நீ"

*'அடிமைகள் ஆண்டவனை மீறலாமா? வெற்றி உனக்கே கடைசியில் எது நேரினும்.*

"வென்றி பெறும் திருவடியாய்! நினது சொல்லை
மீறி ஒரு செயல் உண்டோ? ஆண்டான் ஆணை
அன்றி அடியார் தமக்குக் கடன் வேறு உண்டோ?
ஐயனே! பாண்டவர் தம் ஆவி நீயே!"

*எங்களுடைய துன்பத்தையா எண்ணி மறுத்துரைத் தோம்; அப்படிச் செய்தது உம்மீதுள்ள அன்பால் தானே!*

"துன்பம் உறும் எமக்கு என்றே எண்ணி நின் வாய்ச்
சொல்லை மறுத்து உரைத்தோமோ? நின்பால் உள்ள
அன்புமிகையால் அன்றே திரு உள்ளத்தின்
ஆக்கினையை எதிர்த்து உரைத்தோம் அறிவில்லாமல்

*'உலகில் வருங்காலம் உண்டு ஞானியே! பொறுத் தருள்க!'*

**''மன்பதையினுளச் செயல்கள் தெளியக் காணும்**
**மன்னவனே! மற்றிது நீ அறியாதொன்றோ?**
**வன்பு மொழி பொறுத்தருள்வாய் வாழி! நின் சொல்**
**வழிச் செல்வோம் எனக் கூறி வணங்கிச்**
**சென்றார்!''**

அத்தினபுரம் நோக்கித் தருமரும் செல்வதற்கு ஆயத்த மாக, இப்படியும் நிகழலாமா தருமனுக்கு என்று நீங்கள் வியக்கின்றீர்கள்.

பதில் பகர்வார் பாரதி. சாலையிலே நிற்கும் காவல் காரன் கைப்படி வாகனங்கள் போகும், நிற்கும். அதே தான் விதி. வாழ்க்கைப் பாதையில் செல்வோரையும் திருப்புகிறது!

**''தீங்கதனைக் கருதாத தருமக் கோமான்**
**திரு நகர் விட்டகல்கின்றான் தீயோர் ஊர்க்கே!**
**நீங்கி அகன்றிடலாகும் தன்மை உண்டோ?**
**நெடுங்கரத்து விதி காட்டும் நெறியில்நின்றே?''**

இது மட்டுமா? இன்னும் அதிசயங்களைக் கேளுங்கள்!

**''நரிவகுத்த வலையினிலே தெரிந்து சிங்கம்**
**நழுவி விழும்; சிற்றெறும்பால் யானை சாகும்;**
**வரி வகுத்த உடல் புலியைப் புழுவுங் கொல்லும்;—**
**வருங்காலம் உணர்வோரும் மயங்கி நிற்பார்;**
**கிரி வகுத்த ஓடையிலே மிதந்து செல்லும்;**
**கீழ் மேலாம், மேல் கீழாம், கிழக்கு மேற்காம்;**
**புரி வகுத்த முந்நூலார் புலையர் தம்மைப்**
**போற்றிடுவார், விதி வகுத்த போழ்தி னன்றே!''**

சகுனியின் சவால். ''தருமா கேள்! உடல் பலத்தால் போரில் உயர்ந்தீர்கள். உங்கள் மதி பலத்தைச் சூதில் காட்டலாமே?'', சொல்லுகிறான் சகுனி.

''அறத் தோன்றல்! உன் வரவினைக் காத்துளர் காண்
மல்லுறு தடக்தோளார்—இந்த
மன்னவர்அனைவரும் கெடும் பொழுதா?
வில்லுறு போர்த் தொழிலால்—புவி
வென்று தம் குலத்தினை மேம்படுத்தீர்!
வல்லுறும் சூதெனும் போர்—தனில்
வலிமைகள் பார்க்குதும் வருதி என்றான்''.

தருமர் தடுத்துரைத்தார். ',சூதில் அறமும் இல்லை. ஆண்மையும் இல்லை; எங்கள் வாழ்வைக் கெடுக்கவே இது உனது வழி!''

தருமன் இங்கிவை சொல்வான்—ஐய!
சதியுறு சூதினுக்கெனை அழைத்தாய்;
பெருமையிங்கிதில் உண்டோ?—அறப்
பெற்றி உண்டோ? மறப் பீடுளதோ?
வருமம் நின் மனத் துடையாய்! எங்கள்
வாழ்வினை உகந்திலை எனல் அறிவேன்;
இருமையும் கெடுப்பது வாம்—இந்த
இழி தொழிலால் எமை அழித்தல் உற்றாய்!'

சகுனியின் சாதுர்யமான பதில்; 'சவால் விட்டால் ஏற்க வேண்டியது தான் மன்னர் கடமை. கோழையைப் போல் பதுங்கலாமா? இதை விட்டு வேறு சாத்திரமா பேசுவது!'

''சாத்திரம் பேசுகிறாய்—எனத்
தழல்படு விழியொடு சகுனி சொல்வான்!
கோத்திரக் குல மன்னர்—பிறர்
குறைபடத் தம்புகழ் கூறுவரோ?
காத்திறன் மிக உடையாய்! எனில்
நம்மவர் காத்திடும் பழ வழக்கை
மாத்திரம் மறந்து விட்டாய்;—மன்னர்
வல்லினுக்கு அழைத்திடில் மறுப்பதுண்டோ''

பொய்யின் குரலுக்குப் பலியானார் தருமர்; சூதாட்டம் ஆரம்பித்தது! மிடுக்கு நடை! ஆர்ப்பாட்டம்.

**''மாயச் சூதினுக்கே—ஐயன் மனம் இணங்கி விட்டான்!**
**தாயம் உருட்டலானார்;—அங்கே சகுனி ஆர்ப்பரித்தான்!''**

சபையில் இருந்த மேலோர்கள் கதி என்ன?

**''நேயம் உற்ற விதுரன்—போலே நெறியுளோர்கள் எல்லாம்**
**வாயை மூடிவிட்டார்—தங்கள் மதி மயங்கி விட்டார்!''**

சூது வெறி தருமரையும் பிடித்து விட்டது! சூதுக்குப் பலி கேட்கிறார் சகுனியை; 'உன்னிடம் உள்ளதா சொல்!'

**அந்த வேளை அதனில்—ஐவர்க் கதிபன் இஃது உரைப்பான்;**
**பந்தயங்கள் சொல்வாய்—சகுனி பரபரத்திடாதே!**

.'எனக்கு சமதையாக நீ என்ன வைத்திருக்கிறாய்? சூதாட'

**விந்தையான செல்வம்—கொண்ட, வேந்தரோடு நீதான்**
**வந்தெதிர்த்து விட்டாய்—எதிரே வைக்க நிதியம் உண்டோ?**

மாமனுக்குப் பரிந்து வந்தான், துரியோதனன். அவனுக்காக இதோ நான்; பெருமை பேசாதீர்—மேலே நடக்கட்டும்;

**தருமன்வார்த்தை கேட்டே,—துரியோதன னெழுந்து**
**சொல்வான்**
**''அருமையான செல்வம்—என்பால் அளவிலாதுண்டு**
**ஒரு மடங்கு வைத்தால்—எதிரே ஒன்பதாக வைப்பேன்;**
**பெருமை சொல்ல வேண்டா—ஐயா பின்னடக்கு கென்றான்**

தருமர் கேட்கிறார் ஆச்சரியப்பட்டு, 'இது என்ன நியாயம் ஒருவன் ஆடுகிறதாம் சூது; அதற்கு இன்னொருவன் வைப்பதாம் பணயம்!'

**ஒருவன் ஆடப் பணயம்—வேறே ஒருவன் வைப்பதுண்டோ?**
**தருமமாகுமோடா?—சொல்வாய் தம்பி இந்த வார்த்தை!**

திருப்பிக் கொடுக்கிறான் துரியோதனன்.

**வருமம் இல்லை ஐயா! இங்கு மாமன் ஆடப் பணயம்**
**மருகன் வைக் கொணாதோ? இதில் வந்த குற்றம் ஏதோ?**

என்ன நடந்தது? பொன், பொருள், போய் மாடு, ஆடு என்று வந்து விட்டது பணயம்.

கிண்டியிலே கைக்கடியாரம் போன்றவை விற்று ஆடுவது போல!

**மாடிழந்து விட்டான்—தருமன் மந்தை மந்தையாக!**
**ஆடிழந்து விட்டான்—தருமன் ஆளிழந்து விட்டான்**

பரவாயில்லை; நாடு இருக்கிறதே என்று ஞாபகம் ஊட்டுகிறான் சகுனி.

**பீடிழந்த சகுனி அங்கு பின்னுஞ் சொல்லுகின்றான்.**
**நாடிழக்க வில்லை—தருமா! நாட்டைவைத்திடென்றான்.**

விலக்க முயன்றான் விதுரன், வெகுண்டு வைதான் துரியோதனன்: "உன் வயிறு வளர்வது எங்களால்—ஆனால் உன் நெஞ்சில் வளர்வது அவர் பால் அன்பு!"

**ஐவருக்கு நெஞ்சும்—எங்கள் அரண்மனைக்கு வயிறும்**
**தெய்வம் அன்று உனக்கே, விதுரா செய்து விட்டதேயோ!**

கதைக்கிறாயே, கோடரிக்காம்பே,

**மெய் வகுப்பவன் போல், பொதுவாம் விதி உணர்ந்தவன் போல்**
**ஐவர் பக்கம் நின்றே—எங்கள் அழிவு தேடுகின்றாய்!**

சூதாட்டத்திலும் விதிகள் உண்டு, அந்த விதிகள் படிதானே ஆடுகிறோம்.

மன்னர் சூழ்ந்த சபையில்—எங்கள் மாற்றலர்களோடு
முன்னர் நாங்கள் பணயம்—வைத்தே முறையில்
வெல்லுகின்றோம்

இதில் என்ன குற்றம்? என்ன மாயாஜால வித்தையா காட்டுகிறோம்!

என்ன குற்றம் கண்டாய்?—தருமம் யார்க்
குரைக்க வந்தாய்
கன்னம் வைக்கிறோமா? பல்லைக் காட்டி
ஏய்க்கிறோமா?

விதுரன் விடை என்ன?

'உன் அழிவைத் தடுக்கவே சூதைத் தடுக்கின்றேன்; ஆனால் விதி என்னை வென்று விட்டான்.'

நன்றாகும் நெறியறியா மன்னன், அங்கு
நான்கு திசை அரசர் சபை நடுவே, தன்னைக்
கொன்றாலும் ஒப்பாக வடுச் சொற் கூறிக்
குமைவதனில் அணுவளவுங் குழப்ப மெய்தான்;
'சென்றாலும் இருந்தாலும் இனி என்னேடா?
செய்கைநெறி அறியாத சிறியாய்! நின்னைப்
பொன்றாதவழி செய்ய முயன்று பார்த்தேன்,
பொல்லாத விதி என்னைப் புறங் கண்டானால்;
''சொல்லுக சொல்லிற் பயனுடைய; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்''

விதுரன் வாயை மூடிக் கொண்டான்: கலிபுருஷன் களித்தான்! தேவர்கள் ஆர்த்தனர்! அதர்மம் ஒழியுமோ!

விதி வழி நன்குணர்ந்திடினும் பேதையேன்யான்
வெள்ளை மனம் உடைமையினால் மகனே நின்றன்
சதிவழியைத் தடுத்து உரைகள் சொல்லப் போந்தேன்
சரி சரி! இங் கேதுரைத்தும் பயனொன்றில்லை

மதிவழியே செல்லுவென விதுரன் கூறி
வாய் மூடித்தலைகுனிந்தே இருக்கை கொண்டான்.
பதிவுறுவோம் புவியில் எனக் கலி மகிழ்ந்தான்:
பாரதப் போர் வருமென்று தேவர் ஆர்த்தார்!

*சூது தொடர்ந்தது! நாடு மூழ்கியது.*

காயுருட்டலானார்—சூதுக் களி தொடங்கலானார்.
மாய முள்ள சகுனி—பின்னும் வார்த்தை
சொல்லுகின்றான்,
நீ அழித்த தெல்லாம்—பின்னும் நின்னிடத்து மீளும்!
ஓய்வடைந் திடாதே! தருமா! ஊக்க மெய்து' கென்றான்

*எப்படி நடந்தது காரியம் மேலே!*

கோயிற் பூசை செய்வோர்—சிலையைக்
கொண்டு விற்றல் போலும்
வாயில் காத்து நிற்போன்—வீட்டை வைத்திழத்தல்
போலும்

*பாரதியாரின் கோபம், இகழ்ச்சி, மற்றும் அந்தத் தேச பக்தரின் திறனாய்வு.*

ஆயிரங்களான—நீதி அவை உணர்ந்த தருமன்
தேயம் வைத்திழந்தான் சிச்சீ! சிறியர்
செய்கை செய்தான்

*தம்பியரை வைத்திழந்தான்; தன்னையும் வைத்திழந் தான் தருமன். காரணம் என்ன? தன்னை மறந்தவன் ஆதலால் 'தன்னைத்தான் பணயம் என வைத்தனன். பின்பு முன்னைக் கதையன்றி வேறுண்டோ? மோசச் சகுனி கெலித்தனன்.*

*செயிப்பதற்கு இன்னும் ஓர்கெடுவு. சகுனி தரும் நம்பிக்கை! பாஞ்சாலி பாக்கியமாக உள்ளாள்; அவளைப் பணயம் வைத்தால் பெறலாமே அனைத்தையும்.*

"இன்னும் பணயம் வைத்தாடுவோம்—வெற்றி
இன்னும் இவர் பெறலாகும் காண்!
பொன்னும் குடிகளும் தேசமும்—பெற்றுப்
பொற்பொடு போதற்கிட முண்டாம்?—ஒளி
மின்னும் அமுதமும் போன்றவள்—இவர்
மேவிடு தேவியை வைத்திட்டால்—அவன்
துன்னும் அதிட்ட முடையவன்—இவர்
தோற்றது அனைத்தையும் மீட்டலாம்,"

பாஞ்சாலியின் உயர்வு: பாஞ்சால நாடே தவம் பெற்று உதித்தவள். உயிரைவிட உயர்ந்தவள். உயிர் மட்டுமல்ல, அந்த உயிரினும் சிரஞ்சீவியாகும் அமுதமே!

பாவியர் சபை தனிலே—புகழ்
பாஞ்சால நாட்டினர், தவப்பயனை
ஆவியில் இனியவளை—உயிர்த்து
அணி சுமந்து உலவிடு செய் அமுதை,

சித்திரம் தான் அவள் தோற்ற அழகிலே; கற்பனைக்கே ஒரு இலக்கு அவள்; எங்கிருப்பினும் சுபமாக ஆட்சி செய்பவள்; உலகத்திலே உலவும் இலக்குமிதான்; தேடினும் கிடைக்கா திரவியமே அவள்.

ஓவியம் நிகர்த்தவளை—அருள்
ஒளியினைக் கற்பனைக்குயிர் அதனை
தேவியை நிலத்திருவை—எங்குத்
தேடினாலும் கிடைப்பருந் திரவியத்தை

உலகும், தேவர் உலகும் போற்றும் வடிவுடையவள்; கனிவிலும் கட்டழகுடன் விளங்குபவள் அவளைத் தீயவர் சபையிலே பணய மென வைத்தான்.

படி மிசை இசையுறவே—நடை
பயின்றிடும் தெய்விக மலர்க் கொடியைக்
கடிகமழ் மின்னுருவை—ஒரு
கனியைக் கனவினைக் காதலினை!

வடிவுறு பேரழகை,—இன்ப
    வளத்தினைச் சூதினில் பணயம் என்றே
கொடியவர் அவைக் களத்தில்—அற
    கோமகன் வைத்திடல் குறித்து விட்டான்.

எப்படி இருக்கிறது கதை;யாக உணவை நாய்க்கிட்ட கதைதான்; பொன் மாளிகை கட்டிப் பேயினைக் குடி வைத்த கதை தான்; குழந்தையை விற்றுப் பொன் சேர்த்து பூஷணம் ஆக்கி ஆந்தைக் கிட்டது போல; உயரிய திரௌபதியை, கீழான கௌரவர்கட்கு அடிமையாக் கினான்.

வேள்விப் பொருளினையே—புலை நாயின் முன்
    மென்றிட வைப்பவர் போல்
நீள் விட்டப் பொன் மாளிகை கட்டிப் பேயினை
    சேர்த்து குடி யேற்றல் போல்,
ஆள்விற்றுப் பொன் வாங்கியே—செய்த பூணை ஓர்,
    ஆந்தைக்குப் பூட்டுதல் போல்
கேள்விக் கொருவர் இல்லை. உயிர்த் தேவியைக்
    கீழ் மக்கட் காளாக்கினான்.

இன்னும் எப்படி இருக்கிறது கதை. செருப்புத் தோலுக்காகச் செல்வக் குழந்தைத் தோலை உரிப்பது போல; சூதில் பணயமாக திரௌபதியா? 'சரி' ஆடினார்கள். சகுனி சொல் கேட்டது. சொக்கட்டான்;

செருப்புக்குத் தோல் வேண்டியே—இங்குக் கொல்வரோ
    செல்வக் குழந்தையினை
விருப்புற்ற சூதினுக்கே—ஒத்த பந்தயம்
    மெய்த் தவப் பாஞ்சாலியோ!
ஒருப்பட்டுப் போன வுடன்—கெட்ட மாமனும்
    உள்ளியத் தாயங் கொண்டே
இருப்பகடைபோ டென்றான்—பொய்ம்மைக் காய்களும்
    இருப் பகடை போட்டனவே

துரியோதனன் கூட்டம் வெற்றியின் சிகரத்தை அடைந்தது; வெறியின் சிகரத்தையும் அடைந்தது.

**திக்கும் குலுங்கிடவே—எழுந்தாடுமாம்!**
**தீயவர் கூட்டம் எல்லாம்**
**தக்குத் தக்கென்றே அவர்—குதித்தாடுவார்**
**தம்மிரு தோள் கொட்டுவார்.**

வேணும். நன்றாக வேணும் இந்தத் தருமனுக்கு: ஹஹ்ஹா! துரியோதனா! எம்மைக் கட்டிக் கொள்! களிப்போம்!

**ஒக்குக் தருமனுக்கே—இஃதென்பர் ஓ! வென்றிரைந்திடுவார்**
**கக்கக் கென்றே நகைப்பார்—'துரியோதனா கட்டிக்**
**கொள் எம்மை என்பார்!**

அடடா! நம் மாமனை மறந்து விட்டோமே! அவனை அல்லவா நம் தலை மேல் தூக்கிக் கொண்டாட வேணும் தூக்குங்கள் அவனை; தொங்க விடுங்கள் அவன் கழுத்தில் மாலைகளை! ''மாமனைத் தூக்காய்! என்பார். அந்த மாமன் மேல் மாலை பல வீசுவார்''.

இத்தனை ஜயித்தோமே! அவைகள் ஒரு பொருளா! காமரசக் கனியான இவளைக் கைவசம் செயித்தது தானே உசத்தி! இதைச் செய்து கொடுத்த நம் மாமன் சாட்சாத் தெய்வம் தான்.

**சேமத் திரவியங்கள்—பல நாடுகள் சேர்ந்ததில்**
**ஒன்றுமில்லை!**
**காமத் திரவியமாம்—இந்தப் பெண்ணையும்**
**கைவசமாகச் செய்தான்**
**மாமனொர் தெய்வமென்பார்—துரியோதனன்**
**வாழ்கவென்று ஆர்த்திடுவார்**

துரியோதனன் 'வாழ்க' என்று ஆர்த்திடுவார்! கூட்டம் குதித்துக் கிடக்கட்டும்; துரியோதனன் மாமனைத் தோத்

திரம் செய்வதைப் பார்க்கலாமே! நம்மைப் பார்த்துச் சிரித்தவளை நாம் பார்த்துச் சிரிக்கச் செய்தானே மாமன்

இன்று துரியோதனன்—அந்த மாமனை
நெஞ்சோடு சேரக் கட்டி
என் துயர் தீர்த்தாயடா—உயிர் மாமனே!
ஏளனம் தீர்த்து விட்டாய்!
அன்று நகைத் தாளடா—உயிர் மாமனே!
அவளை என் ஆளாக்கினாய்!
என்றும் மறவேனடா—உயிர் மாமனே!
என்ன கைம் மாறு செய்வேன்!

ஆசை தீர்த்தாய்! ஆவி காத்தாய்! பூசைதான் போட வேணும். கூடப் பொங்கலும் தான் இடவேணும்!

"ஆசை தணித்தாயடா—உயிர் மாமனே! ஆவியைக்
காத்தாயடா
பூசை புரிவோமடா—உயிர் மாமனே! பொங்கல்
உனக்கிடுவோம்!"

ஒழிந்தார்கள் அவர்கள்! வாழ்ந்தோம் நாம்! ஐயோ! பேச முடியவில்லையே! பேரின்பம் தலைக் கேறுதே!

"நாசம் அடைந்ததடா! நெடுநாள் பகை, நாமினி
வாழ்ந்தோமடா!
பேசவுந் தோன்றுதில்லை உயிர் மாமனே!
பேரின்பம் கூட்டி விட்டாய்"

குதிக்கின்றான் குன்று போல. கொட்டுகிறான் தோளை!

"என்று பல சொல்லுவான்—துரியோதனன் எண்ணி
எண்ணிக் குதிப்பான்
குன்று குதிப்பது போல்—துரியோதனன்
கொட்டிக் குதித்தாடுவான்"

தலைபுரியாமல் ஆடினது—அவன் மட்டுமா! அவன் முழுக் கோஷ்டியே! அதைச் சொல்லத்தான் முடியுமா.

''மன்று குழப்பம் உற்றே—அவர் யாவரும் வகை தொகை
ஒன்றும் இன்றி
அன்று புரிந்த தெல்லாம்—என்றன் பாட்டிலே ஆக்கல்
எளி தாகுமோ?''

பாகன் தூது போய்க் கூப்பிட்டான்; பணிந்து வர மறுத்தாள் பாஞ்சாலி. மனம் கொதித்தது; சினம் பொங்க கர்ஜிக்கிறான் துரியோதனன்.

உள்ளம் துடித்துச் சுயோதனன்—சினம்
ஓங்கி வெறி கொண்டு சொல்லுவான்—அட
பிள்ளைக்கதைகள் விரிக்கின்றாய் என்றன்
பெற்றி அறிந்திலை போலும் நீ!—அந்தக்

கள்ளியின் கல்விகளா தேவை அவள் கிளிக் குரலையல்லவா கேட்க விரும்புகிறேன்.

''கள்ளக் கரிய விழியினாள், அவன்
கல்விகள் கொண்டிங்கு வந்தனை!—அவள்
கிள்ளை மொழியின் நலத்தையே—இங்கு
கேட்க விரும்பும் என் உள்ளமே!''

எல்லாக் கேள்வியும் கேட்கலாமே என்னை! பதில் சொல்லு கிறேன் நான்! முதலில் சபைக்கு வரட்டுமே அவள்.

''வேண்டிய கேள்விகள் கேட்கலாம்—சொல்ல
வேண்டிய வார்த்தைகள் சொல்லலாம்—மன்னர்
நீண்ட பெருஞ்சபை தனிலே அவள்
நேரிடவே வந்த பின்பு தான்!''

கூண்டை விட்டு வராத கிளியா அவள்?—ஐவருடன் கூடிப் பறந்தவள் தானே! கோபம் வந்தால் நான் நானல்ல! முதலில் கொண்டுவா அவளை!

''கூண்டில் பறவையும் அல்லளே—ஐவர்
கூட்டு மனைவிக்கு நாணமோ!—சினம்
மூண்டு கடுஞ்செயல் செய்யுமுன்—அந்த

ராஜா சொன்னால்—எதிர்த்தா சொல்வது! சின்னா பின்னம் செய்கிறேன் பார் உன்னை! கொண்டுவா அவளைச் சீக்கிரம்!

மொய் குழலாளை இங்கிட்டுவா!''
''மன்னன் அழைத்தனன் என்று நீ—சொல்ல
மாறி அவள் ஒன்று சொல்வதோ?—உன்னைச்
சின்னமுறச் செய்குவேனடா!—கணஞ்
சென்றவளைக் கொணர்வாய் என்றான்!''

பாவம் அந்தப் பாகன். போய்க் கூப்பிட்டான்! தொடுத்தாளே எதிர்கணை திரௌபதி!

''சொன்ன மொழியினைப் பாகன் போய்—அந்தத்
தோகை முன் கூறி வணங்கினன்—அவள்
இன்னல் விளைந்திவை கூறுவாள்—தம்பி
என்றனை வீணில் அழைப்பதேன்''

திரௌபதி எழுப்புகிறாள், மூலாதாரமான ஒரு ஆட்சேபனையை! 'யார் யாரைச் சூதில் தோற்றது? என் கணவர்கள் தம்மைத் தோற்ற பிறகு அடிமைகள் ஆயினர். துரியோதனனுடைய அடிமைகள், என்னை எப்படி துரியோதனனின் அடிமையாக்கலாம்?

''நாயகர் தாம் தம்மைத் தோற்றபின்—என்னை
நல்கும் உரிமை அவர்க்கில்லை—புலைத்

நான் யார்? அவர்கள் யார்? அவர்கள் அடிமைகள்! தங்கள் சுதந்திரத்தை இழந்தவர்கள். நான் அரச குமாரி! அடிமைகட்கு மனைவி உண்டோ? அடிமைக்கும் அடிமை உண்டோ?

''தாயத்திலே விலைப் பட்டபின் என்ன
சாத்திரத்தால் எனைத் தோற்றிட்டார்?''
''தாயத்திலே விலைப் பட்டவர்—புவி
தாங்கும் துருபதன் கன்னி நான்,—நிலை

சாயப்புலைத் தொண்டு சார்ந்திட்டால்—பின்பு
தாரம் உடைமை அவர்க்குண்டோ?''

அந்தமான் கைதி, ஜெயில் கைதி இல்லாளையும் அந்தமான்—ஜெயிலுக்குக் கூட்டிப் போய் அவளையும் தண்டனைக்குட்படுத்தலாமா? இந்த ஆணை, அரச சபையிலா பிறந்தது? தர்மம் தெரிந்தவர்கள் அங்கு இல்லையா? மன்னர்கள் திறமை சாகுமுன் சட்ட திட்டமும் செத்து விடுமோ?

''கௌரவர் வேந்தர் சபை தன்னில்—அறம்
கொண்டவர் யாவரும் இல்லையோ?—மன்னர்
சௌரியம் வீழ்ந்திடும் முன்னரே—அங்கு
சாத்திரம் செத்துக் கிடக்குமோ?''

இதை வந்து சொன்னான் பாகன்; 'நொந்து போன மனத்துடன் தீயில் வெந்து போனாலும் சரி; இவ்விடைக்குப் பதல் தந்தாக வேணும் துரியோதனன்!'

''என்றந்தப் பாண்டவர் தேவியும்—சொல்ல
என் செய்வன் ஏழையப்பாகனே—என்னைக்
கொன்று விட்டாலும் பெரிதில்லை—இவன்
கூறும் வினாவிற்கு அவர் விடை—தரின்
அன்றி இவளை மறுமுறை—வந்து
அழைத்திட நான்அங்கு இசைந்திடேன்'—என
நன்று மனத்திடைக் கொண்டவன்—சபை
நண்ணி நிகழ்ந்தது கூறினான்!''

அப்படியா சமாச்சாரம்! என்றான், கொடி பாம்பைத் தன் கொடியிலே குறிக் கோளாக வைத்த அக்கொடியவன்; வீமனிடம் பிறகு மாட்டிக் கொள்வோம் என இந்த வேலையாள் அஞ்சுகிறான். பாகன்தானே! எனப்பாஞ்சாலியும் அலட்சியம் செய்கிறாள்.

''பாகன் உரைத்தது கேட்டனன்—பெரும்
பாம்புக் கொடியவன் சொல்கின்றான். அவன்

பாகன் அழைக்க வருகிலள்;—இந்தப்
பையலும் வீமனை அஞ்சியே—பல
வாகத் திகைப்புற்று நின்றனன்!—இவன்
அச்சத்தைப் பின்பு குறைக்கிறேன்"

இதற்கு வழி என்ன? ஒரு அஞ்சா நெஞ்சனையே அனுப்ப வேணும். இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆராய்ந்து அதனை அவன் கண்விடல்! தம்பி துச்சாதனா! போ. கொண்டுவா"

"தம்பி போகக் கடவை இப்போது அங்கே—இங்கு அப்
பொற்றொடியோடும் வருக நீ."

தேன் வந்து பாய்ந்தது காதினிலே துச்சாதனனுக்கு. ஆள் எப்படியா? ஒரே வார்த்தை. அண்ணனையே வெல்வான் தீமையிலே.

இவ்வுரை கேட்ட துச்சாதனன்—அண்ணன்
இச்சையை மெச்சி எழுந்தனன்—இவன்
செவ்வி சிறிது புகலுவோம்—இவன்
தீமையில் அண்ணனை வென்றவன்.

இவன் வைபவத்தைச் சற்றும் சாதித்தருள வேணும். மூளை காலி. கள்ளும் கறியும் இவனுக்கு நன்று. பகைவர்களும் அஞ்சுவார்கள். நண்பர்கட்கும் பேய்!" கல்வி.

"எவ்வளவேனும் இளைதவன்—கள்ளும்
ஊரக் கறியும் விரும்புவோன்—பிற
தெவ்வர் இவன் தனை அஞ்சுவர்—நண்பரைச்
சேர்ந்தவர் பேயென்று ஒதுங்குவார்;"

இன்னும் என்னவோ இவன் பிரபாவம்? நல்லதற்கும் பொல்லவன்—பொல்லாததற்கு நல்லவன்—அவ்வளவுதான் புத்தி விவேகம் இல்லாதவன்.

புலி

போல உடல் வலி கொண்டவன்—மத
தந்தி வலியும் செருக்கினான்—கள்ளில்

சார்பின்றியே வெறி சான்றவன்—அவ
சக்தி வழி பற்றி நின்றவன்—சிவ
சக்தி நெறி உணராதவன்—இன்பம்
நத்தி மறங்கள் இழைப்பவன்—என்றும்
நல்லவர் கேண்மை விலக்கினோன்!''

பாய்ந்து வந்தான்—பாவத்தின் உருவிலே; பதுங்கிக் கிடந்தாள்—ரோகத்தின் உருவிலே.

''பாண்டவர் தேவி இருந்த தோர்—மணிப்
பைங்கதிர் மாளிகை சார்ந்தனன்—அங்கு
நீண்ட துயரிற் குலைந்து போய்—நின்ற
நேரிழை மாதினைக் கண்டனன்—அவன்
நீண்டலை எண்ணி ஒதுங்கினாள்.''
வெடித்தும் உரைத்தான்—அவன், இடித்துரைத்தாள் இவன்!''—அடி
செல்வதெங்கே, என்றிரைந்திட்டான்—இவன்
ஆண்டகை யற்ற புலையனென்றவள்—
அச்ச மிலாது எதிர் நோக்கியே''

திரௌபதியின் எச்சரிக்கை! உலகில் தேவர்கள் பாண்டவர்கள். அவர் பத்னி யான். துருபதனின் திருமகள். என்னைக் கண்டால் இதை மறவார்கள் யாரும்!

''தேவர் புவி மிசைப்பாண்டவர்—அவர்
தேவி, துருபதன் கன்னி நான்—இதை
யாவரும் இற்றை வரையிலும்—தம்பி
என் முன் மறந்தவர் இல்லை காண்! தம்பி''

வந்த சேதி சொல்க, செல்க! தம்பி!

'காவல் இழந்த மதி கொண்டாய்—இங்குக்
கட்டுத் தவறி மொழிகிறாய்—தம்பி
நீ வந்த செய்தி விரைவிலே—சொல்லி
நீங்குக என்றனள் பெண்கொடி''

சொல்கிறேன். சொல்கிறேன். கேள். பாண்டவர் தேவி பாஞ்சாலத்தான் மகள். அதெல்லாம் பழங்கதை புதிய திருப்பம் கதை—இன்று எங்கள் அண்ணனுக்கு அடிமைச்சி நீ.

**"பாண்டவர் தேவியும் அல்லை நீ—புகழ்ப்**
**பாஞ்சாலத்தான் மகள் அல்லை நீ—புவி**
**ஆண்டருள் வேந்தர் தலைவனாம்—எங்கள்**
**அண்ணனுக்கே அடிமைச்சி நீ."**

எப்படியா? பட்டப்பகலிலே பகிரங்கமாகப் பலரும் அறிய பகடையிலே தோற்றான் உன்னைப் பாண்டவரின் தலைவன்.

**"நீண்ட சபைதனில் சூதிலே—எங்கள்**
**நேசச் சகுனியோ டாடியங்கு—உன்னைத்**
**தூண்டும் பணயம் என வைத்தான்—இன்று**
**தோற்றுவிட்டான் தருமேந்திரன்!"**

உன் நிலைமை இன்று என்ன தெரியுமா? வெல்லப் பட்ட பணயம்: வெற்றிவீரன் அழைக்கிறான்! விரைந் தோடிவா?

ஆடி வெல்லப் பட்ட தாதி நீ! உன்னை ஆள்பவன் அண்ணன் துரியோதனன்.

**"கூடியிருக்கும் சபையிலே—மன்னர் உன்னைக்**
**கூட்டிவருகென்று மன்னவன்—சொல்ல**
**ஓடி வந்தேன் இது செய்திகாண்—இனி**
**ஒன்றுஞ் சொலாது என்னோடு எழுவாய்"**

கண்ணீர் விட்டுச் சொல்கிறாள் தன் கதியை; 'ஆடை மாற்ற முடியாத நிலை ஆடவர் முன் வரலாமா?' துச்சாதனன் கேட்க, இதனைச் சொல்லினாள் பாஞ்சாலி.

**"அச்சா—கேள்! மாத விலக்கு ஆதலால் ஓர் ஆடை**
**தன்னில் இருக்கின்றேன். தார் வேந்தன்**
**பொற்சபை முன்**
**என்னை அழைத்தல் இயல்பில்லை."**

*அது மட்டுமா. அண்ணன் மனைவியை வைத்து ஆடு கிறதாவது. அவளை அலக்கழிக்கிறதாவது. இதுவா அரச பரம்பரைக்கு அழகு! அனைத்தையும் உன் அண்ணனிடம் சொல்.*

**சோதரர் தம் தேவி தன்னைச் சூதில் வசமாக்கி,**
**ஆதரவு நீக்கி, அருமை குலைத்திடுதல்**
**மன்னர் குலத்து மரபோ காண்? அண்ணன்பால்**
**என்னிலைமை கூறிடுவாய்! ஏகுக நீ! என்றிட்டான்.''**

*ஊம்! நானா. இவ்விடம் விட்டுப் போகிறது. நீ தான் வருகிறது சபைக்கு அல்லது நான் உன்னை இழுத்துப் போகிறது!*

**''கக் கக் கவென்று கனைத்தே பெருமூடன்**
**பக்கத்தில் வந்தே அப் பாஞ்சாலிக் கூந்தலினைக்**
**கையினாற் பற்றி கர கர எனத் தான் இழுத்தான்!**
**'ஐயகோ' என்றே அலறி உணர்வற்றுப்**
**பாண்டவர் தந்தேவியவள் பாதியுயிர் கொண்டுவர**
**நீண்டகருங்குழலை நீசன் கரம்பற்றி**
**முன்னிழுத்துச் சென்றான்''**

*சென்றானே இழுத்து அவன்! தன்மானமுள்ள சென மங்கள் சிறி விலக்கினரா? செய்ததென்ன?*

**வழி நெடுக மொய்த்தவராய்**
**'என்னகொடுமை இது' என்று பார்த்திருந்தார்.**
**ஊரவர் தம் கீழ்மை உரைக்கும் தரமாமோ!**
**வீரமிலாநாய்கள், விலங்காம் இளவரசன்,**
**தன்னை மிதித்துத் தராதலத்தில் போக்கியே**
**பொன்னையவள் அந்தப்புரத்திற் சேர்க்காமல்**
**நெட்டை மரங்கள் எனநின்று புலம்பினார்.**

*இழுத்துப் போய் சபையில் நிறுத்தினான் சண்டாளன்; பெண் அவளும் அலறினாள்.*

**பேரழகு கொண்ட பெருந் தவத்து நாயகியைச்**
**சீர் அழியக் கூந்தல் சிதையக் கவர்ந்து போய்க்**
**கேடுற்ற மன்னர் அறம் கெட்ட சபைதனிலே**
**கூடுநரும் அங்கே போய்க் 'கோ' என்று அலறினாள்,**

*இதோ! சபையிலே நடப்பதை அந்தச் சண்டாளன்! சதக் கனத்தினரைப் பார்க்க முடியுமா கண்கொண்டு! பாரதியின் கண்ணாலே பாருங்கள்!*

**ஆடை குலை வுற்று நிற்கிறாள்!—அவள்**
**ஆ என் றழுது துடிக்கிறாள்—வெறும்**
**மாடு நிகர்த்த துச்சாதனன்—அவள்**
**மைக்குழல் பற்றி இழுக்கிறான்.**

*பீமனும் பார்த்தான் இதை! வெள்ளம் கரையை உடைத்துக்கொண்டு பாய ஆரம்பித்து விட்டது. உள்ளம் கவர்ந்து எழுந்து ஓங்கும்—சின வெள்ளம் தடுத்தல் அரிதாகி விட்டது. பீமன் கண்களுக்கு இந்தக் காட்சி தோன்றும் விதம்! இந்தப் பீடையை நோக்கினன், வீமனும்!—கரை மீறி எழுந்தது வெஞ்சினம்!*

*துடிப்பு உடனே உதயமாகிறது! உதித்த சீற்றம் தருமனை நோக்கிப் பாய்கிறது. கோபவெள்ளம் துச்சாதனனை நோக்கிப் பாய்ந்தது போல துக்கம் ஒலி வடிவு பெறுகிறது!*

**" கூடித் தருமனைநோக்கியே! அவன்**
**கூறிய வார்த்தைகள் கேட்டிரோ!"**

*கோபமும் துயரமும் கூடிய குரலிலே குமுறிக் கொட்டு கிறான், வீமன்! சூதாட்டக் கும்பல்களுக்குப் பணிப் பெண்கள் உண்டு. ஆனால், அதில் பணயமாகக் கேவலம் அந்தப் பணிப் பெண்களைக் கூட வைத்து ஆட மாட் டார்கள்—எல்லை மீற மாட்டார்கள்.*

**'சூதர் மனைகளிலே—அண்ணே! தொண்டு மகளிர் உண்டு,**
**'சூதிற் பணயம் என்றே—அங்கோர் தொண்டச்சி**
**போவதில்லை."**

பணயமாக நமது திரௌபதியை வைத்தாயே அண்ணா! அவளை என்னவென்று கருதி வைத்தாய். பணிப் பெண்ணுக்கும் கீழாக அல்லவா கருதி விட்டாய்.

**''ஏது கருதி வைத்தாய்! அண்ணே யாரைப் பணயம்**
**வைத்தாய்?''**

அவள்—அன்னையர் குலத்து ஒரு விளக்கு. அன்புக்கு ஒரு வடிவம்.

**''மாதர் குலவிளக்கை. அன்பே வாய்ந்த வடி வழகை!''**

பாராளும் வேந்தர் தம் வேந்தன் வெற்றி வேங்கைப் பாஞ்சாலன்—மகளை—என்ன செய்து விட்டாய்!

**பூமி அரசர் எல்லாம்—கண்டே போற்ற விளங்குகிறாள்.**
**சாமி புகழினுக்கே! வெம்போர்ச் சண்டனப் பாஞ்சாலன்**
**அவன் சுடர் மகளை—அண்ணே! ஆடியிழந்து விட்டாய்?**

இதன் விளைவு என்ன? தவறு செய்து விட்டாய்- அண்ணே! தருமம் கொன்று விட்டாய்.

மாயா ஜாலத்திருடு அல்லது சூதில் கிடைத்திருந்தால் சூதில் தொலைத்திருக்கலாம்.

**சோரத்திற் கொண்டதில்லை அண்ணே!**
**சூதிற் படைத்ததில்லை!**
**வீரத்தினால் படைத்தோம்—வெம்போர்**
**வெற்றியினால் படைத்தோம்!**

அவள் நம் வீட்டில் புகுந்த அதிர்ஷ்டம் ராச சூய யாகம் செய்து மிக உயரிய சக்ரவர்த்தி என்று பட்டம் சூடினோம்; இமாலய உச்சிவரைப் போன நம் புகழ் சாக்கடை மட்டம் அடைந்து விட்டதே!

**சக்கரவர்த்தி என்றே—மேலாம் தன்மை**
**படைத்திருந்தோம்**
**பொக்கென ஓர் கணத்தே! எல்லாம் போகத்**
**தொலைத்து விட்டாய்!**

அவனியிலே நமக்கு ஆக்கமும் அந்தஸ்தும்; அந்த அரசையே தொலைத்தாய்—சரி போகட்டும்—அரசர்களான நம்மையே அடிமைகளாக்கினாய் பொறுத்தோம்,

"நாட்டை எல்லாம் தொலைத்தாய்!—அண்ணே
நாங்கள் பொறுத்திருந்தோம்.
மீட்டும் எமை அடிமை செய்தாய்
மேலும் பொறுத்திருந்தோம்"

அத்து மீறிப் போதை உன் அறியாமையால் இந்நிலையடைந்தோம். திரௌபதியைச் சொக்கட்டானுக்கு. பலி கொடுத்தாயே!

"துருபதன் மகளைத் திட்டத்துய்மன் உடன் பிறப்பை
இரு பகடை என்றாய்."

பலியாக்கினது தான் பலி யாக்கினாய்! யாருக்குப் பலியாக்கினாய்! கேவலம் இந்த அற்பர்களான துரியோதனக் கூட்டத்திற்கா? (ஐயோ! இவர்க் கடிமை என்றாய்.)

இந்தக் குற்றத்திற்கு—மகாபாவத்திற்குத் தண்டனையும் அளிக்கிறேன். தம்பி சகதேவா—தீப்பந்தம் கொண்டு வா! திரௌபதியாம் நம் கதிர் போயிற்று: நம் அண்ணன் கையும் போகட்டும்.

"இது பொறுப்பதில்லை! தம்பி! எரி தழல் கொண்டு வா.
கதிரை வைத்திழந்தான்—அண்ணன் கையை
எரித்திடுவோம்!"

இது தம்முடைய வாக்குதான்! இதை வெளியிட்டதோ பீமனுடைய நாக்கு! புதுமைக் கவி பாரதியின் நாவினாற் சுட்டவடு! ஆனால் இது தெய்வக் கதை. எனவே தெய்வம் பேசுகிறது: அர்ச்சுனனை மையமாக வைத்து, வீமனின் கோபக் கூச்சலைத் தாக்குகின்றன. இல்லை! தணிக்கின்றன, அர்ச்சுனனது சொல்லம்புகள்—சாந்தக் கணைகளை சரமாரியாகப் பொழிகின்றான்,

"என வீமன் சகதேவன் இடத்தே சொன்னான்.
இதைக் கேட்டு வில் விசயன் எதிர்த்துச்சொல்வான்"
"மனமாரச் சொன்னாயோ! வீமா! என்ன
வார்த்தை சொன்னாய்! எங்கு சொன்னாய்
யாவர் முன்னே?"

துருபதன் உதிரத்தில் தோன்றிய திரௌபதியைத் தோற்றது குற்றமென்று சொல்வது நீ அல்ல! கோபப் புகையில் மறைந்த உன் புத்திதான். "ஆடித்தோற்ற அடிமை என்றா தருமர் அண்ணா உனக்குத் தோன்று கிறார்? மூவுலகமும் ஆளப் புகழ் முடி சூடும் அவரைக் காண முடியவில்லையா?

"மனமாருந்துருபதனார் மகளைச் சூதுக்
களியிலே இழந்திடுதல் குற்றம் என்றாய்;
சினமானத் அறிவைப் புகைத்தலாலே
திரி லோக நாயகனைச் சினந்து சொன்னாய்."

வெளி நாடகம் உன்னை மயக்குகிறது. உள் உண்மையை உணரவில்லை. "தர்மமே தனி அரசு செய்யும்," என்பதை தலை விதித் தலைவன் காட்டு கின்றான். வெற்றி நமதே, அதற்கு உன் கனமான 'கதை' தேவையில்லை. எனது காண்டீபம் காத்திருக்கிறது.

"தருமத்தின் வாழ்வு அதனைச் சூது கவ்வும்
தருமம் மறுபடி வெல்லும் எனும்" இயற்கை
மருமத்தை நம்மாலே உலகம் கற்கும்.
வழிதேடி விதி இந்தச் செய்கை செய்தான்
கருமத்தை மேன் மேலும் காண்போம் இன்று
கட்டுண்டோம். பொறுத்திருப்போம் காலம் மாறும்
தருமத்தை அப்போது வெல்லக் காண்போம்;
தனு உண்டு! காண்டீபம் அதன் பேர்," என்றான்

வீணர்கட்கு விகர்ணனின் உபதேசம்,

''தந்தை இவன் இழந்து அடிமையான பின்னர்த்
தாரமேது? வீடேது? தாதனான
பின்னையும் ஓர் உடைமை உண்டோ என்று நம்மைப்
பெண்ணரசு கேட்கின்றாள் பெண்மை வாயால்
மன்னர்களே! களிப்பது தான் சூதென்றாலும்
மனு நீதி துறந்து இங்கே வலிய பாவம்
தன்னை இரு விழி பார்க்க வாய் பேசீரோ?
தாத்தனே! நீதி இது தகுமோ? என்றான்''

*பயமறியாத கன்றின் பாய்ச்சல்!*

*கர்ணனின் கட்டளை!*

மார்பிலே துணியைத் தாங்கும் வழக்கம் கீழ்
அடியார்க்கில்லை.
சீரிய மகளும் அல்லள்—ஐவரைக் கலந்த தேவி
யாரடா! பணியாள்! வாராய் பாண்டவர் மார்பிலேந்தும்
சீரையும் களைவாய்! தையல் சேலையும்
களைவாய் என்றான்

இங்கு ஒரு தேரோட்டி மகன் உள்ளான். அண்டிப் பிழைப்பவன். அவன் புத்தியைக் காட்டுகிறேன்.

மேலாடை மேல் அந்தஸ்தின் சின்னம்;

*பகைவர்களின் பயத்தை மதியாமல் துச்சம் என மனதில் எண்ணம்.*

*பாண்டவர்கள் செய்த காரியம்! திரௌபதியின் துயர்!*

இவ்வுரை கேட்டார் ஐவர், பணி மக்கள் ஏவாமுன்னர்
தெவ்வர் கண்டு அஞ்சுமார்பைத் திறந்தனர்,
துணியைப் போட்டார்.
நவ்வியைப் போன்றே கண்ணாள். ஞான சுந்தரி
பாஞ்சாலி
எவ்வழி உய்வோ மென்றே தியங்கினாள்.
இணைக்கை கோத்தாள்

பாண்டவர்கள் மார்புச் சால்வை அணிந்து பகைவர்கள் பயப்படாமைக்குப் வெறும் மான்கள் அல்வ. இவள் சரணாகதி செய்யப் போகும்; ஞானசுந்தரி மனக்கலக்கம்; உடனே துணிவு; செயல் இழந்ததைக் காட்டும் அரிய கதை

**திரெளபதியின் சரணாகதி**

பிரகலாத சரணாகதி அத்தாட்சி அவன் பேதை வயது. இவள் பெண் கணக்கில் காத்தது; நரசிம்மன் அல்லதாலும்

**''கம்பத்தின் உள்ளானோ? அடா காட்டுன்தா—**
**கடவுளைத் தூணிடத்தே**
**வம்புரை செய் மூடா என்று மகன் மிசை உறுமி**
**அத்தூண் உடைத்தான்.**
**செம்பவிர். குழலுடையாள்; அத்தத் தீயவல் இரணியன்**
**உடல் பிளந்தாய்!**
**நம்பி நின் அடி தொழுதேன்—என்னை நான்**
**அழியாது இங்கு காத்தருள்வாய்.**
**வையகம் காத்திடுவாய்! கண்ணா, மணிவண்ணா!**
**என்றன் மனச்சுடரே!**
**ஐய, நின் பத மலரே—சரண்**
**ஹரி, ஹரி, ஹரி, ஹரி, ஹரி..ஹரி, என்றாள்.**

**பொய்யர் தம் துயரினைப் போல்—நல்ல**
**புண்ணிய வாணர் தம்புகழினைப் போல்**
**தையலர் கருணையைப் போல் கடல் சல சலத் தெறிந்திடும்**
**அலைகளைப் போல்**

உலகையே காப்பவன் ஒருவனால் பெண்ணைக் காப்பாற்ற இயலாதா? என் மனதில் உன் பக்தியிருப்பதால் மனச்சுடரே பிறவிப் பெருங்கடல் பற்றினேன் பற்றற்றான் தாளினை

**பெண் ஒளி வாழ்த்திடுவார்—அந்தப் பெருமக்கள்**
**செல்வத்தில் பெருகுதல் போல்**
**கண்ணபிரான் அருளால்—தம்பி கழற்றிடக் கழற்றிடத்**
**துணி புதிதாய்**

வண்ணப் பொற் சேலைகளாம்! அவை வளர்ந்தன!
வளர்ந்தன! வளர்ந்தனவே!
எண்ணத்தில் அடங்காவே! அவை எத்தனை
எத்தனை நிறத்தனவோ,

திரௌபதி கதையைப் பாடும் பாரதி! பெருந்தடங்கண் பிறை நுதலார்க்கு எல்லாம் பொருந்தும் கல்வியும் செல்வமும் பூத்தலால் விருந்தும் அன்றி விளைவன பாடாயா. கண்ணனின் அருளும் வளர்ச்சியும் வார்த்தையும் வளர்கிறது.

பொன்னிழைப்பட்டிழையும்—பல புதுப் புதுப் புதுப் புதுப்
புதுமைகளா
சென்னியிற் கைகுவித்தான்—அவன், செவ்விய
மேனியைச் சார்ந்து நின்றே
முன்னிய ஹரி நாமம்— தன்னில் மூளு நற்பயன்
உலகறிந்திடவே!
துன்னிய துகில் கூட்டம்—கண்டு தொழும்பத்
துச்சாதனன் விழ்ந்து விட்டான்,

புடவைக்கடை அல்ல; கிடங்கையே காண்கிறோம். "இருகையும் விட்டேனோ" திரௌபதியைப் போல்! புடவை சுரந்தது திருநாமமிதே!

''வீமன் எழுந்துரை செய்வான் இங்கு
விண்ணவர் ஆணை! பராசக்தி ஆணை!
தாமரைப்பூவினில் வந்தான்—மறை
சுற்றிய தேவன் திருக்கழலாணை
மாமகளைக் கொண்ட தேவன்—எங்கள்
மரபுக்குத் தேவன் கண்ணன் பதத்தாணை.
காமனைக் கண்ணழலாலே -சுட்டுக்
காலனை வென்றவன் பொன்னடி மீதில்.

தொழும்படி விழ்ந்தாள். துடித்தவர் எழுகின்றனர். வீரசபதம் செய்கிறான் வீமன்! இந்த அக்ரமங்களை

எல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிற தேவர்களே! உங்கள் மீது ஆணை சக்தியே! நீயும் சக்தியற்று இருந்தாய்; துகில் உரிகையில், உன் மீது ஆணை! தலை எழுத்தை எழுதிய பிரம்மனே, உன் தலை விதியையே மாற்றி வைக்கிறேன்; தூதில் தோற்ற கண்ணா! மார்பிலேயே திருமகளை அணிந்த கண்ணா! கண்ணாலேயே சுட்டு வீழ்த்தும் சிவன் மீதும் ஆணைதான்!

ஆணையிட்டு இஃதுரை செய்வேன்! இந்த
ஆண்மையிலாத் துரியோதனனை
பேணும் பெருங்கனல் ஒத்தான்—எங்கள்
பெண்டு திரௌபதியைத் தொடைமீதில்
நாண் இன்றி 'வந்திரு' என்றான்—இந்த
நாய்மகளும் துரியோதனன் தன்னை
மாணற்ற மன்னர் கண்முன்னே—என்றன்
வன்மையினால் யுத்த ரங்கத்தின் கண்ணே!

நான் ஆணையிடுகிறேன். துரியோதனன் பெண் தான் என் முன் திரௌபதியையா விரும்பினான்; நெருப்பை அல்லவா மூட்டிவிட்டான். தன் தலைமீது தனக்குத் தானே கொள்ளி வைத்துக் கொண்டானே. தொடையிலே வந்திரு என்றானே. அதற்கு என்ன தண்டனை தருகிறேன் பாருங்களேன்.

தொடையைப் பிளந்து உயிர் மாய்ப்பேன்!—தம்பி
சூரத்துச் சாதனன் தன்னையும் ஆங்கே
கடைபட்ட தோள்களைப் பிய்ப்பேன்! அங்கு
'கள்' என ஊறும் இரத்தம் குடிப்பேன்!
நடைபெறும் காண்பீர் உலகீர் இது
நான் சொல்லும் வார்த்தை என்று
எண்ணிடல் வேண்டாம்
நடையற்ற தெய்வத்தின் வார்த்தை!—இது
சாதனை செய்க பராசக்தி என்றான்.

தொடையிலே அடி கொடுப்பேன்! அது உயிரே போகும் அடி. துச்சாதனச் சூரனே. புடவையைப் பற்றிய உன் தோள்களைப் பிய்ப்பேன்? ஒட்டடையைப் போல்! 'கள்' குடிப்பேன் ரத்தத்தையே தான். நான் ஏதோ, வீரியமா பேசுகிறேன்; பேசுவது நான் அல்ல; தடையற்ற தெய்வத்தின் வார்த்தை. வடமதுரையிலே மாற்றித்தருளிய கண்ணனையே காப்பாற்ற கம்சன் கை புகுந்து அவன் உள்ளத்தில் நெருப்பு வைத்தவனே!

பார்த்தன் எழுந்துரை செய்வான்—இந்தப்
பாதகக் கர்ணனைப் போரில் மடிப்பேன்!
தீர்த்தன் பெரும் புகழ் விஷ்ணு—எங்கள்
சீரிய கண்பன் கழல் ஆணை!
போர்த் தொழில் விந்தைகள் காண்பாய்; ஹே!
பூதலமே அந்தப் போதினில் என்றான்.

தருமத்தை மறுபடியும் வெல்லக் காண்போம்! என்ற பார்த்தனின் வார்த்தை? வீமன், துரியோதனனையும் துச்சாதனனையும் தன் பங்கிற்கு எடுத்துக் கொண்டான், துணியைக் களைவாய்! என்ற மூளை அலையை எழுப்பி யவன் கர்ணனை நான் முடிப்பேன். திரௌபதிக்கு முன் அர்ச்சுனன் சரணாகதி! சண்டையா, போரா? செய்யப் போகிறேன். போர்த்தொழில் விந்தைகளைக் காண்போம். பூதலமே! தயாராகிக் கொள்வாய் இவைகளைக் காண்பதற்கு!

தேவி திரௌபதி சொல்வாள்!—ஓம் தேவி பராசக்தி
தேவி பராசக்தி ஆணை யுரைத்தேன்
பாவிதுச் சாதனன் செந்நீர்—அந்தப்
பாழ்த்துரியோதனன் ஆக்கை இரத்தம்
மேவி இரண்டும் கலந்து—குழல் மீதினில் பூசி
நறு நெய் குளித்தே
சீவிக் குழல் முடிப்பேன், யான்—இது.
செய்யும் முன்னே முடியேன் என்று உரைத்தாள்,

பாஞ்சாலி சபதம் செய்கிறாள். நமது மத, புராணக் கதைகளிலே சபதம் செய்த பெண் இல்லை. இதைப் பாஞ்சாலி செய்தாள்! மாடு நிகர்த்த துச்சாதனனைத் தன் சரணாகதியால் வீழ்த்தியவள், சபதம் செய்கிறாள்.

இரு தைலங்களைக் கலந்து தன் கூந்தலைச் சீவி முடிப்பாளாம். பாவி துச்சாதனன். பாழ் துரியோதனன்; செந்நீர் அவிழ்த்தது; அவள் (திரௌபதி) முடித்தது. அக்ஷரவாச்சியனானவன் கண்ணன்.

ஓம் என்று உரைத்தனர் தேவர்—ஓம்
    ஓமென்றுசொல்லி உறுமிற்று வானம்.
பூமி அதிர்ச்சி உண்டாச்சு—விண்ணைப்
    பூழிப் படுத்திய தாம் சுழற் காற்று.
சாமி தருமன் புவிக்கே!—என்று
    சாட்சி உரைத்தன, பூதங்கள் ஐந்தும்!
நாமும் கதையை முடித்தோம்—இந்த
    நானிலம் முற்றும் நல் இன்பத்தில் வாழ்க!

கண்ணன் வீரச் சபதங்களை நிறைவேற்றினான்.

# அகம் தரும் அருளிச் செயல்கள்

ஸ்ரீ வைணவ சமயத்தை வளர்த்தருளிய ஆழ்வார்களின் பக்திப் பாடல்களை "அருளிச் செயல்கள்" என்று போற்றுகின்றோம். அகம் தரும் அருளிச் செயல்கள் என்ற மகுடம் மூன்று பொருள்களைத் தரும்.

முதலாவது, ஆழ்வார்களின் பாடல்களான அருளிச் செயல்கள், தம் நெஞ்சில் (அகத்தில்) நடுநாயகமாக வைத்து நமக்கு அருளும் கருத்துக்கள்.

அடுத்தது, நம்முடைய அகத்தில் (மனதில்) ஊன்றியுள்ள ஆசைகளை வெளியிடும் அருளிச் செயல்கள்;

கடைசியானது, சங்க காலத் தமிழர்கள் தங்கள் நூல்களை அகம் அல்லது அகத்திணை என்றும் புறம் அல்லது புறத்திணை என்றும் பிரித்தனர். அகத்திணைப் பாடல்கள் (அகநானூறு போன்றவை.) இவை தலைவன்—தலைவியின் இல்லறத் துறையைக் குறிக்கும்; புறத்திணைப் பாடல்கள் (புறநானூறு போன்றவை) இல்லத்திற்கு வெளியே நிகழும் போர், கொடை, பொருள் ஈட்டுதல் முதலியவற்றைக் குறிக்கும்.

ஸ்ரீ வைணவர்கள் தம்முடைய அகத்துறையிலே—இல்லறத் துறையிலே மேற்கொள்ள வேண்டிய கடைப்பிடிக்க வேண்டிய லட்சியங்களை, கொள்கைகளை அருளும் ஆழ்வார்களின் பாடல்களை, பிரபந்தங்களை, "அகம் தரும் அருளிச் செயல்கள்!" என்னும் பொருள் கொண்டு போற்றலாம்.

ஸ்ரீ வைணவ பரிபாஷையிலே பொதுவாக சுவாமிகள் வசிக்கும் இல்லத்தைத் திருமாளிகை என்றும், பாகவதர்கள் வசிக்கும் குடில்-இல்லத்தைக் ''குடிசை'' என்பதும் உண்டு. சிறப்பாக, நம் ஸ்ரீ வைணவர் மற்றுமோர் ஸ்ரீ வைணவருடன் உரையாடும்போது தமது இல்லத்தைக் ''குடிசை'' என்றும் மற்ற ஸ்ரீ வைணவரின் இல்லத்தைத் ''திருமாளிகை'' என்றும் கூறுவது உண்டு. இது தன்னைத் தாழ்த்தியும், பிறரை உயர்த்தியும் பேசும் மெச்சத்தக்க ஸ்ரீ வைணவ மனப்பான்மையை- உளப்பாங்கைக் குறிக்கும்.

திருமாளிகையிலோ, குடிசையிலோ, இல்லத்திலோ வசிக்கும் அனைவரையும் அருளிச் செயல்கள் ''தொண்டக் குலத்திலுள்ளீர்!'' என்று பாகுபாடு இன்றித் தொனி கொடுத்து அழைக்கின்றது. மற்றையவையெல்லாம் 'பண்டைக்குலம்!' தவிர்த்துக் கொள்ள வேண்டியவை.

இத்தொண்டக் குலத்திலுள்ள ஸ்ரீ வைணவர்கட்கு ஆழ்வார்கள் தமது அருளிச் செயல்கள் மூலம் அருளும் அக வாழ்க்கையை மேற்கொள்ளுவது முதல், காலன் குறுகுவது வரையிலான இல்லற வாழ்க்கையைக் கவனிப்போம். இனி பேசுவது அடியேனல்ல! ஆழ்வார்களே!

ஸ்ரீ வைணவ இல்லத்திலே கருத்தரிக்கப்பட்டது என்றால், அதை:

''மணி வயிறு வாய்த்தவனே!'' (பெருமாள் திருமொழி 10-8) என வரவேற்க வேண்டும்.

காரணம்: ஸ்ரீ வைணவக் கரு, கருப்பையிலிருந்தே:

''திருவரங்கத்துள் கிடந்து கை தொழுதேன்! கண்டேன்:
திருவரங்கம் மேயான் திசை!'' (முதல் திருவந்தாதி-6)

என்று கை கூப்பும்! கலியும்!

இதனையே ''ஜாயமான கடாட்சம்!'' எனச் சிறப்பிப்பார்கள்.

எதற்காக ஸ்ரீ வைணவக் கரு வாய்க்கின்றது! உலகத்தை உய்விப்பதற்காகவே!

''உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்!''

(பெ. திரு. 10-8)

ஸ்ரீ வைணவக் கரு! தாயைக் குடல் விளக்கம் செய்யும்! (திருப்பாவை-5)

இக்கரு,

''உலகனைத்தும் விளக்கும் சோதி! குலத்துக்கோர் விளக்கு!''

(பெருமாள் திருமொழி—10-1)

ஸ்ரீ வைணவக் கரு சிசுவாகிச் செகத்தினிலே செனித்த உடனே, நாம் செய்ய வேண்டியதென்ன! அதற்கு ஈசுவரன் பெயரிட்டு ஏத்த வேண்டும்! அக்குழந்தை மட்டுமா, அதனைக் குடலில் சுமந்து பெற்ற அதன் தாயும்கூட நரகம் புகமாட்டாளே!

''காசும், கறையுடைக் கூறைக்கும், அங்கோர் கற்றைக்கும்,
ஆசையினால் அங்கவத்தப் பேரிடும் ஆதர்காள்!
கேசவன் பேரிட்டு நீங்கள் தேனித் திருமினோ!

நாயகன் நாரணன் தம் அன்னை நரகம்புகாள் மேலும் விளக்கம்;

''மானுட சாதியின் தோன்றிற்று ஓர் மானுட சாதியை,
மானுட சாதியின் பேரிட்டால், மறுமைக்கில்லை!
வானுடை மாதவா! கோவிந்தா! என்று அழைத்தக்கால்,
நானுடை நாரணன் தம் அன்னை நரகம்புகாள்!''

நாலு நாளில் அழுங்கிப்போம் மானிடப் பேர்!

''நம்பி பிம்பி என்று நாட்டு மானிடப் பேரிட்டால்
நம்பும் பிம்புமெல்லாம் நாலு நாளில் அழுங்கிப்போம்!
செம்பெருந் தாமரைக் கண்ணன் பேரிட்டழைத்தால்
நம்பிகாள் நாரணன் தம் அன்னை நரகம்புகாள்''

**''மூத்திரப் பிள்ளைக்கு முகில்வண்ணன் பேர்**
**ஊத்தைக் குழியில் அமுதம் பாய்வதுபோல், உங்கள்**
**மூத்திரப் பிள்ளையை என் முகில்வண்ணன் பேரிட்டுக்**
**கோத்துக் குழைத்துக் குணாலம் ஆடித்திரிமினோ!**
**நாத்தகு நாரணன் தம் அன்னை நரகம்புகாள்!**

(பெரியாழ்வார் திருமொழி 4-6-1, 4, 8, 9)

நாரணன் பேர்களையும் நாடித் திரிய வேண்டுமோ! பன்னிரு திருநாமங்களாகப் பரவியுள்ளவையோ! பிறந்துள்ள புதியது எது? புதியவர் யார்?

கேசவன் தமர்!

இதற்கு உரிமை உடையவன் யார்?

நாரணன்! மூ ஏழ் உலகுக்கும் நாதன்!

அள்ளி அணைத்திடவே வந்துள்ள மாதவன்!

கன்னல் கட்டி! இது!

இது ஆடும் கூத்து; கூத்துக் கூத்து!

கோவிந்தன்! குடக் கூத்தன்!

ஆர் இவர் கொல்:

எம்பிரான் விட்டுவே!

கீழ்மேல் எழு பிறப்பும் தேசுடைய இவர்கள் பெறும் திருநாமங்கள்: மதுசூதனன்! திரிவிக்கிரமன்! செந்தாமரைக் கண்ணம்மான்! வாமனன்! என் மரகதவண்ணன்! சிரிதரன்! செய்ய தாமரைக்கண்ணன்! இருடீகேசன்! எம்பிரான் பத்பநாபன்! தாமோதரன்! தனி முதல்வன்.

இப்பன்னிரு நாமங்கள் தரும் பலன் என்ன?

''அண்ணல் தாள் அணைவிக்குமே!''

(திருவாய்மொழி 2-7-1 முதல் 10)

இங்கு நாம் பெறும் பலன்: அண்ணல்தான்!

முன்பு அருளப்பட்டது, தவிர்த்தல் வகையில், அதாவது "நாரணன் தம் அன்னை நரகம்புகாள்! சிக்கென வந்து பிறந்த நம் சிசுவுக்கும் திருநாரணன் திருநாமம் சாற்று வதினாலே, பெறுவதும் பெறாததும் பேசப்பட்டது.

ஸ்ரீ வைணவக் குடியில் தோன்றிய சிசுவைத் தொட்டி லில் இட்டல்லவா தாலாட்ட வேண்டும்!

"மன்னுபுகழ்க் கௌசலை தன் மணி வயிறு வாய்த்தவனே!...
(அவதாரம்)
தென்னிலங்கைக் கோன் முடிகள் சிந்து வித்தாய்! ..
(அவதார நோக்கம் பூர்த்தி)
கன்னி நன்மாம திள்புடை சூழ் கணபுரத்தென் கருமணியே!
என்னுடைய இன்னமுதே! இராகவனே! தாலேலோ!"

குழந்தை குலக்கொழுந்து! அமுது!

"கொங்குமலி கருங் குழலாள் கோசலை தன் குலமதலாய்!
தங்கு பெரும் புகழ்ச் சனகன் திருமருகா! தாசரதீ!
கங்கையிலும் தீர்த்த மலி கணபுரத்தென் கருமணியே!
எங்கள் குலத்தின்னமுதே! இராகவனே! தாலேலோ!"
(பெருமாள் திரு. முதல் 8-1-3)

இங்ஙனம் தாலாட்டி மகிழ்பவர்கள் பாங்காய பக்தர்களே!

தொட்டிலிடப்பட்ட குழந்தையைத் திருமாலின் அடியா ராக்கித் திருவிலச்சினை செய்தல் வேண்டும். இதனைப் பஞ்ச சம்ஸ்காரம் என்பர். அதாவது திருவாழி திருச்சங்கத் தைத் தோள்களிலும், திருவடியைச் சிரசின் மீதும் அமைத்தல்;

"சென்னி ஓங்கு தண் திருவேங்கடமுடையாய்! உலகு
தன்னை வாழ நின்ற நம்பி! தாமோதரா! சதிரா
என்னையுமென் னுடைமையையும், உன் சக்கரப் பொறி
பொறித்துக் கொண்டு
நின் அருளே புரிந்திருந்தேன்! இனி என்? திருக்குறிப்பே!"

திருவிலச்சினை பொறிக்கப்பட்ட ஸ்ரீ வைணவன் திருமாலுக்கு உகந்தவன் ஆவான்.

**பருப்பதத்துக் கயற் பொறித்த பாண்டியர் குலபதிபோல்**
**திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறிந்தாய்!**
**மருப்பொசித்தாய்! மல்லடர்த்தாய்! என்றென்றுன் வாசகமே**
**உருப்பொறிந்த நாவினேனை உனக்குரித் தாக்கினையே;**
(பெரியாழ்வார் திருமொழி 5-4-1,7)

சங்கொடு சக்கரம் ஏந்தி நிற்கும் ஸ்ரீ வைணவன்; வாழையடி வாழையாக வழுவிலா அடிமை செய்யும் குடியைச் சேர்வான்!

**''தீயிற் பொலிகின்ற செஞ் சுடராழி திகழ் திருச் சக்கரத்தின்**
**கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று குடி குடியாட்**
**செய்கின்றோம்!**
(திருப்பல்லாண்டு—7)

ஸ்ரீ வைணவனின் திருநெற்றியில் இலங்கும் இறைவனின் இணையடிகள் அவனுக்குக் காப்பாகவே அமைகின்றன! திருமண் காப்பு. முழுதலர்ந்த முளரி (தாமரை) ஒன்று இங்கிணை அடிகளைத் தாங்கி நிற்கின்றது.

''நெற்றியில் நின்று என்னை ஆளும் நிரை மலர்ப் பாதங்கள்'' (திருவாய்மொழி 1-9-10)

திருவிலச்சினை பொறிக்கப் பெற்ற ஸ்ரீ வைணவ திரு உள்ளத்தையே பனிக்கடலையும், பள்ளிகோளையும்விட மேலானதென்று உகந்து, திருமால் அதில் வாழ்கின்றான்.

**''பனிக்கடலில் பள்ளி கோளைப் பழகவிட்டு, ஓடிவந்தென்**
**மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பி!**
**தனிக்கடலே! தனிச்சுடரே! தனியுலகே என்றென்று**
**உனக்கிடமாயிருக்க ,வென்னை உனக்குரித் தாக்கினையே!''**
(பெரி. திரு. 5-4-10)

ஸ்ரீ வைணவச் சிறார்கள் ஆன்மீகத்தின் அடிப்படையில் இறை அறிவு தரும் கல்வி பெறுவார். புத்தகக் கல்வி தரும் அறிவிலே ஆன்மீகத்தை இழக்கமாட்டார்கள்!

''பள்ளியில் ஓதிவந்த தன் சிறுவன் வாயில் ஓர்
ஆயிரம் நாமம்
ஒள்ளிய வாகிப் போத'' (பெரி. திரு 2-3-8)

''மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா'' எனப் போற்றிப் பயிலாதவர்களைப் பற்றி என்ன சொல்லலாம்! அவர்கள் தங்கள் தாயர்களின் வயிற்றினில் தோன்றிய இரத்தக்கட்டிகளே.

''துற்றியேழுல குண்ட தூமணி வண்ணன்
தன்னைத் தொழாதவர்
பெற்ற தாயர் வயிற்றினைப் பெரு நோய் செய்வான்
பிறந்தார்களே?
(பெரி. ஆ. திரு. 4-4-2)

ஆனால் ஸ்ரீ வைணவ நற்குடியிற் பிறந்தோர்க்கு இங்ஙனம் நேராது. அவர்கள் பழிப்பிலார்; பல்லாண்டு கூறுவார்; ஏழு ஜன்மங்களில் (ஏழேழ் பிறப்புகளிலும்) அவர்கள், ''வாழாட்பட்டு நின்றவர்! ஏழாட்காலும் பழிப்பிலர்! இராக்கதர் வாழ் இலங்கை பாழாளாகப் படை பொருதானுக்குப் பல்லாண்டு கூறுவர். (திருப்பல்லாண்டு-3)

கருவிலே திருவுடையராகி, திருவிலச்சினை பெற்று இறை உணர்வின் அடிப்படையில் ஆன்மீக அறிவு பெற்ற ஸ்ரீ வைணவர்களின் சிறந்த இல்லறக் கடமைகள் யாவை?

நமக்கு ஈஸ்வரன் அளித்துள்ளவை பொறிகள் ஐந்து. (மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன) இந்த ஐந்து புலன்களைக் கொண்டு நாம் ஐந்து பெருங்கடமைகளை-வேள்விகளை நிறைவேற்றவேண்டும்!

வேள்வி ஐந்து! அல்லது கடமைகள், அந்த ஐந்து வேள்விகள் யாவை?

1. இறைவனுக்குப் புரிய வேண்டியவை...தெய்வம் (1)
2. முன்னோர்கள் திறத்து ஆற்ற வேண்டியவை... தென்புலத்தார் (2)
3. ஸ்ரீவைணவ ஆத்ம பந்துக்கள், அதிதிகள்பால் இயற்ற வேண்டியவை...விருந்து (3)
4. தேக பந்துக்களுக்குச் செய்ய வேண்டியவை... ஒக்கல் (4)
5. ஸ்ரீ வைணவரிடம் இறைவன் உறைவதாலும் மேற் கூறிய நான்கு வேள்விகளை இயற்றும் தன் திறத்தும் செய்து கொள்பவை...தான் (5)

1. 'தாமரைக் கண்ணான் உலகு' என்றதால், பரம பதத்தையும் 2. அடிஅளந்தான் தாயது (610) என்றதால் திருவிக்கிரம-வாமன அவதாரத்தையும் 3. (ஆதிபகவன் என்றால்) அனைத்திற்கும் ஆதிகாரணமான இறைவனை (ஸ்ரீமந் நாராயணனையும்)4. தாமரையினாள் என்றதால் இலட்சுமிப் பிராட்டியையும், திருக்குறளில் குறிப்பிட்டுள்ள பொய்யில் புலவராம் திருவள்ளுவரும் இந்த ஐந்து வேள்வி களையும் ஒருங்கே ஒரு குறளில் அமைத்தருள்கிறார்.

"தென்புலத்தார் 1. தெய்வம் 2. விருந்து 3. ஒக்கல் 4.
தான் 5. என்று ஆங்கு,
ஐம்புலத்து ஆறு ஓம்பல்தலை (46)"

ஸ்ரீ வைணவன் தனக்கு அளிக்கப்பட்டுள்ள ஐந்து பொறி களின் வழி வெளிப்படும் ஐம்புலன்களைக் கொண்டு, ஐம்பெருங்கடமைகளை வேள்விகளை எப்படி ஆற்றுவது என்று திகைக்கவேண்டா. இதற்காகத் தானே பரம கருணாமூர்த்தியான இறைவன் ஐந்து பூதங்களை (பெருஞ் சக்திகளைக் கொண்டவை)க் கொண்ட இப்பிரபஞ்சத் தையே படைத்துள்ளான். இந்த ஐம்பூதங்களும் அவைகளின் சேர்க்கையால் ஏற்பட்டவைகளும் தராத வசதியும் உண்டோ?

எனவே, பூதம் ஐந்தொடு பூரண சந்திரோதயமாக வெளிவரும் இப்பாடலின் தலைப்பகுதியைச் சேவிக்கலாம்.

"பூதம் ஐந்தொடு, வேள்வி ஐந்து புலன்கள் ஐந்து."

இவ்விதமாக இறைவனால் அளிக்கப்பட்ட ஐந்து புலன் களைக் கொண்டு, ஐந்து வேள்விகளையும் ஐம்பெரும் பூதங் களின் உதவி கொண்டு ஆற்றினால், என்ன அற்புதம் நிகழும்! மக்கள் தமது ஐந்து பொறிகளாலும் குற்றம் ஒன்றும் இல்லாதவர்களாகவும், வள்ளல் தன்மையுடையவர் களாயும், திருக்கோட்டியூரில்தான் வாழ்பவர்கள் உதாரணம்—வாழ்வார்களே!

"பொறியினால் ஏதம் ஒன்றும் இலாத வண்மையினார்கள்
வாழ் திருக்கோட்டியூர்!"

நினைத்த மாத்திரத்தில் இடரைத் தீர்க்கவல்ல நரசிம்மமூர்த்தியை நாதனாகக் கொண்டு, அவன் கீர்த்தி களை நாவினால் நவின்று பாடி ஆடும் ஸ்ரீ வைணவ இலட்சிய புருஷர்கள் பாதப்பொடிபட்டதனாலேயே இவ் வுலகம் சகல பேறுகளையும் பெறுமே!

"நாதனை நரசிங்கனை நவின்று ஏத்துவார்கள்
உழக்கிய
பாத தூளி படுதலால் இவ்வுலகம் பாக்கியம் செய்ததே!
(பெரியாழ்வார் திருமொழி 4-4-6)

நாவினால் கூட தீயவைகளைச் சொல்லாதே ஸ்ரீ வைணவர்கள் நிச்சலும் ஸ்ரீ வைணவ பாகவதர்களை ஆதரிப்பது கடமை.

"நா அகாரியம் சொல்லிலாதவர் நாள்தொறும்
விருந்து ஓம்புவார்!"

பஞ்சம் பரவினாலும், ஒரு காசக்கு ஒரு கைப்பிடி நெல் விற்றாலும் அத்தானியத்தைக் கொண்டு ஸ்ரீவைணவ பெரு மக்கள் ததீயாராதனைக் காரியத்தில் தவறமாட்டார் களாம்!

**'காசின் வாய்க்கரம் விற்கிலும் கரவாது**
**மாற்றிலி சோறிட்டுத்**
**தேசவார்த்தை படைக்கும் வண் கையினார்கள்**
**வாழ் திருக்கோட்டியூர்'**
(பெரியாழ்வார் திருமொழி (4-4-10)

*இது மிகச் சிறந்த இலட்சியம். இயன்ற வரை இயற்றல் ஸ்ரீ வைணவர்கள் கடமையாம்!*

*சுடராழி வலனுயர்த்த அந்நாரணனை நினையாத கல் நெஞ்சினர் பூமிபாரங்களே; அவர்களுக்கு இடும் அவ் வுணவை நீக்கி அவர்கள் வாயில் புல்லைத்தான் அடைக்க வேண்டும்.*

**''நேமி சேர்தடங் கையினானை நினைப்பிலா**
**வலி நெஞ்சுடைப்**
**''பூமிபாரங்க ளுண்ணும் சோற்றினை வாங்கிப் புல்லைக்**
**திணிமினே!''**
(பெரியாழ்வார் திருமொழி 4-4-5)

*நரகமே சொர்க்கமாகும் நம்பியின் நாமங்களை நவிலாத மானிடங்கள் அருந்தும் நீரும், அணியும் ஆடையும் பாவந்தான் செய்திருக்க வேண்டும்!*

**''நரக நாசனை நாவில் கொண்டழையாத மானிடச் சாதியர்**
**பருகுநீரு முடுக்கும் கூறையும் பாவம் செய்தன**
**மருவிய தாம் கொலோ!''**
(பெரியாழ்வார் திருமொழி 4-4-4)

*பெருமானை நினையாதவர்களை ஸ்ரீ வைணவர் ஒரு பொழுதும் நினைக்கலாகாதே!*

**துன்னார்ந்த கடல் மல்லைத் தல சயனத்து உறைவாரை**
**எண்ணாதே இருப்பாரை இறைப் பொழுதும் எண்ணோமே!**
(பெரி. திருமொழி 2-6-1

இறைவனது இணையடிகளை என்றும் எண்ணுபவர்களை எண்ண, 'எண்ணத்தேன் பெருகித் தித்திக்கும் ஸ்ரீ வைணவரின் உள்ளத்தில்!

கந்தப்பூ மலர்ச்சோலை தண்சேறை எம்பெருமான்
தாளை, நாளும்
சிந்திப்பார்க் கென்னுள்ளம் தேனூறி எப்பொழுதும்
தித்திக்குமே!

(பெரிய. திருமொழி 7-4-5)

வையத்துள் ஸ்ரீ வைணவனாக வாழ்வாங்கு வாழ விரும்புகின்றவர்கட்கு, அவர்களுடைய கடமைகளைத் திரட்டித் தரும் ஒரு கவி! பரமனடி பாடினால், நெய் வேண்டாம்! பால் வேண்டாம்! அவனே நெய்யும்! பாலும்! நாட்காலே நீராடினால் போதும், மை வேண்டா! மலர் வேண்டா! மேலையார் செய்யாதனவற்றைச் செய்தல் ஆகாது அவர்கள் ஓதாதவை தீக்குறளைகளே; எனவே அவைகளையும் ஓதலாகாது. வெண்பல் தவத்தினர்க்கும் பாகவதப் பெருமக்களுக்கும் இயன்றவரை உதவ வேண்டும் இதுவே ஆத்ம உய்வும்! உயர்வும். இவைகளே ஸ்ரீ வைணவ வாழ்வு முறை. ஸ்ரீ வைணவ வாழ்க்கையே ஒரு கைங்கரியச் சங்கிலிதானே!

"வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம்பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ! பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி!
நெய்யுண்ணோம்! பாலுண்ணோம்! நாட்காலே நீராடி!
மையிட் டெழுதோம்! மலரிட்டு நாமுடியோம்!
செய்யாதன செய்யோம்! தீக்குறளைச் சென்றோதோம்!
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமாறெண்ணி உகந்தேலோர் எம்பாவாய்"

(திருப்பாவை-2)

வாசுதேவனுடன் இணை பிரியாமல் வாழும் எத்தனை பிறவியும் வரவேற்க வேண்டியதே. அவனுக்கு அடிமை செய்யும் ஆசை ஸ்ரீ வைணவன் மனதில் புகுந்துவிட்டால் பிற ஆசைகளைத் தலைகாட்ட விடுவானா?

